# பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள்

முனைவர் அ.கந்தசாமி









உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள்

முனைவர் அ. கந்தசாமி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

[redacted]ழக் காவலர் தமிழ்க்குடிமகன் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(முனைவர் தமிழ்க்குடிமகன் பிறந்தநாள் சொற்பொழிவு வரிசை எண் 1)
நிறுவியவர்: திருமதி சா.ம. மெய்மொழி (ம) திரு. நாகை நாகராஜன்
நாள் 26.7.2013

---

## நூல்விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள் |
| ஆசிரியர் | : | முனைவர் அ. கந்தசாமி<br>தமிழ்த்துறைத் தலைவர்<br>காமராசர் கல்லூரி<br>தூத்துக்குடி |
| பொதுப் பதிப்பாசிரியர் | : | முனைவர் தி. மகாலட்சுமி<br>ஆய்வு அலுவலர்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 753 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2013 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 8+128 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 55/– (ரூபாய் ஐம்பத்தைந்து மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>144, தம்புச் செட்டித் தெரு<br>பாரிமுனை, சென்னை 600 001 |
| பாடம் | : | தமிழ் இலக்கியம் |


---

*அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று*

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில், பி.எட., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600113

# அணிந்துரை

ஈராண்டுகளில் நூறாண்டுச் சாதனைகள் புரிந்த தமிழ், தமிழர், தமிழினத்தின் வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றிவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

உலகம் தோன்றிய காலந்தொட்டு நாகரிக வளர்ச்சியின் உச்சத்தைக் கண்டவர்கள் சங்கத் தமிழர் என்பதை இலக்கியங்களின் வாயிலாக அறிய முடிகின்றது.

உலகம் கண்ட ஆறு நாகரிகங்களில் திராவிட நாகரிகம் முதன்மைத் தன்மையுடைத்து என்பதை உலக அறிஞர் ஏற்றுக் கொண்டுள்ளனர். இக்கருத்துக்கு ஒப்பப் **பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள்** எனும் இந்நூலின் ஆசிரியர், பேராசிரியர் முனைவர் அ. கந்தசாமி அவர்கள் பண்டைய வாழ்வியலின் அன்றாடத் தேவைகளான உணவு, உடை, உறையுள் போன்றவற்றை அழகு மிளிரக் கையாண்டுள்ளார். மேலும் தமிழர்தம் எழில்மிகு அணிகலன்கள், மானுட வளர்ச்சிக்கான தொழில்கள், பல்வேறு நிமித்தங்கள் முதலியவற்றில் உள்ள வாழ்க்கை நெறிமுறைகளைச் சங்க இலக்கிய எடுத்துக்காட்டு களுடன், மானுடத்திற்குப் பயன்படும் வகையில் செம்மையுடன் எடுத்துரைத்துள்ளார்.

நால்வகை நிலத்துக்குரிய மாந்தர்களைப் படிக்கும்போது படிப்போர் மனத்தில் நால்வகை நிலத்திற்குரிய தனித்தனிப் பண்பாடு, நாகரிகம் போன்றவற்றின் மாற்றங்களை நன்கு அறிந்துகொள்ள முடிகின்றது. பண்டைய இலக்கியத்தைத் தெள்ளிதின் உணர்ந்து வெளிப்படுத்தியுள்ள பாங்கு படித்து இன்புறுதற்குரியது. இது போன்ற நூல்கள் பலவற்றை ஆசிரியர் கொண்டு வரும் நிலையில் அது தமிழ் உலகுக்குப் பெரிதும் பயனுடைத்தாய் அமையும்.

உயர்வற உயர்ந்த சிந்தனையைத் தூண்டும் தொடர்ச்சியான தேடலுக்கு வழிவகுக்கும் இந்நூலினை எழுதிய பேரா. முனைவர் அ. கந்தசாமி அவர்கள் போற்றுதற்குரியவர். இந்நூலின் வெளியீட்டுப் பணிகளைச் செய்தமைக்காக இந்நிறுவன ஆய்வு அலுவலர் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களைப் பாராட்டுகின்றேன். இந்நூல் சிறந்த முறையில் வெளிவருவதற்குத் துணைபுரிந்தும் மெய்ப்புத்திருத்தியும் உதவிய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தன் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **மாண்புமிகு பள்ளிக்கல்வி, விளையாட்டுகள் மற்றும் இளைஞர் நலத்துறை அமைச்சர் முனைவர் வைகைச்செல்வன்** அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழக அரசின் **தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப.** அவர்களுக்கும் எமது மனமுவந்த நன்றி.

தனித்தமிழ்க் காவலர் முனைவர் தமிழ்க்குடிமகன் அறக்கட்டளைக்கான இக்கருத்தரங்கு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் அச்சாக்கத்திற்கு உதவிய நிறுவனத் தட்டச்சர் செல்வி ல. தீபிகா ஆகியோருக்கும் எம் பாராட்டுகள். இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ சரவணா அச்சகத்தாருக்கும் எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**



## ஆசிரியர் குறிப்பு

இந்நூலின் ஆசிரியர் முனைவர் அ.கந்தசாமி திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஆலங்குளம் வட்டத்தில் குத்தப்பாஞ்சான் என்னும் கிராமத்தில் பிறந்தவர்.

ஆரம்பப் பள்ளிப் படிப்பை ஆர்.சி. தொடக்கப்பள்ளி குத்தப்பாஞ்சானிலும், உயர்நிலைப்பள்ளிப் படிப்பைப் பேரன்புருக் மேல்நிலைப்பள்ளி பங்களாச் சுரண்டையிலும், இளங்கலைப் பட்டப்படிப்பைத் தூய யோவான் கல்லூரி பாளையங்கோட்டையிலும், முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டங்களை ம.தி.தா. இந்துக் கல்லூரி திருநெல்வேலியிலும் பயின்றவர்.

இவருடைய முனைவர் பட்ட ஆய்வுத் தலைப்பு "பண்டித மு.நல்லசாமியாரும் அவரது நூல்களும் (ஊத்துமலை ஜமீன் புலவர்கள்)" ஆகும்.

இவரது நெறியாளர் ம.தி.தா. இந்துக் கல்லூரி மேனாள் முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர் பேரா.முனைவர் பி.தெட்சிணாமூர்த்தி. இந்நூலாசிரியர் 172 எம்.ஃபில் மாணவர்களுக்கும், 18 முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கும் நெறியாளராக இருந்து வருகிறார். தமிழில் 34 ஆய்வுக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். உளவியலில் முதுகலைப் பட்டமும் (M.Sc.), "சங்க அகப்பாடல் காட்டும் உளவியல்" என்னும் தலைப்பில் மற்றுமொரு முனைவர் பட்ட ஆய்வையும் நிறைவு செய்துள்ளார்.

கல்லூரியில் 17 ஆண்டுகள் பணி அனுபவம் நிரம்பப் பெற்றவர். நாட்டு நலப்பணித் திட்டம், இளைஞர் செஞ்சிலுவைச் சங்கம், கல்லூரிப் பதிப்புத்துறை, விவேகானந்தா கேந்திரப் பணிகள், இளைஞர் நலம் எனப் பல்வேறு பொறுப்புக்களைத் திறம்படச் செய்து வருபவர்.

# பொருளடக்கம்

# என்னுரை

இலக்கியம் மக்களுடைய வாழ்க்கையினை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் என்பது இலக்கிய ஆய்வாளரின் எண்ணமாகும். வாழ்க்கையில் மனிதர் கண்ட ஆழ்ந்த அனுபவத்தையும் பேருண்மைகளையும் வெளியிடுவதும் இலக்கியமே. ஒவ்வொரு சந்தர்ப்பமும் சூழலும் முன்னர் வாழ்ந்த மனிதர்களை எவ்வாறு தாக்கின என்பதையும், அத்தாக்குதல்களின்போது அவர்கள் எவ்வாறு நடந்து கொண்டனர் என்பதையும் அறிவிக்கும் அனுபவ அறிவுக் கருவூலங்களாக இலக்கியங்கள் இலங்கின. வாழ்ந்து காட்டும் வாழ்க்கையைச் சொற்களாற் கூறுவதே இலக்கியமாகும்.

மக்களுடைய அன்றாட வாழ்வின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளுமே காலப்போக்கில் நாகரிகப் பண்பாட்டுச் செயல் முறைகளாக மாறிவிடுகின்றன. வேட்டைச் சமூகமாக இருந்த மனிதன் இனக்குழுச் சமூகமாக மாறி வந்தான். கால்நடைகளைத் தன் வசமாக்கிக் கொண்டு வேளாண் தொழிலை மேற்கொண்டான். தொழில்களுள் முதன்மையானது வேளாண் தொழிலாகும். போர், வெற்றி, வீரம், கொடை, உழவு, கையறுநிலை என்றுள்ள புறநானூறு பற்றிய செய்திகள் அனைத்தும் தமிழகத்தின் பண்பாட்டு வேர்களை அடையாளம் காட்டுபவையாக அமைகின்றன. மன்னரும், மக்களும் அடிப்படைத் தொழிலான உழவையும் அதன்மூலம் கிடைக்கும் உணவையும் உயர்வாகக் கருதினர்.

இல்லாதோர் விருந்தை நோக்கிச் செல்லுதலும் இருப்போர் விருந்தை எதிர்நோக்கி இருத்தலும் புறநானூறு வெளிப்படுத்தும் பழந்தமிழர்ப் பண்பாகும். பசியை நோயினைப் போக்குபவர் பசிப்பிணி மருத்துவர் எனப் போற்றப்பட்டனர். ஆடையில்லாத மனிதன் அரை மனிதன் என்பதைப்போல உணவில்லாத மனிதன் உயிரற்ற மனிதன் எனலாம். மக்களுக்குத் தேவையான அடிப்படைப் பொருள்களான ஊன், உடை, உறையுள் என்பவற்றில் உடையும், உறையுளும் இன்றிகூட உயிர் வாழலாம். ஆனால் உணவின்றி உயிர் வாழ்ந்தவர் இல்லை. மக்களின் அடிப்படைத் தேவைகளாக முன்னிறுத்தப்படுபவை உணவு, உடை, உறையுள், என்ற மூன்றும் ஆகும்.

மக்களின் அடிப்படைத் தேவைகளுள் உணவிற்கு அடுத்த நிலையினைப் பெறுவது உடையாகும். தழை, மரப்பட்டை போன்றவற்றை உடுத்திய ஆதிமனிதன் தன் தேடலால் விலங்குகளின் தோலினையும் உடுத்தலானான். பின்னர் நாகரிக வளர்ச்சியால் உந்தப்பட்டவன் நூலாடைகளை உற்பத்தி செய்யும் நிலைக்கு உயர்ந்தான். இருப்பிட வசதிகளை ஏற்படுத்திக்கொள்வதிலும், கட்டடக்கலையில் தொழில்நுட்பங்களைக் கையாளுவதிலும் கைதேர்ந்தவர்களாகப் பழந்தமிழர் விளங்கியுள்ளனர். கட்டடங்களின் உறுதிப்பாட்டிற்கு, மண்ணை அரைத்துப் (சிமெண்ட்) பயன்படுத்திய தொழில் நுட்பத்தினையும், செம்பைப் போன்ற வலுவான கோட்டைகளை அமைக்கும் செயல்திறனையும், ஓடிவரும் மழைநீரினைத் தேக்கிவைத்து வேளாண்மைக்குப் பயன்படுத்த,

அறையும், பொறையும் அமைந்த பகுதிகளை இணைத்து வளைந்த வடிவிலா அணைகள் கட்டும் உத்தியினையும் பழந்தமிழர் கைவரப்பெற்றுள்ளனர்.

சங்க கால மக்கள் பல்வேறு வகையான அணிகலன்களைப் பயன்படுத்திய வழக்கம் சங்க இலக்கியத்தால் புலனாகிறது. காலில் பொன்னாலான சதங்கை, இடுப்பிலே பொன்மணியிலான வடம், அதன்மேல் சிவந்த பவள வடங்கள் அவற்றின்மேல் பூந்துகில் கையில் அழகிய தொடி, வாள், மழு போன்ற அணிகளை நெருங்கக்கட்டி அதன் இரண்டு புறத்திலும் காளை உருவம் தாங்கிய பவளத்தால் செய்த அணி, முத்தும் பல மணிகளும் பிறவும் கோத்த மூன்று வடங்கள் அவற்றுக்குமேல் நீலப்பூப்போலச் செய்த மணிமாலை ஆகியவற்றைச் சிறுவர்க்கு அணிவித்து அழகு செய்தனர். புலிப்பல் தாலியைச் சிறார்க்கு அணிவித்தனர். மறவர் கால்களில் வீரக்கழல் அணிவதும் பெண்டிர் மெல்லடியில் சிலம்பணிதலும் வழக்கம்.

பழங்கால மக்கள் பல தொழில்களையும் செய்திருந்தனர். இவற்றில் மகளிர் சிறுதொழில் செய்து வாழ்ந்துள்ளனர். உழவுத் தொழில் என்பது மனித சமூக வாழ்வில் கண்டுபிடிக்கப்பட்ட அரிய முதன்மையான அறிவியல் ஆகும். மண்ணின் பயனை ஆக்கப்பணிக்கு மனிதன் உருமாற்றிய நாகரிகம் உழவுதொழிலாகும். பண்டை மன்னர்கள் தாங்கள் மண்ணைப் பெறும் பேற்றாக எண்ணினர். தன்னுடைய ஆட்சி சிறப்புற அமையவும் மக்களின் வாழ்வு மேம்படவும் உழவைக் காக்கப் புறநானூறு வலியுறுத்துகிறது.

பழந்தமிழர்களின் தொழில்களாக, வேளாண்மை, நெசவு, கட்டடத்தொழில், வணிகம், மீன்பிடித்தல், உப்பெடுத்தல், வளையல் அறுத்தெடுத்தல், மண்பாண்டத் தொழில், தச்சுவேலை, வேட்டையாடுதல், உலோகத்தொழில், கைவினைப்பொருள்கள் தயாரிப்பு (பொன், முத்து பவளம், போன்றவற்றால் மாலைகள் செய்தல், பொம்மை செய்தல், போன்றவை) கால்நடைவளர்ப்பு, தோல்பொருள் தயாரித்தல், முத்தெடுத்தல் போன்றவை இனங்காணப்படுகின்றன.

திருமணம் பேச முதியோர் செல்லுதல் பண்டைய வழக்கம், நன்னிமித்தம் பார்த்து, திங்களுடன் உரோகிணி சேர்ந்த நன்னாளில், விடியற்காலையில், மனையை அணி செய்து, விளக்கேற்றி, மாலைகளைத் தொங்கவிட்டு, மணமுழவும், முரசும், சங்கும் ஒலிக்கத் தலைவிக்கு மண நீராட்டினர்.

காக்கைக்குச் சோறு படைக்கும் பழக்கம் சங்க காலத்தில் பலியிடல் என்றே வழங்கப்பட்டிருக்கின்றது. தெய்வத்திற்குப் பலிகொடுத்தல் என்ற முறையில் காக்கைக்குச் சோறு படைத்தலும் பலியிடல் என்ற முறையிலேயே அமைந்திருக்கின்றன. பழந்தமிழரது நம்பிக்கைகள் மிகப் பரந்து பட்டவை. அவற்றுள் ஒன்று சகுனம் அல்லது நிமித்தம் பார்த்தல். நாளும் கோளும் பார்த்தலும், நல்லன அல்லன கண்டு நிமித்தம் பார்த்தலும் குறி கேட்டலும் நாட்டு மக்களின் வாழ்வோடு ஒன்றிப்போய் விட்டனவாகவே தோன்றுகின்றன.

# 1. சங்ககால உணவுப் பழக்கவழக்கங்கள்

பழக்கவழக்கம் என்று புழங்கும் தொடரே அவ்விரு சொற்களுக்கிடையே பொருள் வேறுபாடு உண்மையைப் புலப்படுத்தும். பழக்கம் என்பது ஒருவர் பழகிய முறை பற்றி வருவது. இப்பழக்கத்தின் விளக்கமாக,

*சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்*
*வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்*

எனும் வெண்பாவில் **கை நா** என்னும் புறத்துறுப்புக்களின் மேலும் **'மனம்'** என்னும் அகத்துறுப்பின் மேலும் பழக்கத்தை வைத்து, ஔவையார் தெளிவுபடுத்துவர். எனினும் அப்பாடலில் நட்பு, தயை, கொடை என்பவற்றைப் பிறப்பால் வருவன என்பர். ஒரு துறை தொழிலில் ஒருவனுக்குப் பயிற்சி அளித்தலைத் தொழில் பழக்குதல் என்று கூறும் வழக்கமும் உண்டு. வழக்கம் என்பது பலர் மேற்கொண்ட நடைமுறையால் அமைவது. உலக வழக்கு எனும் தொடர் அக்கருத்தைத் தெளிவுபடுத்தும். 'வழக்கறிய, வல்லார் நட்பு ஆய்ந்து கொளல்'[1] என்னும் குறளும் அதனை வலியுறுத்தும் சில பழக்க வழக்கங்கள் நம்பிக்கைக்குக் காரணமாய் அமைவதுண்டு.

தமிழகத்தே வாழ்ந்த நானில மக்களின் தொழில்முறை உணவு ஆகியன, அரசர், அந்தணர்களின் தொழில் முறை, பண்டையோரின் விருந்தோம்பல் நீராடல், ஒப்பனை, நாழிகை வட்டிலால் பொழுதறிந்து அறிவித்தல், பொழுதிற்கேற்பப் பண்பாடுதல், குரவைக் கூத்தாடுதல், வடக்கிருத்தல், நடுகல், முதுமக்கள் தாழி, வாழ்த்துரைத்தல், ஏறுதழுவல், சிலம்புகழி நோன்பு, மலர் அணிதல், திருமணநாள் முதலியன பற்றிய பழக்க வழக்கங்கள் இங்கு எடுத்தாளாப் பெறுகின்றன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலத்தில் வாழ்ந்த குறவர், இடையர், உழவர், பரதவர் என்போரின் தொழில், உணவு பழக்க வழக்கங்களைச் சங்க இலக்கியங்களின் துணை கொண்டு அறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

4

## குறவர்கள்

மலைவாழ்நர், தினைவிளைக்கும் புனத்திலே ஊடு பயிராகப் பருத்தியையும் அவரையையும் விதைத்துப் பயன் கொண்டனர். தினைக் கதிரைக் குருவி, கிளி முதலியன கவராதிருக்கக் குறமகளிர் பரண் மீதிருந்து கவண் எறிவர். அங்கிருந்தே கொள்ளிக்கட்டையைக் காட்டி விலங்கினங்களை விரட்டுதலும் உண்டு. "காவன்மையால் பலாக்கனிகளைக் குரங்குகள் கவர்ந்து செல்வது கண்டு, விழித்தெழுந்த கானவர், மரங்கள் தோறும் வலைமாட்டிக் கனி காத்தனர்",[2] விளைவு மிகுதியால் பகலிலேயே அறுவடையை முடிக்க முடியாததால், உழவர்கள் இரவிலும் வேலையை நீட்டிப்பது வழக்கம், அப்பொழுது விலங்குகளால் ஊறு நேரா வண்ணம் தொண்டகப்பறை முழக்குவர்."சிறுதினை விளைந்த வியன்கண் இரும்புனத்து இரவரி வாரின் தொண்டகச் சிறுபறை பானாள் யாமத்துங்கறங்கும்"[3]

குரங்காலும் ஏற முடியாத உயரிய மலையில், நிலையாக நட்டு வைத்த கண் ஏணி வழி ஏறிக் கானவர் தேனிறால் எடுத்தல் வழக்கம். குறமகளிர் மூங்கில் நெல்லைப் பாறையில் அமைத்த உரலில் பெய்து, யானைக் கொம்பை உலக்கையாகக் கொண்டு குற்றி, சேம்பு இலையாகிய சுளகால் புடைத்து. வள்ளைப்பாட்டுப்பாடி மகிழ்வர்.[4]

பாகனது தோட்டிக்கு அடங்காத யானை யாழிசைக்கு அடங்கும்.[5] அதுபோலவே கொடிச்சி தினைப் புனைத்துப் பரணில் தங்கி, மலைக்காற்று கூந்தலில் வீச, தன் கையால் அதனைக் கோதிக் கொண்டு உவகையுடன் குறிஞ்சிப் பண்ணை இனிது பாட, தினை மேய வந்த களிறு, கதிரையும் கொள்ளாது நின்ற நிலையினும் பெயராது கண்ணயரும்.[6] இந்நிகழ்ச்சி கானவர்தம் இசைத்திறனைக் காட்டுவதோடும், இசைக்கு விலங்குகள் மயங்கும் பெற்றியன என்பதையும் காட்டுகிறன.

குறவர்கள் தேனையும், கிழங்கையும் விற்றுப் பண்ட மாற்றாக, மீனையும், நெய்யினையும், நறவையும் பெறுவர். உடும் பிறைச்சியோடு, கடமான் தசை, முள்ளம் பன்றியின் ஊன், மூங்கிற் குழாயில் ஊற்றி வைத்த தேனின் தேறல், நெல்லாற் செய்த கள் புளிப்பழச் சுவையுடன் மோரை உலையாக ஏற்றி ஆக்கிய மூங்கில் அரிசிச்சோறு. பலா விதையின் மாவு ஆகியவற்றை நல்கி மலைவாழ்நர் விருந்தோம்புவர்.[7]

## இடையர்கள்

குறிஞ்சி நிலத்திற்கும் மருத நிலத்திற்கும் இடைப்பட்ட முல்லை நிலத்தில்வாழ் மக்கள் இடையர் எனப்பட்டனர். நிலம் காரணமாக இடையர் எனப்பட்டவர், ஆநிரை மேய்க்கும் தொழில் காரணமாக ஆயர் எனவும் கோவலர் எனவும் பெயர் பெற்றனர், அவர் ஆநிரை மேய்க்கச் செல்லும்போது, உணவு சமைக்கவும் விலங்கினத்தின் தீங்குகளையவும் தீக்கடை கோல், உரி, பானை, தோற்படுக்கை, தண்டு முதலியன உடன் எடுத்துச் செல்வர்.[8] ஆட்டு மறியைப் பற்ற வரும் நரி, ஓநாய் முதலியவற்றைச் சீழ்க்கை ஒலியால் விரட்டுவர், மாடு மேய்க்கும்போது வேய்ங்குழல், கொன்றையந்தீங் குழல், ஆம்பலந்தீங்குழல் முதலியவற்றை இசைத்துச் செல்வது அவரது வழக்கம், உணவினைச் செறித்து வைத்த மூங்கிற் குழாயினை, ஏற்றின் கழுத்தில் பூட்டி, எடுத்துச் செல்வது வழக்கம், அங்ஙனம் சமைத்துச் சென்ற உணவைப் பசிமிகுதியால் காதடைத்து நிற்கும் ஒக்கலுடன் தேக்கிலையில் வைத்துச் சாப்பிடுவர்.

மழவிடைப் பூட்டிய குழா ............ கோவலர் "ஆய்த்தீம்புளி செவியடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்"[9]

மோர் விற்கும் ஆயமகள், அதற்கு நிகராக நெல் முதலியன பெற்றுச் சுற்றம் ஓம்பினாள், நெய் விலை பொருளால் பசும்பொன் வாங்கக் கருதாமல் பொருள் நிலை வளர்ச்சி கருதிப் பால் எருமையையும் நல்லானையும் கரிய எருமை நாகினையும் வாங்கினாள். ஏறு தழுவுவதற்கு அஞ்சும் வீரமிலாதவனை ஆயமகள் இம்மையேயன்றி மறுமையிலும் தழுவ விழையாள்.

> "கொல் ஏற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்
> புல்லாளே ஆயமகள்" [10]

முல்லை நிலத்தில் வாழ்ந்த மகளிர், அட்ட இன்புளி வெண்சோறு ஆமானிறைச்சி ஆகியவற்றைப் படைத்து விருந்தோம்புவர், மேட்டு நிலத்தில் விளைந்த செந்நெல் சோற்றையும் நாய் கொண்டு வந்த உடும்பின் பொரியலையும் விருந்தினர்க் களிப்பர்.[11]தினையரிசிச் சோற்றைப் பாலுடன் வழங்கலும் வரகுச் சோற்றை அவரை விதைக் குலுக்கலோடு அளித்தலும் முல்லை நில மக்களின் இயல்பு.[12]

## உழவர்

மருத நிலத்தில் வேளாண் தொழில் செய்த மக்கள் உழவர் ஆவர். நெல் அறுவடைக்குப் பின் மறுபடி உழுத ஈர வயலில் விதைத்த பின், விதை எடுத்துச் சென்ற கூடையில் நிறைய மீன் கொணர்வர்.[13] அக்கூடையில் மலரை நிரப்பி வருதலுமுண்டு,[14] நெல் அறுவடை செய்யும் போது, வழக்கப்படி தண்ணுமை முழக்கம் ஒலிகேட்டுப் பறவைகள் அஞ்சியோடும்.[15] கள் சுமந்து வரும் சகடம் சேற்றில் சிக்கித் தடைப்படின், உழவர்களின் பக்கத்திலிருந்து கொணர்ந்த கரும்பை அடுக்கிச் சேற்று வழியைக் கடப்பர்.[16] வயலில் நீர்ப் பெருக்கால் உடைப்பு ஏற்படின், அதனை உழவர்கள் மீனால் அடைப்பர். இது நீர் வளத்தையும், மீன் வளத்தையும் காட்டும்.[17] நெல்லை அளவிடும் போது, குறிப்பிட்ட எண்ணிக்கை வந்தவுடன் 'ஒரு பிடி' நெல்லை வைத்து அதனை 'உறை' என்பர். முடிவில் உறைகளின் எண்ணிக்கையைக் கொண்டு நெல்லின் அளவைக் கணக்கிடுதல் வழக்கம். தேனிறாலுக்கு உவமை கூற வந்த அரிசில் கிழார், செந்நெல்லின் அம்பண அளவை உறை குவித்தாங்கு என உறை வைத்தலை உவமை கூறுவதன் வாயிலாக அதனை விளக்குவர்.[18]

மருத நிலப்பகுதிக்குச் செல்லும் பாணர்கள், அரிசிச் சோற்றையும் நண்டும் பீர்க்கங்காயும் சேர்த்துச் சமைத்த கலவையையும் உணவாகப் பெறுவர்.[19] பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு முதலியவற்றை உண்டு வெறுத்தால், வள்ளிக்கிழங்கு முதலிய பிற உணவுப் பொருள் அவர்களுக்கு வழங்கப்பெறும்.[20] முளையால் ஆக்கிய கள்ளையும், நெற்சோற்றையும் இறைச்சியோடு தந்து விருந்தோம்புவர்.[21] நெல்முளையையும் கொழியல் அரிசிக் கூழையும் சேர்த்துச் சமைத்த நறுங்கள்ளைச் சுட்டமீனுடன் தருவர்.[22] இடித்த நெல்லரிசி மாவைத்தின்னச் செய்து பல நாள் குழியில் நிறுத்திப் புணர்ச்சிக்குப் புறம் போகாது வைத்திருந்த ஆண்பன்றியின் நிணமும் கள்ளும் தந்து விருந்தோம்புவர்.[23]

கைக்குத்தல் அரிசிச் சோறு, மாங்கனி, வரால் மீன் துண்டம், சுறாமீன் இறைச்சி, வள்ளைக்கீரை, பாகற்காய் ஆகியவற்றைச் சேர்த்துச் சமைத்த உணவை உண்டு, கள் மிகுதியால் மயங்கின், காலையில் பழஞ்சோறு உண்பர்.[24]

பனிக்காலத்தில் வெந்நீரைச் சேமச் செப்பில் வைத்திருந்து பருகுதல் உண்டு.

அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇலரோ நீயே[25]

தேறல், கந்தாரம், நறவு, தோப்பி, அரியல், வேரி, மட்டு, பிழி என்றும் கள்ளின் வகைகளை மருதநிலத்து மாந்தரேயன்றிப் பிறநிலமக்களும் பருகினர்.

உழவர்கள் பிறரிடம் கரும்பும் அவலும் கொடுத்துப் பண்ட மாற்றாக மான் தசையும், கள்ளும் பெற்றனர்.

## பரதவர்

மீனவ மகளிர் தந்தையார் கொணர்ந்த கொழுமீன் உணங்கலைக் கவரவரும் பறவைகளைக் கடிந்து, பின் புன்னை நிழலில் உறைவர். நண்டின் வளையைத் தோண்டுவர், ஞாழல் மரக்கிளையில் தொடுத்தாழை விழுதாலாய கயிற்றூசலில் ஆடுவர், உப்பு மேட்டில் ஏறிக்காயும் மீனைக் கவரவரும் பறவைகளை ஒட்டுவர், உமண மகளிர் ஆயத்தாருடன் 'இது எந்தையின் மீன்படகு', 'இது நுந்தையினது' என்று சுட்டி எண்ணுவர்.[26]

சுறவுக்கோடு நட்டு அதில் தெய்வம் தங்கியிருப்பதாக எண்ணி வழிபடுதல் பரதவர் வழக்கம்,[27] தீவினை போகக் கடலாடியும் உப்புப் போகப் புனல்படிந்தும் உவப்பர், உவா நாள்களில் (முழுமதி, இருள்மதி) பரதவர் மீன்பிடிக்கச் செல்லாது மகிழ்ந்துறைவர்.

பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது
உவவு மடிந்து உண்டாடியும்[28]

உப்பு ஏற்றில் சகடம் மேடுபள்ளத்தில் செல்லுங்கால், இடர்ப்பாடு நேரும் எனக் கருதிப் பரதவர் வண்டியில் அச்சுமரத்தை அடுத்துச் சேம அச்சு ஒன்றையும் பொருத்திச் செல்வர்.[29] பரதவர் இரவில் மீன்பிடிக்கப் படகிற் செல்லும் போது, விளக்கேற்றிச் செல்வது வழக்கம்.

நலங்கிள்ளியின் படைப் பெருக்கத்தைப் புனைந்த ஆலத்தூர் கிழார், படையின் முன் செல்லும் தூசிப்படையினர் பனைப்பின் நுங்கினை உண்டதாகவும், இடையோர் பனங்கனியினை உண்டதாகவும் கடையோர் பனையின் சுடுகிழங்கினை உண்டதாகவும் கூறுவர். நுங்காயிருந்து கிழங்காய் மாறும்வரை, படை பல திங்கள் அணிவகுத்துச் சென்றமையை உய்த்துணருமாறு செய்த கற்பனை அறிவுக்கு நல்விருந்தாகும்.

தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர் விடுவாய்ப் பிசிரோடு சுடுகிழங்குநுகர. [30]

நுங்கு, கனி, கிழங்கு ஆகியவற்றை உணவாகப் பயன்படுத்திய வழக்கம் இதனாற் புலனாகும். கடலில் மீன் பிடிக்கச் சென்று தங்கிய தந்தையர்க்கு, உப்பு விற்ற நெல்லினால் சமைத்த வெண் சோற்றுடன் அயிலை மீனிட்டுச் சமைத்த புளிக்கறியையும், கொழுமீன் இறைச்சியையும் பரதவ மகளிர் உணவு படைப்பர், செம்படவர் உப்பைச் சமவிலைக்கு விற்றுப் பண்ட மாற்றாக நெல் வாங்குவர்.

## பாலையில் ஆறலைக் கள்வர்

வழிப்பறி கொள்ளையரே ஆறலைக் கள்வர் எனப்படுவர். அவர்கள் வன்னெஞ்சக் கொடியவர்கள், பாலைக் கலியில் அவர்தம் வன் செயல்கள் தெள்ளிதின் புலப்படுத்தப்படுகின்றன. வழிப்போக்கர் தம் சோர்பதம் பார்த்து, ஆறலைக் கள்வர் அவரிடம் பொருள் ஒன்றும் இல்லையாயினும், வறிதே விடாது கொன்றன்ன இன்னா செய்வர். அங்ஙனம் செய்யக் காரணம் அவர்கள் துடிதுடித்து இன்னலுறுவதைக் கண்டு களிப்பதற்கே.

அற்றம்பார்த்து அல்கும் கடுங்கண் மறவர்தாம்
கொள்ளும் பொருளிலர் ஆயினும், வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின். [31]

பாலைவழியே செல்பவரிடம் கைப்பொருள் இல்லையாயினும் அவரை உயிர் பறிக்காது விடுத்த தவற்றுக்குக் கள்வர் தலைவன் தண்டனை விதிப்பதுண்டு, கள்வன் செய்த அப்பிழைக்குத் தலைவன் தண்டனையாக யானை மருப்பும் புலித்தோலும் கொணருமாறு பணித்தமையை அகநானூறு அறிவிக்கின்றது.

கைப்பொருள் இல்லை ஆயினும், மெய்க்கொண்டு
இன்னுயிர் செகா அர் விட்ட கல் தப்பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரியதள் இறுக்கும்
அறனில் வேந்தன். [32]

## மது அருந்துதல்

நானில மக்களும் உணவுடன் கள்வகைகளைப் பருகியது, பெருவழக்காக இருந்தமையைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

குடிவகைகளுள் தேறல், நறவு, தோப்பி, அரியல், கந்தாரம் , பிழி, வேரி, மட்டு முதலிய பெயர்கள் காணப்படுகின்றன. அரும்பு, தேன், கள், இவற்றிலிருந்து தேறலையும் நெல்லிலிருந்து தோப்பியையும். பனை, தேனிறால், பலா ஆகியவற்றிலிருந்து பிழியையும் பெற்று மகிழ்ந்தனர். இஞ்சியாலும், மலராலும் தொடுக்கப் பெற்ற மாலையைக் கட்குடத்தின் கழுத்தில் கட்டியும் பானையில் சந்தனத்தை அப்பியும் வைத்தல் வழக்கமாகும், காரணம் மிகுதியாகக் குடிக்க இஞ்சியும், கள்நாற்றம் போக்க மலரும் சந்தனமும் பயன்படுத்தப்பட்டன. கள் விலைக்காக யானைக் கொம்பினைக் கொடுத்தனர். ஆம்பல் இலையும் பனங்குடையும், கள்குடிக்கப் பயன்பட்டன. மயக்கம் மிகவும், மகிழ்ச்சியில் திளைக்கவும், மது வகைகளை மாறி மாறிக் குடித்தமைக்கு, பாலைப் பண்களை யாழ்வல்லோன் மாறி மாறி இசைத்தமை உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

> தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
> பையுள் உறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
> சேறு செய் மாரியின் அளிக்கும்.[33]

## பண்ணியங்கள் அளித்தல்

விருந்தினர்கள் ஊனும் உணவை வெறுத்தால், பால் கலந்து செய்தனவும் வெல்லப்பாகு கொண்டு செய்தனவும் ஆகிய இனிய பண்ணியங்களைப் புரவலர்கள் தந்து அவர்களை இன்புறுத்துவர். இரவில் வாயிற்கதவை அடைக்கும்முன் உண்ணும் விருந்தினர் உளரா எனப் பார்த்துக் கதவடைத்தல் பண்டை வழக்கம்.

> பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்
> வருவீர் உளீரோ எனவும்
> வாரலர் தோழி 'காதலோரே'[34]

இப்பாடல் விருந்தோம்பலின் உயர்வையும் வழக்காற்றையும் புலப்படுத்துகிறது. விருந்து இரவில் காலங்கழித்துவரினும், மனமகிழ்ந்து ஏற்று ஓம்பினர், குறவர் மகளிர் உயர்திணைக்கேயன்றி, மந்தி முதலிய அ·றிணை உயிர்க்குப் பலாக்கனி முதலியவற்றை அளித்து விருந்தயர்ந்தனர்.[35]

## உணவு வழங்கும் வழக்கம்

அடிப்படைத் தேவைகளுள் முதன்மையானதாகிய உணவின் தேவையைப் பழந்தமிழர் நன்கு உணர்ந்திருந்தனர். 'உண்டி

கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே'[35] என்று போற்றினர். இல்லாதோர் விருந்தை நோக்கிச் செல்லுதலும் இருப்போர் விருந்தை எதிர்நோக்கி இருத்தலும் புறநானூறு வெளிப்படுத்தும் பழந்தமிழர்ப் பண்பாகும். பசியைச் நோயினைப் போக்குபவர் பசிப்பிணி மருத்துவர் எனப் போற்றப்பட்டனர். இதனை,

**'பசிப்பிணி மருத்துவ னில்லம்**
**அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே'[36].**

என்ற அடிகள் காட்டுகின்றன. வந்த விருந்தினர்க்கு உணவளித்து, இன்னும் விருந்துவரக் காத்திருக்கும் பண்பை,

**'விருந்தெதிர் பெறுகதில் யானே'[37]**

என்ற அடி உணர்த்துகிறது. விருந்தென்று வருவோர்க்கு இல்லை என்று சொல்லாமல் தன்னிடம் இருப்பதைக் கொடுத்து அவர்களின் பசியைப் போக்குதலும், விருந்தினர் உண்டபின்பே தாம் உண்பதும் பண்டைத்தமிழர் பண்பாகிறது.

புறநானூற்றில், கணவன் வீட்டில் இல்லாத பொழுதும், வீட்டில் இருப்பதைக் கொண்டு தலைவி விருந்து உபசரிக்கும் பண்பும்[38], தன்னிடம் விருந்து உபசரிக்க எந்தப் பொருளும் இல்லாத நிலையில் தன்னுடைய வாளைப் பணயம் வைத்து விருந்து உபசரித்த வீரனின் பாங்கும் காட்டப்படுகின்றன.[39].

நாட்டில் உணவுத் தட்டுப்பாட்டைப்போக்க வறியவர்களுக்கு உணவிட்டால் மட்டும் போதாது, அவ்வுணவை அனைவரும் பெறும் வழிவகைகளை ஆராய்ந்து அவற்றைப் பெருக்க வேண்டும். இந்நிலையே தொலைநோக்காக அமைகிறது. அவ்வகையில், உணவுத் தேவையினை நிறைவு செய்ய, வேளாண்தொழிலினைப் பெருக்குவதே சிறந்த வழி என்பதைப் பழந்தமிழர் நன்கு உணர்ந்திருந்தனர்.

நாட்டின் இயற்கை வளங்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்படும் தொழில்களுள் முதன்மையானது வேளாண் தொழிலாகும். சமுதாய வறுமைநிலையினைப் போக்கவும், மக்களின் அடிப்படைத் தேவைகளில் முதன்மையானதாகிய உணவின் தேவையை நிறைவு செய்யவும் வேளாண் தொழில் இன்றியமையாததாகிறது. வேளாண் தொழிலே மற்ற எல்லாவற்றிற்கும் அடிப்படை என்பதைப் பழந்தமிழர் நன்கு உணர்ந்திருந்தனர். வேளாண் தொழிலுக்கு அடிப்படை ஆதாரம் மழைநீராகும். இம்மழை நீரினைச் சேமிக்கக் குளங்கள், அணைகள், ஏரிகள் போன்ற நீர்

நிலைகளை ஏற்படுத்துதல், வேளாண் தொழிலில் தொழில் நுட்பத்தினைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்குதல், தரிசு நிலங்களைப் பண்படுத்துதல், பலவித பயிர்களை விளைவித்தல், மானாவாரி பயிரிடுமுறையைக் கையாளுதல் போன்ற பல்வகைச் செயல்பாடுகள் பழந்தமிழரிடம் காணப்பட்டன.

## நெல் விளைவித்தல்

ஒரு நாட்டின் வளமான நிலைக்கும், சிறந்த ஆட்சி முறைக்கும், வீரர்கள் போர்க்களத்தில் வெற்றியை ஈட்டி வருவதற்கும் அடிப்படையாக அமைவது உழுது விளைவித்த நெல்லின் பயனே. ஆதலால், ஏரைக் காப்பவரின் குடியைக் காப்பதே நல்லரசின் கடமையாகும் என்பதை,

> ‘வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
> பொருபடை தருஉங் கொற்றமும் உழுபடை
> ஊன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே
> ..........................................................................
> பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
> குடிபுறந் தருகுவை’[40]

என்ற புறநானூற்று அடிகள் காட்டுகின்றன. இவ்வாறு உழவுத் தொழிலின் முக்கியத்துவத்தை உணர்த்தியதோடு, அத்தொழிலில் பல தொழில்நுட்பங்களையும் கையாண்டுள்ளனர். தரிசு நிலங்களைப் பண்படுத்தவும், நிலத்தினை ஆழ உழவும், களைகளை எடுக்கவும், தானியங்களைப் பிரித்தெடுக்கவும் கருவிகளையும் இயந்திரங் களையும் பயன்படுத்தியுள்ளனர்.

கார்காலத்தில் பெய்த மழையின் ஈரம் உலர்வதற்குள் நிலத்தைப் பலமுறை உழுவர். நன்செய் நிலமாயின் அந்நிலத்தை உழும்போது ஏற்படும் கட்டிகளைக் களைய உடைக்க தளம்பு என்ற ஒருவித கருவியையும், அவ்வாறு நிலத்தைப் பண்படுத்தி விதைத்த பயிரில் களையெடுக்க, பல கிளைகளையுடைய ஒரு விதக் கலப்பையையும் பயன்படுத்தியுள்ளனர். அதோடு, விளைந்த கரும்பிலிருந்து சாறினைப் பிரித்தெடுக்க கரும்புபிழி எந்திரம் கையாளப்பட்டதையும் புறநானூறு காட்டுகிறது.

> ‘மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட’

என்பதில் ‘தளம்பு’ கருவியையும்,

'பூழி மயங்கப் பலவுழுது வித்திப்
பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்
களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி'[41]

என்பதில் 'பல்கிளைக் கலப்பையையும்,

'கரும்பி னெந்திரஞ் சிலைப்பி னயலது'[42]

என்பதில் கரும்பு பிழி எந்திரத்தையும் காணலாம்.

இத்தகையத் திட்டமிட்ட செயல்பாடுகளாலும், தொழில்நுட்ப உத்தியாலும் உணவின் தேவையை வேளாண்மக்கள் நிறைவு செய்ய முயன்றதோடு, தன்னை நாடி வருவோரையும் உணவிட்டுக் காக்கும் வல்லமை பெற்றவராகவும் சமூகத்தில் விளங்கினர். என்பதை,

'ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ'[43]

என்ற அடி காட்டுகிறது. மேலும், இவ்வகையான தொலைநோக்குச் செயல்பாடுகளால், பழந்தமிழர்,

'வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை'[44]

வாழ்ந்தனர் என்பதும் புலனாகிறது.

உணவு குறித்த இலக்கியச் சான்றுகள் சங்க இலக்கியங்களில் உள்ளன. தானியத்தைப் பெற்று உணவு சமைத்து உண்டதைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுகிறார்.

'நள்ளிருள் விடியல் புள்ளெழுப் போகிப்
புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி
ஆம்பி வான்முகை யன்ன கூம்புமுகிழ்
ஊறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர் வாய்க் குழிசி பூஞ்சமட்டு இரீஇ
நாள்மோர் மாறும் நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வரும் காதிற் பணைத்தேள்
குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்
அளவிலை உணவில் கிளையுடன் அருந்தி'[45].

என்று அவர் கூறுகிறார்.

**இடைச்சியர்**

இடைச்சியர் நெய்யைப் பண்டமாற்று செய்யாமல் காசுக்கு விற்று அக்காசுகளைச் சேமித்து வைத்தார்கள். குறிப்பிட்ட தொகை

காசுச் சேர்ந்தபோது அக்காசைக் கொடுத்துப் பசுவையும், எருமையையும் விலைக்கு வாங்கினார்கள் என்று இந்தப் புலவரே கூறுகிறார்.

'நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்
மடிவாய்க் கோவலர்'[46]

வேடர்

வேடன் தான் வேட்டையாடிக் கொண்டு வந்த மான் இறைச்சியை உழவனிடத்தில் கொடுத்து அதற்கு ஈடாக நெல்லைமாற்றிக் கொண்டதைக் கோவூர் கிழார் கூறுகிறார். இடைச்சியரும் உழவனுக்குத் தயிரைக் கொடுத்து நெல்லைப் பெற்றுக் கொண்டனர் என்று இப்புலவரே கூறுகிறார்.

'கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்
தயிர்கொடு வந்த தகப்பும் நிறைய
ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கோள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உவந்தனர் பெயரும்
தென்னம் பொருப்பன் நன்னாடு'[47]

பாணர் செயல்

பாணர் உள்நாட்டு நீர் நிலைகளில் (ஆறு, ஏரி, குளங்களில்) வலை வீசியும் தூண்டில் இட்டும் மீன் பிடித்தனர். அவர்கள் பிடித்த மீன்களைப் பாண்மகளிர் ஊரில்கொண்டு போய்ப் பயற்றுக்கும், தானியத்துக்கும் மாற்றினார்கள் என்று ஓரம் போகியார் கூறுகிறார்.

முள் எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த
அகன்பெரு வட்டி நிறைய மனையோள்
அரிகால் பெரும்பயிறு நிறைக்கும் [48]

வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும்[49]

அஞ்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்[50]

## உப்பு வணிகம்

கடற்கரையைச் சார்ந்த உப்பளங்களில் நெய்தல் நிலமக்கள் உப்பு விளைவித்தார்கள். உப்பு வணிகர் மாட்டு வண்டிகளிலே நெல்லைக் கொண்டு வந்து கொடுத்து உப்பை மாற்றிக் கொண்டு போனார்கள் என்று நற்றிணைப் பாடல் கூறுகிறது.

தந்நாட்டு விளைந்த வெண்ணல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி

நெய்தல் நிலத்து முதுமகள் ஒருத்தி தன் உப்பளத்தில் விளைந்த உப்பை மாற்றி நெல் கொண்டுவரச் சென்றாள் என்று புலவர் கல்லாடனார் கூறுகிறார்.

'ஆயும் உப்பை மாறி வெண்ணெல் தரீஇய உப்புவிளை கழனிச்சென்றனள். [51]

ஊர்த் தெருவுகளில் உப்பு விற்ற உமணப் பெண் உப்பை நெல்லுக்கு மாற்றியதை அம்மூவனார் கூறுகிறார்.

கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரிவிலை மாறு கூறலின். [52]

நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளிரோவெனச் சேரிதொறும் நுவலும் [53]

உப்பை நெல்லுக்கு மாற்றி உப்பு வணிகர் தமக்குக் கிடைத்த நெல்லைச் சிறு படகுகளில் ஏற்றிக்கொண்டு கழிகளில் ஓட்டிச் சென்றதைக் கடியலூர் உருத்திரன் கண்ணனார் கூறுகிறார்.

'குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின்கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்லாய்ப் ப.்றி' [54]

கடற்கரையோரத்திலே நெய்தல் நிலத்தில் வசித்த பரதவர் கடலிலே சுறா, இறால் முதலான மீன்களைப் பிடித்து வந்தார்கள். அவர்கள் கொண்டுவந்த மீனைப் பரதவ மகளிர் எளிதில் தானியத்துக்கு மாற்றினார்கள் என்று குன்றியனார் கூறுகிறார். **'இனிது பெறு பெருமீன் எளிதினிற் மாறி'** [55] பரதவர் மகளிர் கடல்மீனை நெல்லுக்குமாற்றியதை நக்கீரரும் கூறுகிறார்: **'பசு மீன் நொடுத்த வெண்ணெல் மாஅத், தயிர்மிதி மிதவை மாஆர்டுந்''** [56]. 'உப்பு

நொடை நெல்லின் மூரல் வெண் சோறு'[57] என்று குடவாயில் கீரத்தனார் கூறுகிறார்.

## மகளிர் வியாபாரம் செய்தல்

பரதவ மகளிர் கடல்மீனைத் திருவிழா நடக்கிற ஊர்களில் கொண்டுபோய் எளிதில் விற்றதைச் சீத்தலைச் சாத்தனார் கூறுகிறார்.

'திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்
தழையணி அல்குல் செல்வத் தங்கையர்
விழவயர் மறுகின் விலையெனப் பகரும்
கானலஞ் சிறுகுடி'[58]

மீனை நெல்லுக்கு மாற்றினார்கள். பண்ட மாற்றினால் கிடைத்த நெல்லை அம்பியில் ஏற்றிக் கொண்டு கழிகளின் வழியே வந்ததைப் பரணர் கூறுகிறார்.

'மீன் நொடுத்து நெல் குவைஇ
மிசை அம்பியின் மனைமறுக்குந்து'[59]

உழவர் மகளிர் தெருக்களில் பூ விற்றதைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார்.

'துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி
வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்
புதுமலர் தெருவுதொறும் நுவலும்
நொதுமலராட்டி'[60]

பெண் ஒருத்தி மலர் விற்றதைப் பாண்டியன் மாறன் வழுதி தம்முடைய செய்யுளில் கூறுகிறார்.

'துய்த்தலை இதழ்பைங் குருக்கத்தியொடு
பித்திகை விரவுமலர் கொள்ளிரோ என
வண்டுசூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை யுழவர் தனிமடமகள்' [61]

பூவிற்ற பெண்களும் பூவை நெல்லுக்குப் பண்டமாற்று செய்தனர் என்பதைச் சொல்லாமலே விளக்குகிறது.

வேடர்கள் ஒன்றுகூடிக் காட்டில் வேட்டையாடிக் கொன்ற யானையின் தந்தங்களை மதுபானக் கடையில் கொண்டுபோய்க் கொடுத்து மதுபானம்அருந்தினதை மாமூலனார் கூறுகிறார்.

'வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ
அருநிறத் தழுத்திய அம்பினர் பலருடன்

அண்ணல் யானை வெண்கொடு கொண்டு
நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும்'[62]

வேடர் தேனையும் கிழங்கையும் கொண்டு வந்து மதுபானக் கடையில் மாற்றி அதற்கு மாறாக வறுத்த மீன் இறைச்சியையும் மதுவையும் வாங்கி உண்டதையும், உழவர் கரும்பையும் அவலையும் கொண்டுவந்து கொடுத்து அதற்கு மாறாக வறுத்த மான் இறைச்சியையும் மதுவையும் பெற்று உண்டு மகிழ்ந்ததையும் மூடத்தாமக் கண்ணியார் கூறுகிறார்.

'தேனெய்யொடு கிழங்கு மாறியோர்
மீனெய்யொடு நறவு மறுகவும்
தீங்கரும்பொடு அவல் வகுத்தோர்
மான்குறை யோடு மதுமறுகவும்'[63]

கொள்கைக் குடாக்கடலின் கரையோரங்களில் வாழ்ந்த பரதவர். கொற்கைக் கடலில் மீன்பிடித்தபோது அதனுடன் முத்துச் சிப்பிகளும் கிடைத்தன: அந்தச் சிப்பிகளை அவர்கள் கள்ளுக் கடையில் மாற்றிக் கள் குடித்ததைப் பேராலவாயர் கூறுகிறார்.

'பன்மீன் கொள்பவர் முகந்த சிப்பி
நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும்
பேரிசைக் கொற்கை'[64]

எயினர் மது அருந்துவதற்காக மது விற்கும் இடத்துக்கு வந்து எந்தப் பொருளும் இல்லாதபடியால், 'காட்டில் வேட்டையாடி யானைத் தந்தங்களைக் கொண்டு வந்து கொடுப்போம். அதற்கு ஈடாக இப்போது கள்ளைக் கடனாகக் கொடு' என்று கேட்டதை மருதன் இளநாகனார் கூறுகிறார்.

'அரிகிளர் பணைத்தோள் வயிறணி திதலை
அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பின்
மகிழ்நொடை பெறாஅர் அகி நனைகவுள்
கான யானை வெண்கோடு சுட்டி
மன்றாடு புதல்வன் புன்றலை நீவும்
அருமுனைப் பாக்கம்'[65]

கொல்லி மலைமேல் வாழ்ந்த சிறுகுடி மக்கள், தம் சுற்றம் பசித் திருப்பதனால், தங்களிடமிருந்த யானைத் தந்தங்களைத் தானியத்துக்கு மாற்றிச் சோறு சமைத்து உண்டனர் என்று கபிலர் கூறுகிறார்.

‘காந்தளஞ் சிலம்பில சிறுகுடி பசித்தெனக்
கடுங்கண் வேழத்துக் கோடு கொடுத் தண்ணும்
வல்வில் ஓரி கொல்லிக் குடவரை’[66]

## குழந்தைக்கு உணவு ஊட்டல்

தேன் கலந்த வெண்சுவைத் தீம்பாலைப் பொற் கலத்தேந்திச் செவிலியர் கோலைக் காட்டிக் குழந்தைக்குப் பாலூட்டுவர்.[67] குழந்தைக்கு உணவூட்டும்போது, அவை உண்ண மறுக்குங்கால் மனத்தை மாற்றிச் சில முறைகளைக் கையாள்வர். ‘இது அப்பாவுக்குரிய பங்கு’, இதனை உண்பாயாக, இது அம்மாவின் பங்கு, இதனை உண்பாயாக’ எனச் சோறூட்டுதலை, ‘நுந்தைபால் உண்டிசில; ஞாயர்பால் உண்டி சில’ எனத்தாயர் கூறுவதாகக் கலித்தொகை[68] காட்டும்.

பால் நிறைந்த கிண்ணத்தினைக் கையிலேந்திக் குழந்தைக்குப் பாலூட்டும் போதும், ‘என் பங்குக்குக் குடித்தாய்; உன் தந்தை பங்குக்குக் குடி’ என்று அன்னையர் இயம்புவதை,

என்பாடு உண்டனை ஆயின், ஒருகால்
நுந்தை பாடும் உண்என்று ஊட்டி[69]

என அகநானூறு புலப்படுத்தும்.

## உணவு தேடல்

வேட்டைச் சமூகமாக இருந்த மனிதன் இனக்குழுச் சமூகமாக மாறி வந்தான். கால்நடைகளைத் தன் வசமாக்கிக் கொண்டு வேளாண் தொழிலை மேற்கொண்டான். போர், வெற்றி, வீரம், கொடை, உழவு, கையறுநிலை என்றுள்ள புறநானூற்றில் பற்றிய செய்திகள் அனைத்தும் தமிழகத்தின் பண்பாட்டு வேர்களை அடையாளம் காட்டுபவையாக அமைகின்றன. மன்னரும், மக்களும் அடிப்படைத் தொழிலான உழவையும் அதன்மூலம் கிடைக்கும் உணவையும் உயர்வாகக் கருதினர். ஆதி மனிதனுடைய முதற்தொழிலே உணவைத் தேடுவதாக அமைந்தது.

## உணவு - விளக்கம்

சொல்லமைப்பின்படி நோக்கினால் உண் என்பதே அடிச் சொல்லாக அமைகிறது. உடல் நலமுற்றவனுக்கு உணவாகப் பயன்படும் கஞ்சி நோயுற்றவனுக்கு மருந்தாகவும் பயன்படுகிறது. உயிர் வாழ்வதற்குத் தேவையான ஆற்றலைத் தரும் பொருளை உணவென்று கூறுவர்.

"உணாவே வல்சி யுண்டி யோதன
மசனம் பதமே யிரையா கார
முறையே யூட்ட முணவென லாகும்" [70]

என உணா, உண்டி, அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் என்பவற்றை உணவின் பெயர்களாகப் பிங்கல நிகண்டு குறிப்பிடுகிறது.

## உணவின் சிறப்பு

ஆடையில்லாத மனிதன் அரை மனிதன் என்பதைப்போல உணவில்லாத மனிதன் உயிரற்ற மனிதன் எனலாம். மக்களுக்குத் தேவையான அடிப்படைப் பொருள்களான ஊன், உடை, உறையுள் என்பவற்றில் உடையும், உறையுளும் இன்றிகூட உயிர் வாழலாம். ஆனால் உணவின்றி உயிர் வாழ்ந்தவர் இல்லை. "உணவெனப் படுவது நிலத்தொடு நீரே"[71] எனப் புறநானூறு உரைக்கின்றது. உணவு மனிதனின் உயிர்நாடி, உணவில்லையேல் இவ்வுலகம் இல்லை. உலகின் அறம், ஒழுக்கம், மேன்மை எல்லாம் உணவில் அடங்கியிருக்கிறது. எனவே தான் "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்று புறநானூறு உரைக்கிறது.

## விருத்தினருக்கு அளித்து மகிழ்தல்

குடநாடு என்ற ஊரின் தலைவன் ஆதி என்பவன் மறவர் வேட்டையாடித் தந்த ஏய்ப்பன்றித் தசையுடன் செவ்விய சோறுங் கலந்த கட்டியை வருவார்க்கெல்லாம் ஒப்ப வழங்குவான்.

"எயினர் தந்த எய்ம்மான் எறிதசைப்
பைந்நிசணம் பெருத்த பசுவெள் அமலை'[72]

என்று புறநானூற்றுப் பாடலால் தெரிய வருகிறது. உழவர் வயலை உழும்பொழுது தம் உழுபடையான் சேற்றில் இருந்து கிளப்பப் பெற்ற ஆமையின் தசையை மலை நிலைத்திருந்தும், காட்டு நிலத்திருந்தும் தம் வீட்டிற்கு வந்துள்ள உறவினருக்கு விருந்துனவாகச் சமைப்பதும் பற்றி இடைக்காடனார் கூறுகின்றார். விருந்தினர்க்கு உணவளித்து அவர்கள் மகிழத் தாமும் மகிழ்ந்தவர்கள் விருந்தினரை மகிழ்விக்க வேறுபொருள் எதையாவது கொடுக்க வேண்டும் என விரும்பியுள்ளான் என்பதை,

"... வாடூன் கொழுங்கின்ற
கொய்குரல் அரிசியொடு நெய்பெய்து அட்டு

துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோறு
ஊண்டு இனிது இருந்த பின்றை
...தருகுவன் மாதேர்"[73]

எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது.

## விருந்தில் செல்வச்செழிப்பு

செல்வர்கள் உணவு படைப்பதற்குரிய கலன்களாகப் பொன், வெள்ளி ஆகிய பல தட்டங்களைப் பயன்படுத்தினர் என்பதைக் கல்லாடனார். கூறுகின்றார். அமிழ்தத்தைப் போன்ற சுவையுடைய அடிசிலை வெள்ளியால் ஆகிய கலத்தில் பெய்து பொருநனுக்கு உணவு உண்ணக் கொடுத்த செய்தியை,

"அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்ற" [74]

எனப் புறப்பாடல் விளக்குகின்றது. பாடுநரின் பசிதீரப் பலவகை உணவுடன் தாளிப்பு பொருந்திய நெய்யுடை அடிசிலைத் திங்களைச் சூழ்ந்திருக்கும் நாள்மீன் போலப் பொன்னால் செய்த கலங்களைச் சூழவைத்து வழங்கியதைப் பெருஞ்சித்தரனார் கூறுகின்றார். இவற்றிலிருந்து செல்வர்கள் பொன், வெள்ளி, ஆகியவற்றால் தட்டங்களை உணவு உண்ணப் பயன்படுத்தியுள்ளனர்.

## கள்ளுண்டு களித்தல்

சங்க காலத்தில் புலால் உண்ணுதல் போன்று கள்ளுண்டு களித்தலும் ஒரு சமூகப் பழக்கமாக இருந்தது. விழாக்காலங்களிலும் போர் வெற்றியின் போது கள்ளுண்டு மகிழ்ந்தனர்.

"தனக்குமுகந்து ஏந்திய பசும்பொன் மண்டை
இவற்கு ஈக என்னும் அதுவும் அன்றிசினே" [75]

என அரசன் தன்பாலுள்ள அன்பால் தனக்கு முகந்தேந்திய பசும் பொன்னாலாகிய மண்டையிலுள்ள கள்ளைத் தன்னருகே உள்ள நற்பண்புகள் நிறைந்த வீரனுக்கு நல்குவதைப் புறநானூறு கூறுகின்றது. வீட்டிலேயே தமக்கு வேண்டிய கள்ளை வடித்துக் கொள்ளும் "சிலர் இல்வகு கள்ளின் சில்குடி" என்று கூறுவர்.

## கைம்மைப் பெண்டிர் உணவு

கைம்மைப் பெண்கள் நெய்யை உணவில் சேர்த்துக் கொள்வது இல்லை. இவர்கள் தண்ணீர்ச் சோற்றைப் பிழிந்து

எடுத்து அரைத்த எள்ளையும் புளியையுங்கூட்டி வெந்த வேளைக் கீரையுடன் சேர்த்து உண்பர். மேலும் கைம்பெண்கள் உணவு உண்டனர் எனவும் புறநானூறு கூறுகின்றது.

“ ... பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்” [76]

எனக் கணவனை இழந்த மகளிர் பச்சை இலையைத் தின்னாராய் பனிநீரில் மூழ்காராய் இருந்ததைப் புறநானூறு எடுத்துரைக்கிறது. அந்தணப் பெண்டிர் கணவன் இறந்த பின்பு பொழுது மறுத்துண்ணுதலும், கைம்மை நோன்பு மேற்கொண்டு வாழ்தலும் இக்காலத்திலும் காணப்படுகிறது.

## இரவலர்க்கு விருந்தோம்பல்

புலவர், கூத்தர், பொருநர், பாணர், பாடினி, விறலியர் முதலிய இரவலர்களை விருந்தினராக ஏற்று மன்னர்கள் விருந்தோம்பி யுள்ளனர். இச்செய்தியை,

“நைந்துகரை பறைந்த என் உடையும் நோக்கு
விருந்தினன் அளியன் இவன்எனப் பொருந்தகை” [77]

எனப் புறநானூறு கூறுகின்றது. விருந்தினராக வந்த இரவலர்க்குத் தாயினும் சாலப் பரிந்து வேந்தர் விருந்தோம்பியுள்ளதை அறிய முடிகிறது.

## ஊன்முறை விருந்து

ஊன் என்பதற்கு “மூரி” என்பது பொருள், மரக்கறி உணவோடு புலாலுணவும் பெரிதும் விரும்பியுண்ணப்பட்டது. மன்னர்கள் இரவலர்க்கு அளித்த விருந்துகளில் புலாலுணவே பரிமாறப்பட்டது. விருந்தினர்க்குச் சிறந்த உணவு படைத்தலை “ஊன்முறை விருந்து” என வழங்கினர் தமிழர். ஊன்முறை விருந்தின் போது விலையுயர்ந்த அணிகலன்களைப் பரிசாக வழங்கி மகிழும் நிலையும் உருவாகியுள்ளது. முத்துமாலை, பொற்றாமரை முதலிய விலையுயர்ந்த பரிசுகளையும் விருந்தினர்க்கு வழங்கியதைப் புறநானூறு அடிகள் உறுதி செய்கின்றன. மக்கள் தங்களுடைய வாழ்க்கை முறைக்கேற்பவும் செல்வநிலைக்கேற்பவும் தங்களுக்குக் கிடைக்கும் பொருள்களைப் கொண்டு விருந்தினர்க்குச் சைவ உணவு, அசைவ உணவு, இயற்கை உணவு ஆகியவற்றை விருந்தோம்பி யுள்ளனர். கறியும் சோறும் கலந்த உணவு “ஊன் புழுக்கல்” அல்லது “ஊன்துவை அடிசில்” எனப்பட்டது. உப்புக்கண்டம்

“வாடுஊன்” எனப்பட்டது. குறியை வேகவைப்பதும் சுடுவதும் வழக்கில் இருந்தன.

## விழாக்கள்

தொடர்ந்து விழா வெடுத்தல் நாட்டுக்குரிய சிறப்பாகக் கருதப்பெற்றது. ‘மடியா விழவின், யாணர் நன்னாடு’[78] என்ப விழாக்காலங்களில் கள்ளும் கறியும் உண்டு களித்திருந்தனர்.[79] கார்த்திகைத் திருவிழாவில் மகளிர் நீராடி, வரிசையாக விளக்கேற்றி வழிபட்டு அறம்பல செய்தனர்.[80] மார்கழித் திங்களில் திருவாதிரைத் திருநாளில் ஆதிரைக்குரிய சிவனுக்கு விழா எடுத்தனர்.[81] படைக்கலம் பயின்ற மழவர்க்கும் பூந்தொடை விழா (அரங்கேற்று விழா) நடைபெற்றது.[82] இளவேனிற் காலத்தில், காமவேளுக்கு எடுத்தமையைக் கலித்தொகை[83] காட்டுகிறது. விழாக் கொண்டாடும் ஊரில் ஆடு மகளிர் கழாய்க் கயிற்றில் இன்னிசை கறங்க ஆடினர்.[84]

## தாய் பால் உணவு ஊட்டும் வழக்கம்

அகன்ற மனையக மெல்லாம் சிலம்பொலி ததும்ப ஓடியும், ஆடியும், விளையாடுவாள் மகள். விளையாட்டு மகளிரோடு சிறிது நேரம் பந்தாடி வருவாள். இதற்குள் அவளது உடம்பு இளைத்தும் களைத்தும் விட்டதென எண்ணிய தாய், பாற்சோறிட்ட வெள்ளி வள்ளத்தினைக் கையேந்திச் சென்று, “என் கண்ணன்னாய்! வாராயோ” என அன்புடன் அழைத்து, எனக்காக ஒரு பிடி உண்ணுதி அம்மே என உரைத்துரைத்து ஊட்டுவாள். தாயார் குழந்தையை ஊட்டும் இம் முறையை இயற்கையாக ஆசிரியர் கயமனார் கூறுகின்றார்.

> “சீர்கெழு வியனகர்ச் சிலம்புநக இயலி
> ஓரை ஆயமொடு பந்துசிறி தெறியினும்
> வாரா யோவென் றேத்திப் பேரிலைப்
> பகன்றை வான்மலர்ப் பனிநிறைந் ததுபோல்
> பால்பெய் வள்ளம் சால்கை பற்றி
> என்பா டுண்டனை யாயின் ஒருகால்
> நுந்தை பாடும் உண்ணென் றூட்டி.”[85]

இதனைப் பாலூட்டியதெனக் கூறுதலும் உண்டு.

தலைவி உடன் போக்குப் போய்விட்டாள். அவளைக் காணாது தாயரும் தோழியரும் கலங்குகின்றார்கள். நற் பண்பு மிகவும் உடையாள் அத் தலைவி. அவள் பிரிந்துவிட்டதால்

தோழியர்க ளெல்லாம் பெரிதும் துன்புற்று நிற்கின்றனர். தன் மகளைக் காணாது கலங்கிக் கண்ணீர் பெருக்கிய தாய், முன்னெல்லாம் தன் மகள் விளையாடிய இடங்களிற் சென்று தேடுகின்றாள். அங்கே ஒரு மணற் பாவை கிடந்தது. அத் தலைவி வைத்து விளையாடிக் கொண்டிருந்தது அப்பாவை. அதனைக் கண்டாள் தாய். கலக்க மிகுதியால் அதனைப் பாவை என உணர்ந்திலள். தன் மகளாகவே கருதினள். கருதி அப்பாவையின் கண்ணையும் நெற்றியையும் மெல்லெனத் தடவிக்கொடுத்தாள்; அருகே கிடந்த வாடிய குவளை மலரை எடுத்து அப்பாவைக்குச் சூட்டினாள்; சூட்டி அப்பாவையைத் தழுவி நின்றவளாகி, "மகளே! நினது இனிய தோளைத் தாராய், இன்றேல் எனது இன்னுயிர் இற்றுக் கழிவதாக" என்று கூறினாள். அந்நிலையை ஊரவர் காண்கின்றனர். அவர்களும் தம்மை யறியாது கலங்கி நிற்கின்றனர். சிறிதளவில் தேறிய ஊரவர் அல்லது கண்டோர், தாயரையும் தோழியரையும் தேற்றுவிக்கக் கருதுகின்றனர். தலைவி பிரிந்து சென்ற நாட்டின் இயல்பையும் வளத்தையும் கூறித் தேற்றும் சிறப்பு வியக்கத்தக்கதொன்று. குழியில் வீழ்ந்த பெண் யானையின் ஓசைக்கு வெருவிய செவ்வாய்க் குழவி (எருமைக் கன்று) எருமை நல்லான் பெறுமுலை மாந்துவதுபோல், அலர் வாய்ப் பெண்டிரின் தீய சொற்களுக்கு வெருவி எழுந்த நுங்கள் மடவோள் தனக்குரிய காதலனை அடைந்து இன்புற்று வாழ்வாள். ஆதலால் நீவிர் கவலுதல் ஒழிவீராக" எனக் கூறுகின்றனர். அப்பாடல் வருமாறு:

"கயத்தலை மடப்பிடி பயம்பிற் பட்டெனக்
களிறுவிளிப் படுத்த கம்பலை வெரீஇ
ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி
தாதெரு மறுகின் மூதூ ராங்கண்
எருமை நல்லான் பெறுமுலை மாந்தும்
நாடுபல இறந்த நன்ன ராட்டிக்கு
ஆயமும் அணியிழந் தழுங்கின்று தாயும்
இன்றோள் தாராய் இறீஇயரென் உயிரெனக்
கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழல் அசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்
தருமணற் கிடந்த பாவையென்
அருமக ளேஎன முயங்கினள் அழுமே." [86]

பசுக் கூட்டங்களைப் பகைவர் கவர்ந்து சென்றனர். அதனைக் கரந்தை வீரர்கள் மீட்டுக்கொண்டு வந்தனர். கூற்றுவன் கைப்பட்ட உயிரை மீட்டுக்கொண்டு வருவதுபோல என அதன் அருமை கூறப்படுகின்றது. அத்தகைய வீரச்செயலை ஆசிரியர் மருதன் இளநாகனார் கூறுகின்றார். அவர்களது வீரம் அருள் பற்றி எழுந்த வீரமாகக் கூறுகின்றார். பகைவர்களால் கொள்ளையடிக்கப்பட்டுத் தம் தாய்ப் பசுக்கள் சென்றுவிட்டமையால் இளங்கன்றுகளெல்லாம் நடை மெலிந்து கண்ணீர்விட்டு நின்றன.

ஒரு பரண்மீது கானவன் கள்ளுண்டு மகிழ்ந்து இருக்கின்றான். அவன் மனைவியின் சாந்து பூசிய கூந்தலைக் காற்று உலர்த்துகின்றது. அவள் கூந்தலைக் கையால் கோதிக் கொண்டு குறிஞ்சிப் பாடலைப் பாடுகின்றாள்.

கழைக்கூத்தன் மனைவி வளைந்த மூங்கிலின்மேல் ஏறி நின்று ஆடுவாள். அவள் கணவன் மத்தளம் முழங்குவான். பிள்ளைகள் உடன் நின்று குழலும் வங்கியமும் ஊதுவர். மக்கள் சூழ்ந்து நின்று அவற்றைக் கண்டு களிப்பர்.

அவளை யொப்ப மயில் ஆடுகின்றது. ஓங்கி வளர்ந்த மூங்கில் குழல் ஊதுகின்றது. அருவிநீர் ஏற்ற இழிவுகளில் விழுந்து எழுந்து முழவு கொட்டுகின்றது. கலைக் கூட்டங்கள் வங்கியம் வாசிக்கின்றன.

வண்டுகளின் பாட்டொலி யாழ் ஒலி ஒப்பு இருக்கின்றது. இத்திறத்தவாய இசைக் கருவிகளைக் கொண்டு மயில் ஆடுகின்றதாம். மந்தித் திரள் அதைக் கண்டு மகிழ்கின்றதாம். இந் நாட்டியத்தைக் கபிலர் நமக்குக் காட்டுகிறார்.

“ஆடமைக் குயின்ற அவிர் துளை மருங்கிற்
கோடை யவ்விளி குழலிசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இருக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத் தியலி, யாடும் மயில்
நனவுப்புகு விறலியில் தோன்றும் நாட!” [87]

## அகநானூற்றில் பழக்க வழக்கங்கள் சில

அகநானூற்றுள் அறியப்படும் பழக்க வழக்கங்கள் பலப்பல. அவற்றுள் சில.

1. ஆடவர் கொள்ளியைக் கையிலேந்தி உயர்ந்த பரண்மீது இருந்து தினைப்புனத்தைக் காத்தனர்.
2. மார்பில் சந்தனம் பூசுதல். கழுத்தில் மாலையும் தலையில் கண்ணியும் சூடினர்.
3. குறவர் தேன் கலந்த பலாச்சுளையொடு மாங்கனியுண்டு மூங்கிற்புட்டியில் அடைத்த கள்ளைக் குடித்தனர்.
4. இடையூறின்றித் தன் ஊர் சென்றதற்கு அறிகுறியாகக் கொம்பு ஊதினர்.
5. நாய் வளர்த்தனர்
6. பெண்கள் தினைப்புனத்தில் தட்டையெனும் கருவிகொண்டு கிளியோட்டல், வேலன் வெறியாட்டெடுத்தல், இளம் பெண்கள் இல்லுறை கடவுளை வழிபடல் ஆகியவற்றைச் செய்தனர்.
7. வளர் பிறையில் திருமணம் கொண்டனர்.
8. குழியில் மணி அகழ்ந்தெடுத்தனர்.
9. வீடுகளில் ஓவியம் வரைந்தனர்.
10. காவிரி நீராடிக் களித்து மகிழ்ந்தனர்.
11. விழாக்கள்: உள்ளி விழா: இவ் விழாவில் கொங்கர் இடையில் மணிகட்டித் தெருக்கள்தோறும் ஆடிப் பாடுவர்.

## பழந்தமிழரின் விருந்தோம்பல் பண்பு

"சங்க இலக்கியம்" பத்துப்பாட்டில் செம்பாதி, ஆற்றுப் படையாகும். ஆற்றுப்படைப் பாடல்கள் தமிழரின் பண்பாட்டையும் பழக்கங்களையும் சித்திரிக்கின்றன. பத்துப்பாட்டில் உள்ள ஆற்றுப்படைப் பாடல்கள்வழி, சங்கத் தமிழரின் விருந்தோம்பற் பண்பினை அறியலாம்.

### விருந்தோம்பல்

தமிழரின் பாரம்பரியப் பண்புகளுள் ஒன்றாகத் திகழ்வது விருந்தோம்பல் ஆகும். தம் வீட்டிற்கு விருந்தினராக வந்தவர்க்கு அவர் மனம் மகிழும் வண்ணம் அமுது படைத்துத் தம்பெருமையை நிலைநாட்டுவது தமிழர் பண்பாகும்.

தொல்காப்பியர் தம் நூலில் "விருந்தே புதுமை" என்று குறிப்பிட்டுள்ளார். புதியோரைப் போற்றுதலே விருந்தோம்பலின் சிறப்பு என்பதை இதன் மூலம் அறியலாம். கனியன் பூங்குன்றனாரின்,

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**[88]

என்னும் பாடலடியும் இக்கருத்தையே வலியுறுத்துகிறது.

**இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு**[89]

என்பார் திருவள்ளுவர்.

குறுந்தொகைப் பாடலில் புதிய விருந்தினரின் வரவைக் காட்டும் காக்கையின் ஒலியைக் குறித்துப் பாடிய புலவரைப் பண்டையோர் காக்கைபாடினியார் என்றே அழைத்தனர்.

**விருந்து வரக்கரைந்த காக்கையது பலியே**[90]

என்பது பழந்தமிழ்ப் பாடலின் தொடராகும். விருந்து வருவதைக் குறித்து நன்னிமித்தமாகக் காக்கை கரைந்ததைப் பாடிய புலவர் அத்தொடராலேயே போற்றப்பட்டார் என்பதும் விழுமிய பண்பு. தமிழக மகளிர் வழிவழியாக விருந்தோம்பலில் சிறந்து வந்தனர் என்பதனை அறிந்து கொள்ளலாம்.

## விருந்து – விளக்கம்

"விருந்து" என்றால் "புதுமை" என்பது பொருள். விருந்து என்றொரு புத்திலக்கிய வனப்பு வகை பண்டைக் காலத்தில் இருந்தது. இதனை,

**"விருந்தே தானும்**
**புதுவது புனைந்த யாப்பின் மேற்றே"** [91]

என்ற தொல்காப்பிய நூற்பா காட்டும் விருந்து என்ற சொல் ஆகுபெயராக, வீட்டிற்குப் புதியவர்களாக வரும் விருந்தினையும், அவர்களுக்குப் பரிமாறும் புதிய உணவுகளையும் குறிக்கும்.

## இல்லறத்தின் நல்லறம்

"அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை" என்ற வள்ளுவர், அதன் பயன் விருந்தோம்பி வேளாண்மை செய்தல் என்பார். இதனை,

**"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு"** [92]

என்ற குறட்பாவால் அறியலாம். வீட்டில் இடைவிடாது விருந்தினர் தொடர்ந்து வருவதும் போவதுமாக இருந்தாலும், சலிப்படையாமல் விருந்தோம்புதல், வானுகம் பெறும் சிறப்புடையதாகக் கருதப்பட்டது.

"செவ்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு" [93]

என்ற குறள் இதற்குச் சான்று.

## ஆற்றுப்படை இலக்கியங்களில் விருந்தோம்பல்

கூத்தர், பாணர், பொருநர், விறலி என்னும் நால்வகைக் கலைஞர்களான இரவலர் தம்முள், ஒரு வள்ளலிடத்தில் பரிசு பெற்றார் ஒருவர். தம்போல் பரிசுபெறுதற்குரிய உரிய மற்றவரை, அதே வள்ளலிடம் செல்வதற்கு வழியும் வள்ளல் பெருமையும் கூறி வழிப்படுத்துவதே ஆற்றுப்படை ஆகும். இதனை,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன்எதரச் சொன்ன பக்கமும்" [94]

என்னும் தொல்காப்பியப் பாடாண்திணை நூற்பா எடுத்துக்கூறும்.

## விருந்து விழைதல்

"விருந்தினர் வருவார்களா..." என்று விருப்பத்தோடு வாசலைத் திறந்து வைத்திருத்தல் விருந்து விழைதல் ஆகும். சிறுபாணாற்றுப்படையில், வள்ளல் நல்லியக்கோடனின் அரண்மனை வாயில் என்றும் அடையா வாயில்

"பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்
அருமறை நாவின் அந்தணர்க் காயினும்
கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன
அடையா வாயில் அவன் அருங்கடை குறுகி.." [95]

என்பது "விருந்து விழைதல்" கூறுபாட்டிற்குச் சான்று.

## முகங்கனிந்து வரவேற்றல்

புதிதாக ஈன்ற பசு, தன் கன்றினைக் கனிவுடன் நோக்குதல் போல விருந்தினரை நோக்கி விருப்புடன் வரவேற்க வேண்டும் இதனை, "ஈற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி..."[96] என்று பொருநராற்றுப்படை கூறும். விருந்தினர் அனிச்சம்பூவினும் மெல்லியர்.

அவர்களை முகம் திரிந்துவிடாதபடி நோக்க வேண்டும் என்பார் வள்ளுவர்.

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து" [97]

## புத்தாடை வழங்குதல்

"ஆள் பாதி ஆடை பாதி" என்பது பழமொழி. கிழிந்த ஆடையுடன்வரும் விருந்தினர் தாழ்வு மனப்பான்மையால் கூனிக் குறுகித் தோன்றுவர். அவர்களின் கந்தலாடையைக் களைந்து, பாலாவி போன்ற புத்தாடைகள் வழங்கியதை,

"பாசி யன்ன சிதர்வை நீக்கி
ஆவி யன்ன அவிற்நூற் கலிங்கம்
இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குடன் உடீஇ" [98]

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. இதுபோன்ற செய்திகளைச் சிறுபணாற்றுப்படையிலும் மலைபடுகடாத்திலும் காணலாம்.

## களைப்புக் களைதல்

நடந்துவந்த வருத்தம் தீர்ப்பது களைப்புக் களைதல் ஆகும். புன்னகை சிந்தும் மகளிர், பலமுறையும் நல்ல உபசரிப்பு வார்த்தைகளோடு உணவு பரிமாற, ஆர உண்டு களைப்புத் தீர இரவலர் ஓய்வுகொண்ட செய்தியை,

"இழையணி வனப்பின் இன்னகை மகளிர்
போக்கில் பொலங்கலன் நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட" [99]

என்னும் பொருநராற்றுப்படை அடிகளால் அறியலாம்.

## பசியாற்றுதல்

வள்ளலை நாடி வழிநடந்து வரும் வழியில், சிற்றூர்களில் வாழும் எளிய மக்கள் தங்கள் நிலத்திற்குக் கிடைக்கும் உணவு வகைகளில் மேன்மையானவற்றை இரவலர்க்கு அளித்து விருந்தோம்பியதைப் பார்க்கிறோம். முல்லைநில மக்கள் இனிய புளிவெஞ்சோறும் மான் கறியின் சூட்டிறைச்சியும் (உப்புக்கண்டம்) கொடுத்துத் தேமா மேனியரான தங்கள் வளையலணிந்த மகளிர் கூட்டத்தோடு மகிழந்து உபசரித்து உண்ண வைத்தனர்.

"எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை ஆயமொடு
ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவீர்" [100]

## இனிதியைந்து உடனிருத்தல்

பணியாட்களை வைத்து உபசரிக்காமல், தானே இயைந்து முன்னின்று விருந்தோம்புவது இனிதியைந்து உடனிருத்தல் எனப்படும். தன் பிள்ளைகளின் முகம்பார்த்து ஊட்டும் ஒரு தாயைப் போல, வள்ளல் தொண்டைமான் இளந்திரையன் பாணர்களுக்கு மரபு பிறழாது, பொன்கலத்தில் விண்மீன்களைக் கொட்டியதுபோல வெண்சோறிட்டுப் பெரிய விருப்பத்துடன் தானே முன்னின்று உடனிருந்து உணவு ஊட்டி மகிழ்ந்தான். இதனை,

"விருப்புடை மரபிற் கரப்புடை அடிசில்
மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து
ஆனா விருப்பில் தான்நின்று ஊட்டி" [101]

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகளால் அறியலாம்.

## பரிசுகள் வழங்குதல்

விருந்தினர்களான இரவலர்கள் விடைபெறுமுன் அவரவர் தகுதிக்கேற்ப வள்ளல்கள் பரிசுகளை வழங்கினர். பொற்றாமரை, பொன்னாலான மாலை, பல புரவிகள் பூட்டிய தேர் முதலியவற்றைக் கொடுத்து மகிழ்ந்தனர். இதற்கு,

"ஆடுவண்டு இமிரா அழல்அவிர் தாமரை...
தொடையமை மாலை விறலியர் மலைய...
வளைகண்டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில் நான்குடன் பூட்டி
அரித்தேர் நல்கியும் அமையான்..." [102]

என வரும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் சான்றாகும்.

## பிரியாவிடையாக வழியனுப்புதல்

விருந்தினர் பல நாட்கள் தங்கினாலும், தலைநாள் போலவே பிற நாளிலும் விருப்பம் குறையாமல் விருந்தோம்பி, அவர்கள் விடைபெறும்போது விடைதராத பண்பே "பிரியாவிடை" என்பதாகும். ஔவையார் பாடிய, "பாரி பறித்த பறி"யும் இவ்வகைப் பிரியாவிடை சார்ந்த விருந்தோம்பல் ஆகும்.

"தலைநாள் அன்ன புகலொடு வழி சிறந்து
பலநாள் நிற்பினும் வெறுகுவீர்..." [103]

என்பது தலைநாள் போன்ற விருப்பினராக இருந்த பண்புக்குச் சான்றாகும். விருந்தினர் விடைபெறும் போது பழந்தமிழ் மக்கள் தம் வீட்டுப் பெண் குழந்தைகளை விட்டு, அவர்களைப் "போகவிட மாட்டோம்" என வழிமறித்து, இன்னும் சில நாள் தங்கியிருக்க வேண்டுவர். இவ்வழக்கத்தினை,

"தொடிக்கை மகரூஉ மகமுறை தடுப்ப" [104]

"அகமலி உவகை ஆர்வமொடு அளைஇ
மகமுறை தடுப்ப..." [105]

எனவரும் ஆற்றுப்படை அடிகள் நமக்குக் காட்டுகின்றன.

## மக்கள் வளம்

சமூக மேம்பாட்டில் மக்கள் வளம் என்பது பிற வளங்களுக்கு அடிப்படையாக அமைகிறது. மக்கள் வளம் என்பது உணவு, உடை, இருப்பிடங்களோடு சுகாதார மேம்பாட்டையும் பொறுத்தே அமைகிறது. சுகாதார மேம்பாடே பண்பட்ட சமுதாயத்தை இனங் காட்டுகிறது. ஆனால், "இந்தியாவில் ஏழையாகவோ, நோயாளி யாகவோ இருப்பது மிகக் கொடுமையான விஷயம். கோடிக்கும் மேற்பட்டவர்கள் மருத்துவ உதவியைப் பெற முடியாத நிலையில் இருக்கிறார்கள்" என்ற இன்றைய நிலை இங்கு எண்ணத்தக்கது.

புறநானூற்றில், பழந்தமிழரின் மருத்துவத்துறை சார்ந்த அறிவு வெளிப்படுகிறது. மக்கள் வளவாழ்வில் அக்கறை காட்டியுள்ளனர். பழந்தமிழர் மருத்துவத்தை, இயற்கை மருத்தும், இசைமருத்துவம், நவீன மருத்துவம் (கருவிகளைக் கையாளுதல்) என்று வகைப்படுத்தலாம்.

அனைத்து வகையான நோய்களுக்கும் அடிப்படைக் காரணம் சுற்றுச்சூழலும் உணவுமுறைகளுமே என்பதை நன்கு உணர்ந்திருந்தனர். மனிதர்க்கு வரும் மூப்பை விரட்டும் ஆற்றல், தாம் வாழும் நற்சூழலுக்கு உண்டு[106] என்பதை உணர்ந்திருந்தனர். தேவையான உணவினைத் தேவையான அளவில் தேவையான நேரத்தில் உண்டாலே நோய்கள் அண்டாது என்பதையும், இவற்றின் தன்மைகள் மாறுபடின் நோயும் அதன் வழிச் சினமும் பெருகும் என்பதையும் உணர்ந்திருந்தனர். இதனை,

'பெரிது ஆராச் சிறுசினத்தார்' [107]

என்பதில் அறியலாம். நோய்களை விரட்ட இயற்கை மருத்துவ முறைகளான ஐயவி புகைத்தலும், அத்திணைப் பாலினைப் புண்களில் தடவுதலும் காணப்படுகிறது. இதோடு, இசைமருத்துவம் என்ற ஒன்றினைக் கையாண்டுள்ளனர். இம்முறை அவர்களின் இத்துறை சார்ந்த ஆய்வின் முதிர்ச்சியைக் காட்டுவதாக அமைகிறது. இதனை

'ஐயவி சிதறி யாம்ப லூதி
இசைமணி யெறிந்த காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநரை புகை இக்
காக்கம் வம்மோ காதலந் தோழி' [108]

என்ற அடிகள் காட்டுகின்றன. மேலும் இதே செய்தியை,

'வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவும்
எல்லா மனையுங் கல்லென் றவ்வே' [109]

என்ற பாடலடிகளும் காட்டுகின்றன.

நவீன மருத்துவ முறைகளையும் கையாண்டுள்ளனர் என்ற நிலையில், காயங்களுக்குத் தையல் போட்டு, பஞ்சினை வைத்துக் கட்டுப்போட்டிருந்த காட்சியைப் புறநானூறு காட்டுகிறது. இதனை,

'பஞ்சியுங் களையாப் புண்ணர்' [110]

என்ற பாடலடியால் காணலாம்.

## குறிப்புகள்

1. குறள்., 795
2. குறுந்தொகை 342
3. மேலது, 375; 3-5
4. கலித்தொகை 41
5. மேலது, 2:26
6. அகம் 102
7. மலைபடுகடாம் 170-185
8. அகம் 274
9. மேலது, 311: 9-11
10. கலித்தொகை 103:63,64
11. பெரும்பாணாற்றுப் படை, 130-133
12. மேலது, 167-196

13. நற்றிணை 210
14. குறுந்தொகை, 155
15. நற்றிணை 356
16. அகம் -116
17. புறம்-7
18. பதிற்றுப்பத்து: 71-4,5
19. சிறுபாணாற்றுப்படை, 190-195
20. பெரும்பாணாற்றுப்படை 356-362
21. மலைபடுகடாம், 464
22. பெரும்பாணாற்றுப்படை, 275-282
23. பொருநராற்றுப்படை 341-345
24. புறம் - 199
25. குறுந்தொகை 277:4-5
26. நற்றிணை – 331
27. பட்டினப் பாலை, 86-87
28. பட்டினப்பாலை – 92,93
29. புறம், 102
30. புறம், 255:3
31. கலித்தொகை 4:3-5
32. அகம், 109:11-14
33. பதிற்றுப் பத்து 65:14-16
34. குறுந்தொகை 118
35. நற்றிணை 359
36. புறம். 173;11-12
37. மேலது, 306;5
38. மேலது, 319
39. மேலது, 316; 5-6
40. மேலது, 35; 24-34
41. மேலது, 120; 3-5
42. மேலது, 322;7
43. மேலது, 375;6
44. மேலது, (108)
45. பெரும்பாண், 155-103

46. மேலது, 164-166
47. புறம் 33:1-8
48. ஐங்குறு, மருதம், புலவிப்பத்து; 47
49. மேலது, 48
50. மேலது, 49
51. குறும். 269: 4-6
52. அகம், 140: 5-8
53. மேலது, 390: 8-9
54. பட்டினப்பாலை 28-30
55. நற்றிணை, 239:3
56. அகம். 340: 14-15
57. மேலது, 60:4
58. மேலது, 320: 2-5
59. புறம், 343 1-2
60. நற்றிணை, 118: 8-11
61. மேலது, 97: 6-9
62. அகம், 61:8-10
63. பொருநர் ஆற்றுப்படை — 214-217
64. அகம். 296: 8-10
65. மேலது, 245: 8-13
66. குறுந்தொகை 100:3-5
67. நற்றிணை, 110
68. கலித்தொகை: 85
69. அகம்., 219: 6,7
70. புறம்., 18
71. மேலது.,
72. மேலது., 177
73. மேலது., 328
74. மேலது., 390
75. மேலது., 289
76. மேலது., 62
77. மேலது., 376
78. புறம் 212:5,6

79. மேலது, 384
80. நற்றிணை, 202
81. பரிபாடல், 11
82. அகம், 187
83. கலித்தொகை,27
84. குறிஞ்சிப் பாட்டு 192-194
85. அகம். 219
86. மேலது.,
87. மேலது., 82
88. புறம் 19
89. குறள்.,
90. குறுந்., 210
91. தொல்.பொருள்.செய்யுள் நூற்.237
92. குறள். 81
93. மேலது., 86
94. தொல்.பொருள். புறத். நூற். 36
95. சிறுபாண்.அடி, 203-206
96. பொருந. அடி, 151
97. குறள். 90
98. பெரும்பாண். அடி, 468-470
99. பொருந. அடி 85-87
100. சிறுபாண். அடி. 175-177
101. பெரும்பாண். அடி, 476-479
102. மேலது, 484-490
103. மலைபடு. அடி 565-566
104. சிறுபாண். 192
105. மலைபடு. அடி. 185
106. புறம். 191;1-7
107. மேலது, 360; 1-2
108. மேலது, 281;4-7
109. மேலது, 296; 1-3
110. மேலது, 353;16

# 2. ஆடை அலங்காரப் பழக்கவழக்கங்கள்

மக்களின் அடிப்படைத் தேவைகளுள் உணவிற்கு அடுத்த நிலையினைப் பெறுவது உடையாகும். தழை, மரப்பட்டை போன்றவற்றை உடுத்திய ஆதிமனிதன் தன் தேடலால் விலங்குகளின் தோலினையும் உடுத்தலானான். பின்னர் நாகரிக வளர்ச்சியால் உந்தப்பட்டவன் நூலாடைகளை உற்பத்தி செய்யும் நிலைக்கு உயர்ந்தான். இவ்வகை மூன்றாம்படிநிலை வளர்ச்சியிலிருந்தே தொலைநோக்கு பெறப்படுகிறது. பழந்தமிழ் சமுதாயத்தைப் பொறுத்த வரையில் உடையின் தேவையை நிறைவு செய்ய இரண்டு வகையான வழிமுறைகளைச் செயல்படுத்தி வந்துள்ளமை புலனாகிறது. ஒன்று வறியவர்களுக்கு உணவோடு உடையையும் கிடைக்கச் செய்தல், மற்றொன்று உடையின் உற்பத்திக்கு அடிப்படையான தொழிலினைப் பெருக்குதல் என்பதாகும்.

தன்னை நாடி வரும் வறியவர்க்கும், பாணர்க்கும் அவர்களின் கிழிசல் ஆடைகளைக் களைந்து, புத்தாடைகளை உடுக்கச்செய்யும் பழந்தமிழ் அரசர்களின் செயல்களைப் புறநானூறு காட்டுகின்றது. அவ்வாறு வழங்கப்பட்ட ஆடைகள் பலவகை நுண்வேலைப் பாடுகளைக் கொண்டதாகவும், பல்வகைத்தொழில் நுட்பங்களின் வெளிப்பாடாகவும் விளங்கின. பாம்பின் தோல் போன்ற வடிவையுடையனவும், மூங்கிலின் உள்பக்கத்தில் உள்ள தோலைப் போன்றனவும், நெய்யப்பட்ட நூல் இழைகளின் வரிசை அறிய முடியாத, பூ வேலைப்பாட்டுடன் கூடியனவுமாகிய ஆடைகளை வறியவர்க்குக் கொடுத்து உடுக்கச் செய்த செய்தியினை,

**'பாம்புரி யன்ன வடிவின காம்பின்**
**கழைபடு சொலியி னிழையணி வாரா**
**ஒண்பூங் கலிங்க முடிஇ,**[1]

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. இதைப்போல, மணி, பொன், முத்துக்களோடு பல்வேறு வகையான உடைகளை வழங்கிய செய்தியை,

**'வேறுபட்ட வுடையுஞ், சேறுபட்ட தசும்பும்'**[2]

என்ற அடிகள் காட்டுகின்றன.

மேலும், ஆடைகளுக்கு வண்ணம் ஏற்றும் முறையினைப் பழந்தமிழர் கற்றிருந்தனர் என்பதோடு, கடல் அலை போன்ற ஆடைகளை உற்பத்தி செய்யும் வன்மை கொண்டிருந்தனர் என்பதையும்,

'நீலக் கச்சைப் பூவா ராடை'[3]

என்ற வரியும்,

'கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்'[4]

என்ற வரியும் காட்டுகின்றன.

நெசவுத் தொழிலுக்கு அடிப்படையான பருத்தியை உள்நாட்டிலேயே விளைவித்த செய்தியினைப் புறநானூறு காட்டுகிறது. பருத்தி மிகுதியாகப் பயிரிடப்பட்டதை,

'பருத்தி வேலிச் சீறூர்'[5]

என்பதிலும் அறியமுடிகிறது. இதோடு, நெசவுத்தொழிலில் பெண்கள் ஈடுபட்டு வந்தமைக்கான குறிப்புகளும் புறநானூற்றில் காணப்படு கின்றன. இதனை,

'பருத்திப் பெண்டின் பனுவ லன்ன'[6]

என்ற வரி உறுதிசெய்கிறது. மேலும்,

'பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து'[7]

என்பதில் வீட்டின் விளக்கொளியில் பெண்கள் நூல்நூற்ற செய்தியும் தெரியவருகிறது.

இவ்வகைச் செயல்பாடுகள் உடையின் தேவையை நிறைவு செய்ய பழந்தமிழர் மேற்கொண்ட தொலைநோக்குத் திட்டங்களை வெளிக்காட்டுகின்றன.

## மகளிர் ஆடை

மகளிர் கலிங்கம் என்னும், ஒருவகை ஆடையை அணிந்தனர்.[8] அது கலிங்க நாட்டிலிருந்து வந்தது என்பது அப்பெயரால் பெறப்படும். காந்தார நாட்டிலிருந்து வந்த குடிவகை கந்தாரம் எனப்பெயர் பெற்றது ஒப்பு நோக்கத்தகும். கோடை, குளிர் முதலிய காலங்களுக்கேற்ப, உடை மாற்றி உடுத்தினர் என்பது 'பட்டு நீக்கித் துகிரெடுத்தும்'[9] என்னும் அடியால் பெறப்படும். புனலாடச் செல்வோர் 'அதற்கெனத் தனி ஆடை உடுத்தினர்', அது புட்டகம், ஈரணி என்று வழங்கப்பெறும்.

'புட்டகம் பொருந்துவ புனைகுவோரும்;[10] ஆம்பல், அசோகு முதலியவற்றால் ஆன தழையாடை உடுத்துக் கடற்கரைச் சோலையில் இங்கு மகிழ்ந்ததை[11] அகநானூறு, நற்றிணை[12] ஆகிய இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## இருப்பிடம்

அடிப்படைத் தேவைகளில் உணவு, உடைக்கு அடுத்த இடத்தினைப் பெறுவது இருப்பிடத் தேவையாகும். இயற்கையாக அமையப்பெற்ற மலைக்குகைகள், மரப்பொந்துகளில் மனிதன் ஒளிந்து வாழ்ந்த நிலையிலிருந்து, செயற்கையாக இருப்பிட வசதியினை ஏற்படுத்திக் கொள்ள முனையும் வேளையே அவனின் தொலைநோக்குச் சிந்தனை வெளிப்படுவதாக அமைகிறது. அவ்வாறு இருப்பிட வசதியை ஏற்படுத்திக்கொள்ளும்போது, மண்ணின் தன்மை, சுற்றுச்சூழல், கூட்டமாக வாழ்வதற்கான வாய்ப்புகள், இருப்பிடங்களை ஒட்டியுள்ள தொழில்சார்ந்த நிலங்களின் தன்மை, இயற்கைச் சீற்றங்களில் இருந்து பாதுகாப்பு போன்ற பலவற்றையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது இவ்வகையான முன்யோசனை நிறைந்த, திட்டமிடுதலுக்குப் பின்னரே பழந்தமிழகத்தில் சிற்றூர்களும், பேரூர்களும் தோன்றியிருக்க வாய்ப்புகள் உள்ளன. இவ்வகையான இருப்பிட வசதிகளை ஏற்படுத்திக்கொள்வதிலும், கட்டடக்கலையில் தொழில்நுட்பங்களைக் கையாளுவதிலும் கைதேர்ந்தவர்களாகப் பழந்தமிழர் விளங்கியுள்ளனர்.

திணை சார்ந்த பொருள்களைப் (கரும்புத் தோகை, வைக்கோல்) பயன்படுத்தி இருப்பிட வசதியை ஏற்படுத்திக் கொள்ளல்[13] தூண்களுடன் கூடிய சிற்றில்களைக் கட்டுதல்[14], கட்டடங்களின் உறுதிப்பாட்டிற்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்தல், உயரமான மாடங்களை உருவாக்குதல், பாதுகாப்புடன் கூடிய அரண்களை ஏற்படுத்துதல், கட்டுமானப் பணியில் தொழில்நுட்பத்தினைப் பயன்படுத்துதல் போன்ற பல நிலைகளைப் புறநானூற்றின்வழி அறிய முடிகிறது. அதே வேளையில், ஐந்தில் ஓர் இந்தியருக்கு உறுதியான வீடு கிடையாது. இந்தியாவில் குடிசைப்பகுதியில் வசிப்பவர்கள் எண்ணிக்கை 6.2 கோடி என்ற இன்றைய நிலையும் இங்கு எண்ணத்தக்கது.

நகரில் கட்டடங்கள் மிக உயரமாகவும், மலைகளின் கூட்டத்தைப் போன்று நெருக்கமாகவும் அமைந்திருந்ததை,

**'மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்'** [15]

என்ற அடிகாட்டுகிறது.

இதே போல, உயர்ந்த, மணியைவிட அதிகமாக ஒளிவீசும் மாடத்தினை,

'கதிர்விடு மணியிற் கண்பொரு மாடம்'[16]

என்ற பாடலடி காட்டுகிறது. மணியைவிட அதிக பளபளப்புத் தன்மை கொண்ட மாடம் என்பதனால் பளிங்குக் கற்களைக் கண்டறிந்து பட்டைதீட்டும் நுட்பம் கைவரப்பெற்றிருந்தமை தெளிவாகிறது. பழந்தமிழகத்தில் சிற்றில்கள் இருந்ததைப் போலவே நெடிய சுவர்களைக் கொண்ட இல்லங்களும் காணப்பட்டன. இதனை,

'நெடுஞ்சுவர் நல்லிற் புலம்பக் கடைகழிந்து'[17]

என்ற அடி சுட்டுகிறது.

இவையல்லாமல், கட்டடங்களின் உறுதிப்பாட்டிற்கு, மண்ணை அரைத்துப் (சிமெண்ட்) பயன்படுத்திய தொழில் நுட்பத்தினையும், செம்பைப் போன்ற வலுவான கோட்டைகளை அமைக்கும் செயல்திறனையும், ஓடிவரும் மழைநீரினைத் தேக்கி வைத்து வேளாண்மைக்குப் பயன்படுத்த, அறையும், பொறையும் அமைந்த பகுதிகளை இணைத்து வளைந்த வடிவிலா அணைகள் கட்டும் உத்தியினையும் பழந்தமிழர் கைவரப்பெற்றுள்ளனர். இதனை,

'அரைம ணிஞ்சி நாட்கொடி நுடங்கும்'[18]

என்பதிலும்,

'செம்புறழ் புரிசைச் செம்மண் மூதூர்'[19]

என்பதிலும்,

'அறையும் பொறையு மணந்த தலைய
எண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரை'[20]

என்பதிலும் அறியமுடிகிறது. இவற்றின் வழி பழந்தமிழர்களின் கட்டடக்கலை நுட்பமும் தொலைநோக்கும் தெளிவாகிறது.

## ஞாழல் ஆடை

தலைவன் தனது காதலியின் இயல்பைத் தோழனிடம் கூறுகிறான். அவள் சங்கு வளையல்களையும், ஞாழல் தழையால் ஆன ஆடைகளையும் அணிந்தவள் என்கிறான்.

"கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த இரும்பல் கூந்தல்
கானல் ஞாழல் கவின்பெறு தழையள்
வரையர மகளிரின் அரியளென்
நிறையரு நெஞ்சம் கொண்டொளித் தோளே"[21]

## தழை ஆடை உடுத்தல்

தழை ஆடை உடுத்தும் பழக்கம் மக்களிடையே இருந்ததை ஐங்குறுநூறு கூறுகிறது. பகைத் தழை மலர்களாலும் குழையாலும் தொடுக்கப்பட்ட தழையுடை. நீல நிறம் உடைய நெய்தலே தொடுப்பின் அழகு. பிறவாமை கருதி செருந்தி, புன்னை, அரும்பு முதலியவை கலந்து கொடுக்கப்பட்டதால் பகைத் தழை என்றாள்.

## நெய்தல் பகைத் தழை

பொன்மை வெண்மை பசுமை நிறம் கொண்ட பல மலர்களும் கலந்து கிடந்தாலும் இடையில் இடையே மணிபோல் கிடந்து மிளிர்தலின் நெய்தல் பகைத் தழை என்றாள். நொதுமலாளர் கொள்ளார் இவையே என்றது நீயல்லாதாரில் இப்பூப்பறிப்பவர் இல்லை என்பதாம். பெறுதற்கரிய முத்தைப் பரதவர் விற்கும் தொழில் குடியில் பிறந்தவள் தலைவி ஆவாள் இதனை,

வளைபடு முத்தம் பரதவர் பகரும்
கடல்கெழு கொண்கன் காதல் மடமகள்
கெடலரும் துயரம் நல்கிப்
படலின் பாயல் வவ்வி நல்கியோளே[22]

எனப் பாடல் கூறுகிறது.

“சங்கில் பிறக்கும் முத்துக்களைக் கொணர்ந்து பரதவர் ஏனைய நிலத்தில் வாழ்பவர்க்கு விற்கும் கடல் பொருந்திய கொண்கனின் அன்புமகள் நீக்க முடியாத துயரத்தைத் தந்து, கண் மூடுதலான இனிய உறக்கத்தைக் கவர்ந்து கொண்டாள் என்று தலைவன் கூறினான்.

## அணிகள் அணியும் பழக்கம்

சங்க கால மக்கள் பல்வேறு வகையான அணிகலன்களைப் பயன்படுத்திய வழக்கம் புலனாகிறது. காலில் பொன்னாலான சதங்கை, இடுப்பிலே பொன்மணியிலான வடம், அதன்மேல் சிவந்த பவழ வடங்கள் அவற்றின் மேல் பூந்துகில் கையில் அழகில் தொடி, வாள், மழுப் போன்ற அணிகளை நெருங்கக்கட்டி அதன் இரண்டு புறத்திலும் காளை உருவம் தாங்கிய பவழத்தால் செய்த அணி, முத்தும் பல மணிகளும் பிறவும் கோத்த மூன்று வடங்கள் அவற்றுக்கு மேல் நீலப்பூப் போலச் செய்த மணிமாலை[23] ஆகியவற்றைச் சிறுவர்க்கு அணிவித்து அழகு செய்தனர். புலிப்பல் தாலியைச் சிறார்க்கு அணிவித்தனர்.[24] மறவர் கால்களில் வீரக்கழல் அணிவதும் பெண்டிர் மெல்லடியில் சிலம்பணிதலும் வழக்கம்.[25] பகையரசனின் தலையில் அணிந்த பொன் முடியினை உருக்கி,

வீரக்கழல் செய்து; மன்னர் காலில் அணிந்தனர், நெடுஞ்செழியன் கிண்கிணி களைந்த காலில் வீரக்கழல் அணிந்தான். தோளில் அணிந்த தொடியை நீக்கி, வில்லைப் பற்றினான், கண்ணியும் தாரும் அணிந்து ஐம்படைத்தாலியை அகற்றா நிலையில் போருக்குச் சென்றான். பால் விட்டு, உணவும் இன்றி தான் உண்ணத் தொடங்கினான் என நெடுஞ்செழியன் இளமையில் பொருத்தமையைக் காட்டும் இடைக்குன்றூர் கிழார் பாடல், இளமை அணிகலன்களை அறிவிப்பதோடு அவனது பருவ மாற்றத்தையும் புலப்படுத்துகிறது.[26] நள்ளி என்னும் வள்ளல் வேட்டையாடச் சென்றபோது, புலவரிடம் 'காட்டு நாட்டேம்', வேறு உயர்ந்த பொருள் என்பால் இங்கில்லை எனக்கூறி, அவர்க்கு மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரத்தையும் முன்கையில் அணிந்த கடகத்தையும் அளித்தான் என்ற செய்தியால், ஆரம் கடகம் என்னும் அணிகளைப் பற்றி அறிகிறோம். தொடி, மங்கல அணி, முத்துவடம், வளை, முத்தாரம் முதலிய அணிகளைப் பெண்கள் அணிந்தனர் என்பதும் அறியப்பெறும்.

## மாலை அணிதல்

ஆத்தி, வேம்பு முதலிய அடையாள மாலைகளை மூவேந்தர் சூடினர்; ஆடவர், கண்ணியைத் தலையிலும், தாரை மார்பிலும் அணிந்தனர். பெண்கள் தமக்குரிய மாலையை மார்பில் அணிந்தனர். மறவர் போர்க்குச் செல்லும்போது போர் நிலைக்கேற்ற வெட்சி, கரந்தை முதலிய பூக்களைச் சூடினர். பனந்தோட்டில் வேங்கைப் பூவை வைத்து மாலையாகத் தொடுத்து மலைந்தனர். பூக்களுடன் இலைகளை விரவிக்கட்டிய படலை மாலைகளை அணிவதும் உண்டு. பூச்சூடுதல் இருபாலர்க்கும் பொதுவான வழக்கம். மலர் அணியாத நிலை வறுமையைச் சுட்டுவதாகக் கருதப்பட்டது. பூ விற்பவர்கள் 'பூவிலைப்பெண்டு' என அழைக்கப்பட்டனர்.[27]

மகளிர் பூச்சூடும் சிறப்பினை உடன்பாட்டு முகத்தானும் எதிர் மறை முகத்தானும் புறநானூறு அறிவிக்கின்றது. கோவூர்க்கிழார் சோழன் நலங்கிள்ளியின் பல்வேறு நல்லியல்புகளைச் சுட்டும் போது அவற்றுள் ஒன்றாக அவன் விறலியர்க்குப் பூவிலையாகப் பாண்டியன் தலைநகர் மதுரையையும் தருகுவன் எனக்குறிப்பர்,

> ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
> மாட மதுரையும் தருகுவேன்.[28]

இவ்வரிகள் சோழமன்னனின் மறச்சிறப்பை உணர்த்துவதோடு உடன்பாட்டு முகத்தான் பூவையரின் மலர்சூடும் இன்றியமை யாமையையும் காட்டுகின்றன.

நலங்கிள்ளி ஆவூரை முற்றுகையிட்டபோது அவ்வூர் அல்லலில் ஆழ்ந்து அலமந்தது 'யானை நீரிற் படியாதும் கவழ

உணவின்றியும் வாட்டமுற்றுக்கீழே புரண்டு இடிமுழக்கம் பரப்பி பிளிரியது; குழந்தைகள் பாலின்றி அலறின; இல்லத்தாரெல்லாம் இன்னல் எய்தி அழுது புலம்பினர் என்று அவலக்காட்சிகளைக் காட்டி, அவற்றுள் ஒன்றாக மடந்தையர் பூச்சூட இயலாதவறிய நிலையையும் சுட்டுதல் கவர்ந்து நோக்கத்தகும்.

**அலமரல் யானை உருமென முழங்கவும்**
**பாலில் குழவி அலறவும், மகளிர்**
**பூவில் வறுந்தலை முடிப்பவும், நீரின்**
**வினைபுனை நல்லில் இணைகூ உக்கேட்பவும்,**
**இன்னாது அம்ம!.** [29]

இப்பாடற் பகுதி பூச்சூடலின் இன்றியமையாமையை எதிர்மறை முகத்தான் வலியுறுத்தலை காணலாம்.

குமரிப் பருவம் கடந்த மகளிரே கூந்தலில் மலர் சூடுதல் சங்ககால வழக்கம் என்பதனைத் **தமிழ்க் காதல்** நூலின் வழி அறிய முடிகிறது, பண்டைத் தமிழ்க் கன்னிமலர் சூடாள். மலர்சூடின், ஒருவனை மணந்துகொள்ள உறுதி பூண்டாள் என்பது பொருள், நள்ளிரவில் தலைவனைக் காணவந்த தலைவி, மணம் கமழ மலர் சூடி வந்தாள். இல்லம் திரும்பிய போது கூந்தலில் வேய்ந்த விரவு மலரை உதிர்த்து அதனைச் செம்மைப்படுத்திப் பழைய தோற்றத்தில் தன் இல்லத்தார்க்குக் காட்சியளித்தாள், தனக்கேற்பவும், தன் இல்லத்தார்க்கேற்பவும் நடிக்கும் தலைவியின் திறனை 'இரண்டறிகள்வி நம் காதலோளே'[30] எனத் தலைவன் வியந்து பாராட்டுகின்றான்.

## ஒப்பனை

மகளிர் ஆடை அணிகலன்களோடு பிற ஒப்பனையால் பொலிவதைச் சங்க இலக்கியங்கள் விரித்துரைக்கும். கழன் மணியினது கனியால் கூந்தலை வகுத்து ஒழுங்குபடுத்தினர்.

**கழற்கனி வகுத்த துணைச்சில் ஓதி**
**குறுந்தொடி மகளிர்.** [31]

செம்பஞ்சுக் குழம்பினைப் பூசினர்.[32] நெற்றியில் பொட்டிட்டனர், தேன்கமழி திருநுதல் திலகம் தைஇறம்'[33] கூந்தலில் எண்ணெய் தடவி, தகரச் சாந்து பூசி, நீராடி, கூந்தலின் ஈரம் போக விரலால் உணர்த்தி, நறுமணம் மிக்க அகிற்புகையூட்டினர்.

**எண்ணெய் நீவிய சுரிவளர் நறுங்காழி**
**தண்ந்றுந் தகரம் கமழ மண்ணி,**

ஈரம் புலர விரல் உளர்ப்பு அவிழா
காழகில் அம்புகை கொளீஇ [34]

மேகத்திடை ஒளிரும் மின்னல் போலக் கூந்தலிடையே மிளிரும் பொன் அணிகளைச் சூட்டினர், மகளிர் வனமுலையில் மலர்கிள்ளி அல்லியொடு அப்பித் தோளில் தொய்யில் வரித்துச் சீறடியில் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டினர்.[35] மலர் வேய்தல், மணப்பொடி பூசுதல், நறுஞ்சாந்து அணிதல் ஆகியவற்றால் அவர்கள் 'ஒசனை கமழும் வாசமேனியர்' ஆயினர்.

## ஐங்குறுநூற்றில் அணிகள்

ஐங்குறுநூற்றுப் பாடல்களில் அணிகள் குறித்த செய்திகள் காணப்படுகின்றன. அவை வளை (20), இழை, தொடி (83), காஞ்சி (176), சங்கவளையல் (196), மணிப்பூண் (மணிகள் பதித்த நகை – 232), மேகலை (306), பாண்டில் (பொன்னால் வட்டமாகச் செய்யப்பட்டதோர், அணிவகை. இதனைச் சுற்றி மணிகள் கோத்து மேகலையோடு அணிதல் பண்டை மரபு – 310, சிலம்பு, கழல் (389) அவை இங்கே தொகுத்தளிக்கப்படுகின்றன.

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான ஐங்குறுநூற்றில் வளையல், தொடி, மேகலைஈ பாணடில், சிலம்பு, தோள்அணி மற்றும் செவ்வையணி எனப் பல வகையான அணிகள் மகளிர் அணிந்தது தெரிகிறது.

## வளையல்

"இறையோர் எல்வளை நெகிழ்பு ஓடும்"[36]

தாமரையில் உள்ள முட்டையை வேழத்தின் பூ துடைக்கும் என்ற இது தலைவி பால் உள்ள தலைமகனைப் பரத்தையர் விலக்குவர் என்பது கருத்து. இதில் வரும் எல்வளை ஒளியுடைய வளையல் ஆகும். இது தலைவனின் பிரிவால் கழன்று ஓடுகிறது.

## தலைவன் மார்பு

தலைவனின் மார்பு பல மகளிர் இழைகளை நெகிழச் செய்யும். பின்வரும் பாடலில் 'இழை' என்ற அணியிடம் பெறுகிறது.

"அயல்புறம் தந்த புனிற்றுவளர் பைங்காய்
வயலைச் செங்கொடி கள்வன் அறுக்கும்
கழனி ஊரன் மார்பு பலர்க்கு
இழை நெகிழ் செல்லல் ஆகும் அன்னாய்" [37]

தோழியே, "நம் அம்மே! இல்லத்துக்கு அண்மையில் நட்டு வளர்த்த முற்றாத பசுமையான காய்களையுடைய வயலையின்

சிறந்த கொடியை, நண்டு தன் கூரிய நகத்தால் அறுக்கும் வயலையுடைய ஊரன் தலைவன். அத்தகையவனின் மார்பு ஒருவருக்கே அல்லாது மகளிர் பலர்க்கு அணிகளை நெகிழச் செய்கின்ற துன்பத்தைத் தருவதாகும்" என்று தலைவியைப் பார்த்து கூறினாள்.

இழை நெகிழ் செல்லல் ஆகும். அணிகள் கழன்று விடுவதற்குக் காரணமான துன்பத்தைச் செய்வதாகும். தலைவன் மார்பு மகளிர் அணிகளை நெகிழச் செய்யும் என இயையும் துன்பம். வயலையின் செங்கொடியின் பசிய காய் வருந்த அதன் கொடியை நண்டு அறுக்கும் என்பது மகனைப் பெற்று மனையில் இருக்கும் நம் நலத்தை மகன் வருந்தச் செய்கின்றான் என்ற பொருளை விளக்கியது.

வீட்டின் அயலில் வளர்ந்த வயலைக் கொடியை அலவன் அறுக்கும் என்றதால் புறத்தே பரத்தையரைக் கூடிப் பின் அவரும் வருந்த அவரது தொடர்பை அறுத்து ஒழுகுகின்றான் எனவும் உரைப்பர்.

### ஒண் தொடி

மணந்து கொண்ட அண்மைக் காலத்திலேயே தலைவனுக்குப் பரத்தமை ஒழுக்கம் உண்டாகிய போது அதை அறிந்த தலைவி அவனுடன் புலவி கொண்டு சொல்வதாக அமைந்த பாடலில் ஒண்தொடி எனும் வளையல் இடம் பெறுகிறது.

**மணந்தனை யருளாய் ஆயினும் பைபயத்**
**தணந்தனை யாகி, உய்ம்மோ – நும்மூர்**
**ஒண்தொடி முன்கை ஆயமும்**
**தண்டுறை ஊரன் பண்டெனப் படற்கே**[38]

தலைவி தலைவனை நோக்கி, 'மகிழ்ந, எம்மை மணந்து கொண்ட நீ எமக்கு நின் அருளை நெடிது செய்யாது போனாலும் எம் ஊரில் உள்ள தொடியணிந்த முன் கையையுடைய பரத்தையர் பலரும் தன்துறையூரனாகிய நினக்குப் பெண்டு எனக் கூறப்படும் சிறப்புப் பெறுமாறு மெல்ல மெல் ல நீங்கி ஒழுகுவாய்" என்று கூறினாள்

"தொண்டி நகரில் குளிர்ந்த புதிய மலரின் மணம் வீசும் தொடியையும், அழகியதாய் அகன்ற அல்குலையும், கொய்யப்பட்ட தளிர் போன்ற மேனியையும் உடையவளே! என் பண்பையும் உறக்கத்தையும் நின் தோழி கவர்ந்து கொண்டு என்னிடம் அவை இல்லாதவை ஆக்கினாள். ஆதலால் அவ்வாறு கொள்வதற்கு

யான் செய்த தவறுதான் யாது? என்று தலைவன் தோழியை நோக்கி வினவினான்.

### சங்கு வளையல்

வளையல், தொடி ஆகிய இரு வகையான அணிகள் குறித்த செய்தி பாடலில்

**கோடீர் எல்வளைக் கொழும்பல் கூந்தல்**
**ஆய்தொடி, மடவரல் வேண்டுதி ஆயின் -**
**தெண்கழி சேயிறாப் படூஉம்**
**தண்கடற் சேர்ப்ப! வரைந்தனை கொண்மோ[39]**

என இடம் பெறுகிறது.

தோழி தலைவனை நோக்கி, "சங்கை அறுத்துச் செய்த வளையையும், கொழுவிய கூந்தலையும், நுண்மையான தொடியையும் உடைய இவளைக் கூடுதல் வேண்டினானாயாயின், தெளிந்த நீரையுடைய உப்பங்கழியில் வேண்டுவார் கொள்ளுமாறு செவ்விய இரால்மீன்கள் அகப்படும் குளிர்ந்த கடல் நிலத்தலைவனே! வேறுவகை இல்லாமையால் மணந்து கொள்வாயாக!" என்று சொன்னாள்.

வளை சங்கினால் செய்யப்படுவது. தொடி சங்காலும் யானைக் கொம்பினாலும் செய்யப்படுவது. வளை வேறு தொடி வேறு என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

### நகை - அணி

அக்காலப்பெண்டிர் மணிகள் பதித்த நகையினை அணிந்தனர் அதனை,

**போதார் கூந்தல் இயலணி அழுங்க**
**ஏதிலாளனை நீ பிரிந்ததற்கே**
**அழலவிர் மணிப் பூண் அனையப்**
**பெயலாலானா என் கண்ணே தெய்யோ.[40]**

எனும் பாடல் கூறுகிறது. இதில் வரும் 'மணிப்பூண்' அனைய எனும் சொற்றொடரில் இதனைக் காணலாம்.

### மேகலை அணிதல்

தலைவியைப் பிரிந்து செல்ல இருக்கும் தலைவனுக்குத் தோழி தலைமகளின் பிரிவாற்றாமையைக் கூறிய பாடலில் அணி பற்றிய செய்தி இடம்பெறுகிறது.

வெல்போர்க் குரிசில் நீ வியன்கரன் இறப்பின்
பல்காழ் அல்குல் அல்வரி நாடக்
குழலினும் இனைகுவள் பெரிதே
விழவொலி கூந்தல் மா அயோளே[41]

தோழியே 'வெல்லும் போரை உடைய தலைவனான நீ அகன்ற பாலையைக் கடந்து சென்றதால் பல மணிகள் பொருந்திய மேகலை அணிந்த அல்குலிடத்து அழகிய வரிகள் வாட்டம் அடைய நினது பிரிவாற்றாமையால் மண விழாவைப் போல நல்ல மணம் கமழும் கூந்தலையும் மாமை நிறத்தையும் கொண்ட இவள் குழல் ஒலிப்பதைப் போன்று பெரிதும் அழுவாள்" என்று கூறிச் செல்வதைத் தவிர்த்தாள். இங்கு வரும் கால் மணிகள் முத்து வடமாடும். அவ்வரி அழகியவரி. வளவிய மகளிரின் வயிற்றிலும் குறங்கிலும் பொருந்தி அழகு செய்யும் வரிகள். இன்பம் நுகரும் காலத்தில் எழில் செய்யும் இவை து ன்பகாலத்தில் மேனி வாடித் தோல் சுருங்கும்போது அவ்வரிகள் மறைந்துவிடும்.

## விழாக் கூந்தல்

விழ வொலி கூந்தல் - விழாக்காலத்தில் போல நறுமணம் கமழும் கூந்தல். விழா என்றது திருமணவிழா

## பாண்டில் அணிதல்

பிரிந்து செல்ல இருக்கும் தலைவனுக்குத் தோழி நீ எண்ணியதை முடித்தாய் ஆயினும் இவள் அழகு மீட்டற்கு அரியதாகிவிடும் எனக் கூறிச் செலவழுங்குவித்த பாடலில் பாண்டில் அணியும் வழக்கம் புலப்படுகிறது.

போலம்பசும் பாண்டில் காசுநிரை அல்குல்
இலங்குவளை மென்தோள், இழை நிலைநெகிழப்
பிரிதல் வல்லுவை யாயின்
அரிதே விடலை இவள் ஆய்நுதல் கவினே![42]

தோழி தலைவனை நோக்கி, "தலைவ, பொன்னாற் செய்யப்பட்ட பசுமையான பாண்டிலைச் சுற்றி மணிகள் கோத்து அணிந்த அல்குலையும் விளங்கும் வளையலையும் மென்மையான தோளையும் உடைய இவள் அந்த அணிகள் நின்ற நிலையினின்று கழன்று நீங்க, நினது பிரிவால் இவளிடத்தினின்று நீங்கிக் கெடும் சிறு நெற்றியின் அழகு பெறுவதற்கு அரிது" என்று சொன்னாள்.

பாண்டில் என்பது பொன்னால் செய்யப்பட்ட ஒருவகை அணி, இதைச் சுற்றி மணிகள் கோத்து மேகலையுடன் அணிதல் வழக்கம். பொன்னால் ஆன பசுமையான வட்டக்காசுகள், பாண்டில் வட்டம் எனவும் உரைப்பர்.

தலைவியின் மெலிவிற்கு வருந்திய தலைமகன் பிரிந்து சென்றபோது தோழி கூறிய மற்றொரு பாடலிலும் பாண்டில் அணிகுறித்த செய்தி இடம் பெறுகிறது.

**பொன்செய் பாண்டில் பொலங்கலம் நந்தத்**
**தேரகல் அல்குல் அவ்வரி வாட**
**இறந்தோர் மன்றதாமே பிறங்குமலைப்**
**புல்லலையர் ஓமை நீடிய**
**புலிவழங்கு அதர கானத்தானே[43]**

தோழி, உயர்ந்த மலைப்பக்கத்தில் புல்லென்ற அடிப் பகுதியை உடைய ஓமை மரங்கள் நிறைந்த புலிகள் திரியும் காடு. அதில் பொன்னால் செய்யப்பட்ட பாண்டில் என்ற பொன்னணி நெகிழ, தேரின் தட்டைப் போன்ற அகன்ற அல்குலில் கிடந்த அழகிய வரிகள் வாட, நம்மைப் பிரிந்து சென்றார். அந்தப் பிரிவை ஆற்ற முடியுமா? என்று உரைத்தாள்.

பொன்செய் பாண்டில் பொலங்கலம் என்பது பொன்னால் செய்யப்பட்ட வட்டமான பொன் அணி. பொலங் கலம் பொலம் பொன். கலம் அணிகலம். பாண்டிலைச் சுற்றிக் கோக்கப்படும் பொன் காசுகள் இங்குப் பொன்னங்கலம் எனப்பட்டன. பாண்டில் வட்டம்: வட்டமான அணி எனவும் உரைக்கலாம்.

## சிலம்பு, கழல் அணிகள்

தலைவியைத் தேடிக் கொண்டு போன செவிலிவழிப் போக்கர்கள் தன் மகளைப் பற்றி வினவினாள். அவர்கள் தலைவன், தலைவியைக் கண்டதை உரைத்தனர். அப்பாடலில் சிலம்பு, கழல் குறித்த செய்தி இடம் பெறுகிறது.

“ஐயனே! என் கண் பாவை போல் ஆய்ந்து கொண்ட தொடியினைப் பூண்ட என் மகள், தொழில் வகையால் அழகுறச் செய்யப்பட்ட செறிந்த கழலினையும் வலிய தாளையும் கரிய தாடியையும் உடைய காளை போன்றவனுடன் மெல்ல நடந்து போனாள் என்று சொல்கின்றீர். அப்போது அவளுடைய அழகிய

சிலம்பை அணிந்த அடிகள் நிலத்தில் பொருந்தினவா? என்று செவிலித்தாய் வினவினாள்.

## தொடி அணிதல்

ஒண்தொடி அரிவை கொண்டனள், நெஞ்சே !
வண்டிமிர் பனித்துறைத் தொண்டி ஆங்கண்
உரவுக் கடலொலித் திரையென
இரவினானும் துயிலறியேனே. [44]

ஒளி பொருந்திய தொடியை அணிந்த அரிவையானவள் என் நெஞ்சைக் கவர்ந்து கொண்டாள் ஆகலின், வண்டுகள் ஒலிக்கும் குளிர்ந்த துறையையுடைய தொண்டி நகரத்துப் பரந்த கடலில் எழுந்து முழங்கும் அலைகளைப் போல் இரவிலும் உறக்கம் கொள்ளேன் ஆனேன்" எனப் பாங்கன் வினவத் தலைவன் சொன்னான்.

## தோள் அணி

தலைவன் நம்மைப் பிரியான் என எண்ணியிருந்தாள் தலைவி. ஆனால் அவன் பிரிந்தனன். அப்போது அவள் இரங்கிப் பாடுவதாக அமையும் பாடலில் தோளணி இடம் பெறுகிறது.

ஆய்நலம் பசப்ப அரும் படர் நலிய
வேய்மருள் பணைத்தோள் வில்லிழை நெகிழ
நசைநனி கொன்றோர் மன்ற – இசை நிமிர்ந்து
ஓடெரிநடந்த வைப்பின்
கோடுயர் பிறங்கல் மலையிறந்தோரே! [45]

தலைவி, "ஓசை மிக்குப் பலவிடத்தும் பரவிப் போகும் தீ எரிந்த இடத்தை உடைய முடிகளால் உயர்ந்து செறிந்த மலையைக் கடந்து சென்ற தலைவர், அழகிய என் நலம் கெட்டுப்பசலை பாயவும் அவர்மேல் உள்ள நினைவு வருத்துகிறது. ஆதலால் மூங்கில் போல் பருத்த தோளிடத்து அணிந்த ஒளி வீசும் மணிகள் கழன்று நீங்கவும் பிரிந்து, தன் உள்ளத்தில் எழும் விருப்பத்தைப் பெரிதும் அழித்துவிட்டார்!" என்று சொன்னாள்.

## செவ்வையான அணி

இப்பாடலில் மகளிர் செவ்வையான அணியினை அணிந்த செய்தி இடம் பெறுகிறது.

யாங்கு வல்லுநையோ – ஓங்கல் வெற்ப
இரும்பல் கூந்தல் திருந்திழை அரிவை

**திதலை மாமை தேயப்**
**பசலை பாயப் பிரிவு தெய்யோ.** [46]

இதில் வரும் திருந்திழை என்பதற்கு செவ்வையான அணி என்று பொருளாகும்.

## ஐவகை கூந்தல் அலங்காரம்

மகளிர் கூந்தலை நீளமாக வளர்த்தனர். அதனை அவர் நெய் பூசி அழகாக வாரிப் பின்னலாக, கொண்டையாக முடிப்பர். ஐந்து விதமாகக் கூந்தலை அமைக்கும் வழக்கம் அக்காலத்தில் சிறந்திருந்தது என்ற சொல்லாட்சி இதற்குச் சான்றாகும்.

**குழல், அழகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை**
**என்பன ஐம்பால் என நச்சினார்க்கினியார் கூறுவர்.** [47]

அசையும் இயல்பினையுடைய ஐம்பால் மயிரினையுடைய உப்பு வணிகத்தியர் என்று சிறுபாணூற்றுப்படை கூறும்.

**உளரியல் ஐம்பா லுமட்டிய ரீன்ற** [48]

முதுமகளிர் சங்கின் நிறத்தையுடைய வாரிவிடப்பட்ட தம் கூந்தலை முடித்துக் கட்டியிருப்பர்.

**இருங்கடல் வான்கோடு புரைய வாருற்றுப்**
**பெரும்பின் னிட்ட வானரைக் கூந்தலர்** [49]

திருமுருகாற்றுப்படையும் கூந்தலைக் கட்டப்பெறுவதைக் குறிக்கும்.

**கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செல்வரும்** [50]

சிறுபாணாற்றுப்படை வாழைப்பூவெனப் பொலிந்த ஓதியெனப்படும்.

**மால்வரை யொழுகிய வாழை வாழைப்**
**பூவெனப் பொலிந்த வோதி** [51]

இளமகளிர் பெரும்பாலும் கூந்தலைக் கீழே தொங்க விட்டனர். தோடியை அணிந்த மகளிர் சிறு புறத்தின் மேலே தொங்கவிட்டிருக்கும் பின்னல், பிடியினதுகை போன்றிருக்குமெனச் சிறுபாணாற்றுப்படையிலிருந்து அறியலாம்.

**பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்**
**தொடுக்கை மகடூஉ மகமுறை தடுப்ப** [52]

சிறுபுறத்தை மறைக்கும் கூந்தலை முல்லைப் பாட்டுக் குறிக்கும்

**குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து**[53]

விரித்து விடப்படும் பெண்களின் கூந்தல் அறல் மணலுக்கு உவமிக்கப் பெறுவது வழக்கம். தலைமகளின் வண்டுகள் தாவும் கூந்தல் வளப்பம் பொருந்திய நீர்த்துறைக்கண் உள்ள அறல் நீண்டு படிந்தாற் போன்ற நல்ல நெறிப்பை உடையதெனத் தலைமகன் பாராட்டுவான்.

**யானயந் துறைவோள் தேம்பாய் கூந்தல்**
**வளங்கொழு சோழ ருறத்தைப் பெருந்துறை**
**நுண்மண லறல்வார்ந்து அன்ன**[54]

சில நூல்களில் விரிக்கப்பெற்ற மயிலின் இறகுக்குக் கூந்தல் உவமிக்கப்படும். மெல்லிய தோளினையும் துகில் சூழ்ந்த அல்குலினையும் அசைந்த இயல்பினையுமுடைய மகளிர் அகிற் புகை உண்ணும்படியாக விரிந்த அலகையுடைய மெல்லிய கூந்தலை நீலமணிபோலும் மயிலினுடைய விரிந்த தோகை ஒக்கும் எனச் சிறுபாணாற்றுப்படை பகரும்.

**துகிலணி யல்குல் துளங்கியன் மகளிர்**
**அகிலுண விரித்த வம்மென் கூந்தலின்**
**மணிமயிர் கலாபம்** [55]

சிறந்த ஆரவாரிக்கும் மயிலினது மெல்லிய கூந்தலைப் பற்றிக் குறுந்தொகையும் கூறும்.

**கலிமயிற் கலாவத் தன்ன விவள்**
**ஒலிமென் கூந்தல்**[56]

நீராடியதன் பின்னர் மகளிர் கூந்தலுக்கு அகிற்புகை ஊட்டுவர். மணம் வீசுகின்ற அகிற்புகையும் சந்தனப்புகையும் நாறும் கருமணலைப் போன்ற கரிய கூந்தல் எனக் குறுந்தொகையும்,

**ஆரநாறு மறல்போற் கூந்தல்** [57]

சந்தனத்தின் நறிய மணத்தை வீசும் நன்னெடுங் கூந்தல் என மதுரைக்காஞ்சியும் கூறும்.

**நன்னெடுங் கூந்தல் நறுவிரை குடைய**[58]

நரந்தம்,

**நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்** [59]

வேங்கை,

பூதந் தந்த பொரியரை வேங்கைத்
தண்கமழ் புதுமலர் நாறு
அஞ்சில் ஓதி ஆய்மடத் தகையே[60]

வெட்சி,

கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சி
தளையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தல் [61]

குவளை,

குவளை நாறுங் குவளையிருங் கூந்தல் [62]

அடும்பு,

மாக்கொடி யடும்பின் மாயித ழலாரி
கூந்தன் மகளிர் கோதை[63]

மல்லிகை முதலிய பூக்களை இவர்கள் அணிவர். தண்மையும் அழகும் மணமும் மிக்க மலர்களாலான மாலைகளை இவர் அணிவர்.

நீர்திரண் டன்ன கோதை பிறக்கிட்டு[64]

மகளிர் உச்சியில் விளங்கும் மெல்லிய கருமையான கொண்டைகளைச் சுற்றி அழகிய பூமாலைகள் கட்டப்பெறுவனவெனக் குறிஞ்சிப்பாட்டுக் கூறும்.

பல்வே றுருவின் வனப்பை கோதையெம்
மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி[65]

நெய் பூசப்பெற்ற பாடல் மகளிரின் கூந்தலை தோக விழும் மழைத்துளிக்குப் புலவர் உவமிப்பர்.

ஐதுவி ழிகுபெய லழகுகொண் டருளி
நெய்கனிந் திருளிய கதுப்பின[66]

## களிமண் குளியல்

கூந்தலில் உள்ள எண்ணெய்ப்பசை சிக்கு முதலியன போகும் பொருட்டு களிமண்ணைத் தேய்த்துக் கொண்டு மகளிராடும் வழக்கு அக்காலத்தில் இருந்தது. இதனைச் சிற்றூர்களில் இன்றும் காணலாம். பெண்கள் தமது கூந்தலுக்கு இட்டு பிசைவதற்குக் களிமண்ணைக் கொண்டு வரும் பொருட்டுப் பொழிலுக்குச் செல்வர் எனக் குறுந்தொகையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

பாழிலே யாமெம்
கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்[67]

## வாசனைப் பொருட்கள்

பெண்கள் தம்மை அழகுப்படுத்தி கொள்வதிலும் சிறந்து விளங்கினர். அவர் மணம் மிக்க வாசனைத் திரவியங்களையும் மற்றும் அழகு பண்ணற்குரிய பொருட்களையும் பயன்படுத்தினர். மகளிர் வழங்கிய புனுகு முதலியன நாறும் நாற்றம் தெருக்களெல்லாம் மணக்கும்.

பூந்தோடி மகளிர்
மணங்கமழ் நாற்றந் தெருவுடன் கமழ[68]

உடம்பின் மேற்பாகத்தில் சந்தனம் குங்குமம் முதலியவற்றைக் குழம்பாகப் பூசி, அதன் மேலே இலை பூ முதலிய சித்திரங்களை வரைவர். இச் சித்திரம் தொய்யில் எனப்படும்.

இரந்தோ ருளர்கோறேழி திருந்திழைத்தத்
தொய்யில் வனமுலை[69]

இச்சித்திரங்களுக்குப் பதிலாக வேங்கைத் தாது பரப்புவதுமுண்டு. தோற்றம் செய்து எழுந்த தலைமகளின் அழகிய முலை நிறம் பெறத் தலைமகன் அதில் தொய்யில் எழுதுவான்

உருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொய்யில்[70]

தொய்யில் எழுதிய மகளிரின் முலை சுணங்கு தோற்றியிருப்பதை மதுரைக்காஞ்சி கூறும்.

சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை[71]

திண்ணிய வயிரம் பொருந்திய நறிய சந்தனத்தை அரைத்த பொலிவு பெற்ற நிறத்தைக் கொண்ட குழம்பைக் கொங்கினது குவிந்த அரும்பையொத்த இளமுலையிலே மருதப்பூவை அப்பினாற் போல அப்புவர். அப்பி, அவ்வீரம் உலர்வதற்குமுன் விரிந்த மலரையுடைய வேங்கைப் பூவினது தண்ணிய தாதையும் அதன்மேல் அப்புவர்.

நுண்பூ ணாகந் திளைப்பத் திண்காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர[72]

சுணங்கு மிக்க அழகிய முலையிலே பொரியை ஒத்த பூக்களையுடைய நன்கினது அழகுமிக்க ஒள்ளிய தளிரை அப்புவர்.

பொரிப்பூம் புன்சி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி[73]

காமனது வில்லாகிய கரும்பின் உருவத்தைக் குங்குமக் குழம்பால் மகளிர் தோளில் எழுதும் வழக்கமும் இருந்தது. அம்பெழுதிய தொய்யிலையுடைய பருத்த தோளைப் பற்றிக் குறுந்தொகை கூறும்.

உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்[74]

## பொன் அணிகள்

பொன், வெள்ளி, சங்கு, முத்து முதலியவற்றால் இழைத்த அணிகளை அக்கால அரிவையர் அணிந்தனர். விழாக் கண்டுகளிக்கும் மகளிர், ஒலிக்கும் மணிகள் பொருந்திய பொற்சிலம்புகளையும் மற்றும் இலைகளையும் அணிந்திருந்தரென அறிகின்றோம். அவர் அணிந்த இழைகள் தீயினாற் சுடப்பட்டு மிளிரும் பொன்னாலானவை. அவைகள் சித்திர வேலைப்பாடு அமைந்தவை.

நாண்மகி ழிருக்கை காண்மார் பூணொடு
தெள்ளரி பொற்சிலம் பொலிப்ப வொள்ளழற்

றாவற விளங்கிய வாய்பொ னவிரியிழை
அணங்குவீழ் வன்ன பூந்தொடி மகளிர்[75]

அரத்தினாற் போழ்ந்து அறுக்கப்பட்டவை,

அரம்போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை[76]

காதணிகளும் மகளிர் திருமுகங்களைச் சிறப்பிக்கும் பண்பினவாய் விளங்கின. ஆய்மகளிரின் துயல் வரும் சிறு குழையைப்பற்றிப் பெரும்பாணாற்றுப்படை பாடுகின்றது.

சிறுகுழை துயல்வருங் காதில்[77]

பொலிவுற்ற மகரக் குழையின் அசைவினைப் பொறுக்கும் காது என்று பொருநராற்றுப்படை குறிக்கின்றது.

பூங்குழை யூசற் பொறைசால் காதின்[78]

நூலாற் கட்டாத நுண்மையையுடைய பொன்னரி மாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத்தோடு பாடினி சூடுவள்.

நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணிய[79]

முத்துமாலையைப் பற்றிய செய்திகள் நெடுநல்வாடையிற் காணலாம்.

ஆரந் தாங்கிய வலர்முலை யாகத்து[80]

அரும்பு மிகுந்த கொன்றையில் இலங்கும் பணித்துளியென ஒளிசிறந்த மணிகள் விளங்கும் மேகலைகளை மகளிர் தம் இடையில் அணிவர். பொன்னாற் செய்த கொடியினை முன்கையில் அணிவர்.

பொலந்தொடி நின்ற மயிர்வார் முன்கை[81]

கணவரைப் பிரிந்த மகளிர் வலம்புரியை அறுத்துப் பண்ணின வளையை இடுவர். வாளை மீனினது பகுவாயை ஒத்த சிவந்த நிறத்தையுடைய மோதிரத்தைப் பெண்கள் அணிந்திருந்தனர். இதனை

வலம்புரி வளையொடு கடுகைநூல் யாத்து[82]

என்னும் பாடல் வரி மூலம் அறியலாம்.

## குறிப்புகள்

1. புறம். 383; 9-11
2. மேலது. 377; 18-19
3. மேலது. 274;1
4. மேலது. 275;1
5. மேலது. 299;1
6. மேலது. 125;1
7. மேலது. 326;5
8. பெரும்பாணாற்றுப்படை 469
9. பட்டினப்பாலை 107

10. பரிபாடல் 12:17
11. அகம். 2
12. நற்றிணை, 382
13. புறம். 22 14-15, 120;13
14. மேலது. 86;1
15. மேலது. 390;7
16. மேலது. 53;2
17. மேலது. 373;11
18. மேலது. 341;5
19. மேலது. 11
20. மேலது. 118;2-3
21. ஐங்., பா.195
22. மேலது, பா.374
23. கலித்தொகை 85: 1-11
24. புறம் 374:9
25. குறுந்தொகை 7:12
26. புறம், 77:1-7
27. நற்றிணை – 97
28. புறம் 32: 4-5
29. மேலது: 44:4-8
30. குறுந்தொகை 312
31. புறம் 97:23
32. பரிபாடல் 6:17
34. அகம் 383:13
35. குறிஞ்சிப்பாட்டு 107-110
36. ஐங் பா.20
37. மேலது, பா.25
38. மேலது, பா.83
39. மேலது, பா.196
40. மேலது, பா.232
41. மேலது, பா.306

42. மேலது, பா.310
43. மேலது, பா.316
44. மேலது, பா.172
45. மேலது, பா.318
46. மேலது, பா.231
47. சீவக., பா. 2437 உரை
48. சிறுபாண்
49. மதுரைக்., வரி., 407 – 408
50. திருமுருகு., 29
51. மேலது., 21-22
52. மேலது., 191-192
53. முல்லை., 45
54. குறுந்., 116
55. சிறுபாண்., வரி., 261-264
56. குறுந்., 225
57. மேலது., 286
58. மதுரைக்., 552
59. குறுந்., 52
60. அகம்., 365
61. குறுந்., 209
62. மேலது., 300
63. நற்., 145
64. மதுரைக்., 561-562
65. குறிஞ்சி., 103 – 104
66. சிறுபாண்., 13-14
67. குறுந்., 113
68. மதுரைக்., 446-447
69. நற்., 225
70. குறுந்., 276
71. மதுரைக்., 415-416
72. திருமுருகு., 32-36

73. நற்., 9
74. குறுந்., 384
75. மதுரைக்., 443-446
76. மதுரைக்., 316
77. பெரும்., 161
78. பொருந்., 30
79. மேலது., 161-162
80. நெடுநல்., 136
81. மேலது., வரி., 142
82. சிலம்பு நா. செல்வராசு., வள்ளுவப் பெண்ணியம்., ப. 94
83. நெடுநல்., 137

# 3. தொழில்சார் பழக்கவழக்கங்கள்

ஒரு சமூகம் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளவும், பிற சமூகத்திலிருந்து தன்னை வெளிப்படுத்திக் கொள்ளவும் அச்சமூகம் தொலைநோக்குத் திட்டங்களைத் தன்னுள் கொண்டு செயல்படுதல் இன்றியமையாததாகிறது. மக்களின் எதிர்கால வாழ்வினையும், சமூக முன்னேற்றத்தையும், சமுதாய வல்லமைத் தன்மையையும் கருத்தில் கொண்டு, அவ்வெண்ணத்தின் அடிப்படையில் தொலைநோக்கோடு சிந்தித்து, அச்சிந்தனைகளைச் செயல்படுத்தும் பொழுதுதான் எந்த ஒரு சமுதாயமும் உலகில் இனங்காணப்படுகிறது. அச்சமுதாயமே உலகின் பிற சமுதாயத்தை வழிநடத்தும் வல்லமை பெறுகிறது. தொலைநோக்குச் சிந்தனைகளும் செயல்பாடுகளும் இல்லாத எந்த ஒரு சமூகமும், தன் அடிப்படைத் தேவைகளை நிறைவுசெய்யவே அன்றாடப் போராட்டத்தில் ஈடுபட வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்படுகிறது. உலக அரங்கில் புறக்கணிக்கப்படுகிறது. பிற சமூகத்திடம் கையேந்தும் நிலையினைப் பெறுகிறது. மாலுமி இழந்த கப்பலாய் வழியறியாது தத்தளிக்கிறது. இத்தகு நிலையால் சமூகத் தொலைநோக்கின் தேவை இன்று பரவலாக வலியுறுத்தப்படுகின்றது.

'மனிதன் சென்ற காலத்தில் கிடைத்த பட்டறிவால் நிகழ்காலத்தை எண்ணி நாளைய எதிர்காலம் எப்படி அமைய வேண்டும் என்று சிந்தித்தல் எதிர்காலவியலாகிறது. சிந்தித்தல் என்ற இந்நிலையிலிருந்து அடுத்த நிலைகளான, திட்டமிடுதல் மற்றும் செயல்படுதல் என்ற நிலையில் வைத்து தொலைநோக்கு எண்ணப்படுகிறது. தொலைநோக்கு எதிர்கால நன்மையைக் கருத்தில் கொண்டு அமைகிறது.

இத்தகைய தொலைநோக்குத் தொடர்பான சிந்தனைகளையும், திட்டங்களையும், செயல்பாடுகளையும், இவற்றைச் செயல்முறைப்படுத்திய ஒரு சமூகத்திடம் இருந்து பெறுவது சாலச்சிறந்தது. அவ்வகையில், 'யாது மூரே யாவருங் கேளிர்'[1] என்ற மிகச்சிறந்த தொலைநோக்கோடு வாழ்ந்த பழந்தமிழரின் வாழ்வியல் களஞ்சியமாக விளங்கும் புறநானூற்றில் இருந்து இவற்றை வெளிக்கொணரலாம்.

## அடிப்படைத் தேவைகளின் தன்னிறைவு

மக்களின் அடிப்படைத் தேவைகளாக முன்னிறுத்தப்படுபவை உணவு, உடை, உறையுள் என்ற மூன்றும், நாடு தன்னளவில் முன்னேற்றம் அடைந்ததற்கான அளவுகோல். இம்மூன்றில் நிறைவை எட்டுவதற்கான முயற்சியில் ஈடுபட்டமை புறநானூற்றின் வழி புலனாகிறது. இவைகளின் தேவைகளில் சில நிறைவுறா காட்சிகள் காணப்பட்டாலும், இவற்றை நிறைவு செய்வதற்கான சிந்தனைகளும் அதன்வழிச் செயல்பாடுகளும் சிறப்பிடம் பெறுகின்றன.

பழங்கால மக்கள் பல தொழில்களையும் செய்திருந்தனர். இவற்றில் மகளிர் சிறுதொழில் செய்து வாழ்ந்துள்ளனர். மக்கள் வாழும் நிலத்திற்கு ஏற்ப அவர்களின் வாழ்வோடு தெடர்புடைய அனைத்து நிகழ்வுகளும் நடைபெற்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நிலப்பகுதியில் வாழ்ந்த மகளிர் பல்வேறு தொழில் செய்துள்ளதை வரிசைப்படுத்திக் கூறப்படுகிறது.

குறிஞ்சி நிலத்தலைவன் தான்வேட்டையாடிய மான் கறியினைப் பிறருக்கும் கொடுத்தான். முல்லை நிலத்தில் தயார் செய்த தயிர், மோர் ஆகியவற்றைப் பெற்றான். இதனை,

"...........ஆய்மகள்
தயிர் கொடு வந்த தசும்பும்"[2]

என இப்பாடலில் கூறப்படுகிறது. முல்லை நில மகளிர் தங்கள் வீட்டில் செய்த தயிரைக் குறிஞ்சி நிலத்தில் கொண்டு சென்று விற்றனர். அவ்வாறு விற்றதற்குக் குறிஞ்சி நிலத் தலைவன் கொடுத்த மான் கறியினைப் பெற்றாள் என்பது "தயிர் கொடு வந்த தசும்பும்" என்ற வரியின்மூலம் புலப்படுகிறது. மேலும் ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு இணையாக வாங்கும் பண்ட மாறறு முறையும் நடந்திருப்பதும் அறியப்படுகிறது.

"ஆய மகளிர் தாம் கடைந்த தயிரைப் பானையில் வைத்து மெல்லிய சுமட்டிமேல் தலையில் வைத்து வீடு வீடாகச் சென்று விற்றனர்"[3] என்று வே.தி. செல்வம் "தமிழக வரலாறும் பண்பாடும்" என்ற நூலில் குறிப்பிடுவதும் மேற்கூறும் கருத்திற்குத் துணையாக அமைகின்றது.

ஆநிரைகளைக் கவர்ந்து வருகின்றனர். கூட்டமாகச் சென்று இரவுப் பொழுதில் கவர்ந்து வந்த ஆநிரைகளை, பொழுது புலரும் முன் பகிர்ந்தளித்தான். இதனை,

"வெண்கோள் தோன்றாக் குழிசியொடு
நாள்உறை மத்து ஒலிகேளா தோனே" [4]

என்பது பாடல்மூலம் விளங்கும். இரவு நேரம் முடிந்து பொழுது புலரும்முன், அதிகாலையில் பறவைகளின் ஒலிகேட்டு ஆய மகளிர் தயிரைக் கடைந்தனர். அதனால் ஒலி எழும். இதற்குமுன் பசுக்களைப் பகிர்ந்தளித்தான் என்று கூறப்படுகிறது.

இப்பாடலில் "நாள் உறை மத்தொலி" என்ற வரியிலிருந்து அதிகாலையில் பெண்கள் தயிர் கடையும் தொழில் செய்தனர் என்பது புலப்படுகிறது. "ஆயர் பெண்கள் விடியற்காலை பறவையுடன் எழுந்து மத்தால் தயிர் கடைந்தனர்"[5] என்ற வே.தி. செல்வம் தமிழக வரலாறு பண்பாடும் என்ற நூலில் கூறும் செய்தியிலிருந்து இக்கருத்திற்கு அரண் சேர்ப்பதாக அமைகின்றது. கவையாகப் பிளந்த கதிரினைக் கொண்டது வரகு. இந்த வரகினைக் குற்றி அரிசியாக்கிச் சோறு சமைத்தனர். வேளைச் செடியின் வெள்ளிய பூவினைத் தயிரில் இட்டுச் சமைத்த அழகிய புளித்த கூழையும் உண்டனர் என்பதை,

"கவைக்கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்
தாதுஎரு மருகின் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்தயிர்க் கொளீஇய
ஆயமகள் அட்டம் அம்புளி மிதவை" [6]

என்ற பாடலில் உணர்த்தப்படுகிறது. இப்பாடலில் அவைப்புறு வாக்கல்", "வெண் வெண்தயிர்க் கொளி அட்டம் அம்புளி" என்பது வரகைக் குற்றி அரிசியாக்கியதும், வெண்தயிரில் வெண்பூ சேர்த்துப் புளிக்கூழ் தயாரித்தவற்றையும் ஆயர் மகள் செய்ததாக உணர்த்தும் வரிகளாகும். மகளிர் உணவுக்கான வரகு குற்றல் தொழில் தயிர் கடைந்து புதிதாக உணவு (கூழ்) தயாரித்தல் போன்ற தொழிலைச் செய்துள்ளது உணர்த்தப்படுகின்றன.

மருத நிலத்திலுள்ள பழைய வேலியைச் சார்ந்த காடுகளில் காட்டுப் பூனையைக் கண்டு அஞ்சி நடுங்கியது இளம் பேடை. நடுக்கத்தைத் தவிர்க்கவும், பூனையைக் விரட்டவும் நினைத்து, பருத்தியிலிருந்து நூல் நூற்கும் பெண்ணின் வீட்டிலிருந்த சிறிய தீயாகிய விளக்கின் ஒளியில் முருங்கை இதழ் போன்ற கொண்டைச் சேவலிடம் பேடை சேர்ந்து நடுக்கத்தைக் கைவிட்டது. என்பதனை,

"ஊர்முது வேலிப் பார்நடை வெருகின்
இருட்பகை வெரீஇய நாகுஇளம் பேடை
உயிர் நடுக்குற்றுப் புலாவிட்டு அரற்ற,

சிறையும் செற்றையும் புடையு நள்எழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து
கவிர்ப்பூ நெற்றிச் சேவல் தணியும்"[7]

என்ற பாடல் உணர்த்துகிறது. இப்பாடலில் "புடையு நள் எழுந்த பருத்திப் பெண்ன்" என்ற வரியிலிருந்து பெண் தன்னுடைய வீட்டில் பருத்திப் பஞ்சு கொண்டு அதிலிருந்து நூல் நூற்கும் நெசவுத் தொழில் செய்தவற்றை உணர்த்துகிறது. இரவு நேரங்களிலும் பெண்கள் நெசவுத் தொழிலை செய்துள்ளனர் என்பது இதன் வழி அறியும் செய்தியாகும்.

அரணைச் சூழ்ந்து நின்ற பகைவரோடு போர் செய்தற் பொருட்டு பூக்களைத் தலையில் சூடுமாறு ஏவுதலைச் செய்யும் தண்ணுமைப் பறை அறையப்பட்டது. பூக்கோட்பறை அறையப்படும் வரையம் தாமதிக்காமல் வீரர்கள் விரைந்து சென்றனர். வீரர்கள் போருக்குச் சென்றதால் அவர்களின் மனைவியர் பூக்களைத் தலையில் சூடமாட்டார்கள். இதனால் பூவிற்கும் பெண்டிர் பிறமகளிர் வாழும் மனைகட்குச் செல்கின்றாள் என்ற கருத்து.

நாண் உடை மாக்கட்கு இரங்கும் ஆயின்
எம்மினும் பேர்இழந்து வினை எனப்
பிறர்மனை புகுவாள் கொல்லோ...........
அளியள் தானே பூவிலைப் பெண்டே![8]

இப்பாடலில் விளங்கும் "அளியள் தானே பூவிலைப் பெண்டே" என்ற பாடல் வரியில் குடும்பமாக வாழும் மகளிருக்குப் பூக்களைக் கொண்டு சென்று விற்றனர் என்ற கருத்து உணர்த்துகிறது. போருக்குச் சென்றுவிட்ட தலைவனின் மனைவியாகிய பெண்கள் பூச்சூடுதல் இல்லை. ஆகையால் போருக்குப் போகாத பார்ப்பார், மக்கட்பேறு இல்லாதார் போன்றோர் வாழும் வீடுகளுக்குச் சென்றாள் என்பது அறியப்படுகிறது.

சோறாக்கும் பெண்கள் முகந்து கொணர்ந்து அளக்கப்படாத வெண் நெல்லை பூணிடப்பட்ட பருத்த உலக்கையால் குற்றி உண்டான அரிசியைச் சோறாக்கினர். பின்னர் மாமரத்தின் கனியைப் பிசைந்து புளிக்குழம்பாக்கினார். சுறாமீனின் குழம்பும் சமைத்தாள். இவ்வாறு சமைத்துக் கொண்டுவரும் உணவைக் களத்தில் வேலை செய்பவர்கள் உண்ணாமல் கள் உண்டு மயங்கிடுவர்.

"அடுமகள் முகந்த அளவா வெண்ணல்
தொடிமாண் உலக்கைப் பருஉக்குற்று அரிசி"[9]

என்ற வரிகள் பெண்கள் நெல்லை அரிசியாக்கும் நெல் குற்றல் வேலையைச் செய்துள்ளனர் என்பதைப் புலப்படுத்துகிறது. நெல் என்று வந்தமையால் இப்பாடல் மருத நிலப்பாடல் என்பதும் இங்கு வாழும் மகளிர் நெல் குற்றல் தொழில் செய்தனர் என்பதும் அறியப்படுகிறது.

## சங்ககால உழவுத் தொழில்

சங்ககால மக்களின் வாழ்க்கை அகம், புறம் எனப் பாகுபடுத்தப்பட்டிருந்தது. இவ்விரு திணைப்பாகுபாடுகளும் மக்கள் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையனவாய் இருந்தன. ஓவ்வொரு நிலப்பகுதியிலும் வாழ்ந்த மக்கள் இயற்கைச் சூழலோடு அந்நிலத்தின் இயல்புகளுக்கேற்றவாறு அவர்களின் வாழ்வை அமைத்துக் கொண்டனர். தொல்காப்பியர் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பிரித்தார். இவற்றில் மருதம் என்பது வயல் சார்ந்த இடமாகும். அந்நிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவுத் தொழிலை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர். அகப்பாடல்களைப் போலவே புறப்பாடல்களும் மருதநில மக்களின் வாழ்வியல் நெறிகளை விரிவாய் எடுத்தியம்புகின்றன. பொதுவாக, மருதநில மக்களின் வாழ்க்கை வளர்ச்சியடைந்த நிலையிலேயே காணப்பட்டன. மருதநிலப் பொருளாதார மேம்பாடு மருதநிலச் சமுதாயத்தின் நாகரிக வளர்ச்சிக்கும் பேரளவில் துணைபுரிந்துள்ளது. மருதநிலச் சமுதாயத் தலைவர்களான மூவேந்தர்களைப் பற்றிய பாடல்களில் மருதநில வாழ்வின் செழுமை பலபடப் பாடப்பட்டுள்ளது. காட்டுக் கோழி தினைப்புனத்தைக் காப்போரைத் துயிலெழுப்பக் கூவும் இயல்பினதான காட்டில் வாழ்பவர் நின் பகைவர் உனது நாடோ வயலின் வேலிப்புறத்தில் நின்று வேண்டுவோர்க்கு அறமென்று கருதி மருத நிலத்தில் வாழ்பவர் பிடுங்கி எறியும் கரும்பானது குளங்களில் உள்ள தாமரைப்பூ சிதையும்படி விழ அது கூத்தரின் ஆடுகளத்தை ஒத்துத் தோன்றும்[10] என மருத நிலத்தின் பெருமை பாடப்பட்டுள்ளது. நெல்லரிசியுடன் வினைஞர் கொண்ட வாளை மீன், உழவர் கொண்ட ஆமை, கரும்பு வெட்டுவோர் எடுத்த தேன், பெரிய துறைகளிலிருந்து நீர் எடுத்து வரும் பெண்டிர் பறித்தெழுந்த செங்கழுநீர் எனும் இவற்றை வன்புலத்திலிருந்து வந்த விருந்தினர்க்குக் கொடுக்கும் மருத ஊர்களைக் கொண்ட நல்நாட்டு வேந்தன் எனவும் மருத நில வளமும் வாழ்வின் மேன்மையும் காட்டப்பட்டுள்ளது.

உழவுத் தொழில் என்பது மனித சமூக வாழ்வில் கண்டுபிடிக்கப்பட்ட அரிய முதன்மையான அறிவியல் ஆகும். மண்ணில் பயனை ஆக்கப்பணிக்கு மனிதன் உருமாற்றிய நாகரிகம்

உழுதொழிலாகும். கைவன்மையோடு உழுத்தொழில் நடத்தும் பெற்றி அறிந்த சமுதாயமாக அது விளங்கியது.

> **"கைவினை மாக்கள்தம் செய்வினை முடியாமல்**
> **சுரும்புண மலர்ந்த வாசம் கீழ்ப்பட**
> **நீடின வரம்பின் வாடிய விடினும்"** [11]

என வரும் வரிகளில், வாசம் மிகுந்த மலராக இருந்தாலும் பயிர் நடுவே அது மலர்ந்தால் களைதான் என்று கருதி அதைப் பிடுங்கி வரப்பில் வாடுமாறு காயப்போடும் களைபறித்து நடத்தும் உழவின் செயலைக் காணலாம்.

ஒரு நாட்டின் வளத்தை விளக்க, புலவர்கள் மலை, அருவி, ஆறு, கடல் என்று மட்டும் நில்லாது அந்நாடு பெற்றிருக்கும் மண்ணின் வளத்தையும் கொண்டு சிறப்பித்துக் கூறுவர்.

பண்டை மன்னர்கள் தாங்கள் மண்ணைப் பெறும் பேற்றாக எண்ணினர். தன்னுடைய ஆட்சி சிறப்புற அமையவும் மக்களின் வாழ்வு மேம்படவும் உழவைக் காக்கப் புறநானூறு வலியுறுத்துகிறது. அக்காலத்தில் உழவுத் தொழிலைப் பெரிதென எண்ணினர். மழை பெய்யும் காலத்தில் பெய்யாமற் போனாலும் விளைவு குன்றினாலும் இயல்பாக அமையாதன மக்களின் செய்கையால் தோன்றினாலும் இந்த இடமகன்ற உலகு அரசரைப் பழிக்கும். நீயும் அயலாரின் பழிச்சொற்களைக் கொள்ளாதும் ஏரைப் பாதுகாத்து உழவு புரிவோர்தம் இடியைக் காத்தும் அதனால் நின் குடிமக்களையும் காத்துவருவாய் அவ்வாறாயின் நின் பகைவரும் நின்னடியைப் போற்றி விளங்குவர் என்று நாகனார் எனும் புலவர் சோழன் கிள்ளி வளவனுக்கு அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளது. இதில் உழவினால் உண்டாகும் பயனே வெற்றிக்குக் காரணம் என்பதை,

> **பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை**
> **ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே**
> **மாரிபொய்ப்பினும் வாரி குன்றினும்**
> **இயற்கை அல்லன் செயற்கையில் தோன்றினாலும்**
> **காவலர் பழிக்கும் இக்கண் அகல்ஞாலம்** [12]

இதன்மூலம் மருத நிலத்து மக்கள் மாண்பினையும் மக்கள் விருந்தோம்பலையும் சித்திரித்துக் காட்டுகிறார். இடைக்காடனார் எனும் புலவர் உனது நாடு நெல் அறுப்பவர் நீரின் கடை மடையில் கொண்ட வாளை மீனையும் உழுவோர் படைவாளால் மறிக்கப்பட்ட ஆமையையும், வன்மையான நிலங்களுடைய ஊர்களிலிருந்து வரும் சுற்றத்தாருக்கு விருந்து வழங்குவார் எனக் குறிப்பிடுகிறார்.

கீழ்மடைக் கொண்ட வாளையும், உழவர்
படைமிளிர்ந்திட்ட யாமையும், அறைஞர்
கரும்பில் கொண்ட தேனும் [13]

பகைவரின் மதில்களை அழித்துக் கழுதை ஏர் பூட்டி வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்தல் மன்னர் செயல்களாய் இருந்ததைப் புறநானூறு காட்டுகிறது. இந்நிலையில் மருத நிலத்தின் பெருக்கத்தைக் கீழ்க்கண்ட பாடல் வலியுறுத்துகிறது.

முழுங்கு மந்நீர் முழுவதும் வளைகிப்
செல்லுமு லகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி........ [14]

இப்பாடல் சுவர்க்கம் அடைதல், தான் ஒருவன் மட்டுமே நாட்டை ஆளுதல், இவ்வுலகத்தில் மிகுந்த புகழை நிலை நிறுத்துதல் எனும் மூன்றிற்கு அடிப்படையாவது மருத நிலமே. ஆதலால், நீரைத் தடுத்து நிறுத்தி நீர்நிலைகளைப் பெருக்க வேண்டும் என மருத நிலப் பொருளாதாரத்தை வலியுறுத்துகிறது.

“வேளாண் பொருளாதாரமும் மருதநிலப் பெருக்கமும், வேந்தர்களின் வளர்ச்சியில், உருவாக்கம் சுழலில் புன்செய் நில வேளாண்மையும், புன்செய் விளைபொருள்களும், புன்செய் நிலப்பகுதிகளை ஆள்வோரும் மதிப்பிடுகின்றன. மருத நிலம் மேன்மையானதாய்ப் புகழப்பெறுகின்றது”[15] என்று பெ.மாதையன் குறிப்பிடுகின்றார்.

வன்புலக் கேளிருக்கு வருவிருந் தயரும்
மென்புல வைப்பினன் னாட்டுப் பொருந[16]

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் மருதநில வளம் உடையவனாய்க் காட்டப் பெறுவதுடன் வன்புலத்தவர் விருந்தினராய் வந்ததும் காட்டப் பெறுகிறது.

சங்ககாலத்தில் மருதநிலத் தலைவன் தங்களை வேந்தர் என அழைத்தனர். வம்ப வேந்தர் எனப்பெறும் மூவேந்தர் நெய்தல் நிலப்பகுதியையும், மருத நிலப்பகுதியையும் அடிப்படையாய்க் கொண்டு ஆண்டு வந்தனர்.[17] இயற்கைவளம் மிகுந்த மலைப் பகுதிகளும் இவர்களால் கவரப்பட்டுப் பொருளாதாரப் பெருக்கத்திற்கு அடிப்படையாய் அமையும் நிலப்பகுதிகள் எல்லாம் இவர்களின் ஆளுமைக்கு உட்படுத்தப்பட்டிருந்தன.

தண்பொரு நைப்புன் பாயும்
விண்பொரு புகழ்விறல் வஞ்சிப்
பாடல் சான்ற விறல்வேந்தன்[18]

பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டோடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே [19]

என இவர்களின் மருதநில வளமும் சார்பும் பாடப்பட்டுள்ளன.

## உணவே உயிர்

நீரும் நிலமும் முறையே உடலும் உயிரும் போன்றது. இவ்விரண்டும் படைத்தோர் அறம் முதலிய மூன்றும் படைத்தோர் ஒத்த சிறப்பினராகக் கருதப்பட்டனர். இதேகருத்தைக் குறளும் வலியுறுத்துகிறது.

நீர்இன்றி அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்
வான்நின்று அமையா தொழுக்கு[20]

மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே[21]

என மணிமேகலையாலும் அறியலாம். உடல் உணவால் அமைவது எனும் கருத்தில் உணவின் பிண்டம் என்று கூறப்பெற்றது.

நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவு எனப்படுவது நிலத்தோடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்தி னோரே[22]

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் சோழன் முடித்தலை நற்கிள்ளியை வாழ்த்தும்போது அவன் நாட்டின் பெருமை வெளிப்படும்படியாக வயலில் நெற்சூட்டோடு மயிற்பீலியையும் திரட்டிச் சூடு தட்டும்படியான ஒரு காட்சியை வருணிக்கிறார். இதில் வேளாண் மக்களின் வளத்தை வேந்தன்மேல் ஏற்றிக் கூறுவது மேழித் தொழிலிடத்துப் புலவருக்குள்ள சமூக விழிப்புணர்ச்சியை வெளிக்காட்டுகிறது.

பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டோடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே[23]

என்ற பாடல்மூலம் அறியலாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடி கிழார் போற்றிப் பாடும்போது மழை நீரை உண்டு மீண்டும் மழையாகப் பெய்து ஆறு, குளம், அணை என முந்நீராகப் பிரிந்து கிடக்கும் வேளாண் தொழிலுக்குப் பயன்படுத்திக் கொள்ளும்படியான அமைப்பினைப் பெற்ற நாடனே எனக் கூறுகிறார்.

வெள்வாய் கழுதைப் புல்இனம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்
வைகல் உழவ [24]

ஆக மக்களின் அடிப்படை வாழ்விற்கு இன்றியமையாதது உழவுத் தொழில் என்பது இங்குப் பல இடங்களில் வலியுறுத்தப்படுகிறது

## நெய்தல் நிலத் தொழில்

நெய்தனிலத்துள்ள ஊர்கள் சிறு நல்லூரெனவும் பாக்கமெனவும், பட்டினமெனவும் கூறப்படும். நெய்தனிலத் தலைவன் சேர்ப்பன். புலம்பன், துறைவன் என அழைக்கப்படுவான். நெய்தனில மக்கள் பொதுவாக நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர் எனப் பெயர் பெறுவர். பரதவர் திமிலில் சென்று பலவகை மீன்களையும் வலையால் பிடிப்பர். வலையை இறுக்கிக் கட்டப் பெருங்கயிறுகளை உபயோகிப்பர். வலையைக் கட்டும் கோலும் அவர்களிடமுண்டு. இராக்காலங்களில் சூழ்கொண்டு சென்று மீன் வேட்டமாடுவர். பெருங்காற்றடிக்குஞ் சமயங்களிலும் அவர்கள் கடலிடை அகப்படுவதுண்டு. அவர்களுடைய வலையை அடிக்கடி சுறாமீன் கிழிப்பதுண்டு. அவர்களைக் கூட அக்கோட்டு மீன் கிழிக்கும். சுறாமீனை எறியுளியால் கொல்லுவார்கள். எறியுளிபட்ட சில சுறாமீன்கள் சிறிது நேரம் துடிதுடித்துக் கொண்டு கடலைக் கலக்கும். அவற்றினின்று பாயும் இரத்தம் கடல் நீரின் நிறத்தையும் மாற்றி விடுமாம். சுறாமீன் கடற்கரையில் திரியும் கோவேறு கழுதை முதலியவற்றிலும் பாய்ந்து அவற்றையுங் காயப்படுத்தும். ஆயிலை இறால் முதலிய பலவகை மீன்களைப் பரதவர் பிடிப்பார்கள். மீன் வேட்டை நன்றாய் வாய்த்தால் தம் வலையைக் பாராட்டி அயிலைமீனை யாவருக்கும் வரையாது வழங்கி வாழ்வர். மீன் வேட்டை முடிந்து வந்தவுடன் தாம்கொண்டு வந்த மீன்களில் பலவற்றை, இரப்போருக்கு அவர்தம் பிச்சைப் பாத்திரம் நிறையக் கொடுக்கும் வண்மையுமுடையர். இரவலர்க் கீந்தபின் மிகுந்தவற்றைப் பல கூறாக்கி விற்பர். எஞ்சும் மீன்களை வெயிலில் உலர்த்திக் கருவாடாக்குவர். இக்கருவாடு ‘மீன் தடி’ எனக் கூறப்படும். பரதச் சிறுமியர் கருவாடுகளைப் புட்கள் தூக்கிச் செல்லாவண்ணம், அவை

உலருமிடங்களிலிருந்து காவல் புரிவர். பரதவர் பிடித்துவரும் மீன்களைத் தங்கையர் தெருத்தொறும் கொண்டு சென்று விற்பதும் வழக்கம்.

உப்பையும் மீனையும் விற்று நெல் முதலியன பெறுவர். உப்பின் விலையும் நெல்லின் விலையும் சமமாக இருக்கும். "நெல்லும் உப்பும் நேரேயூரீர் கொள்ளீரோ" என்று உப்பு விற்கும் மகளிர் கூறுவர். கடலின் மீன் பிடிக்கச் சென்ற பரதவர் மீன் கொண்டு வருவதற்கு முன், பரத்தியர் உப்பை விற்று நெல்லைப் பெற்றுச் சோற்றை ஆக்கிப் புளியிட்டு அட்ட அயிலை மீன் கறியுடனும், மீன் தடியுடனும், கடலில் வேட்டமாடிக் களைத்துவரும் பரதவருக்கு ஊட்டுவார்கள். மீனை விற்றுத் தயிரும் வாங்குவர்.

பரதவர் பெருங்காற்றடிக்குங் காலங்களில் வேட்டமாடச் செல்லாது முற்றத்துள்ள தாழையின் கீழ்த் தூங்குவர். கடற்கரையிலுள்ள மணற் குன்றுகளிலும் நித்திரை செய்வார்கள். பரதவர்களுடைய வீடுகள் மிகச் சிறியவை; குறுகிய இறையையுடையவை; புல் வைக்கோல் முதலியவற்றால் வேயப்பட்டவை. "காயல் வேய்ந்த தேயா நல்லில்" என்று ஒரு புலவர் பாடியுளர். சேரித் தெருக்களில் மணல் நிறைந்திருக்கும்.

பரதவர் சந்தனத்தை நன்கு பூசுவர்; நீலமலரையும் ஞாழற் பூவையுஞ் சேர்த்து மிலைவர்; விழவணி மகளிர் நெய்தல் தழையை அணிவர். வருணனை நோக்கிச் சூளுரைக்கும் வழக்கம் பரதவரிடை உண்டு. பரத்தியர் தாமறிந்த அலரை அயலாருக்குப் பரப்புவதுண்டு. இவர்கள் இதனால் "வெவ்வாய்ப் பெண்டிர்", "கொடிதறி பெண்டிர்" என்று கூறப்படுகின்றனர்.

உமணர் என்பார் உப்பு விற்றலைத் தொழிலாகவுடையர். உழவர் கழனியில் உழுது விளைக்கும் நெல்போலாகாது உப்புத் தானாகவே விளையும். "சிறுகுடிப் பரதவர் செறுவினுழாது செய்த வெண்கலுப்பு" என்றார் ஒரு புலவர். உப்பை ஏற்றிய பல வண்டிகள் ஒழுங்காகச் செல்லுங் காட்சி மாட்சியுடன் வருணிக்கப்பட்டிருக்கிறது. உப்பேற்றிய வண்டிகள் இழுக்கும் பகடுகளை அடித்துச் செலுத்தக் கோல்களை உமணர்கள் உபயோகிப்பர். இக் கோல்கள் அவர்கள் கையினின்றும் ஒரு காலமும் பிரியா. இதனால் உமணர்கள் 'கோலுமணர்கள்' எனச் சிறப்பிக்கப்படுவர்.

## இளமகளிரும் மைந்தரும்

பரதவருடைய இளமகளிர் பல விளையாட்டுக்களை அயர்வர். பரத்தியர் தம் மகளிருடைய செறி தொடிகளைத் திருத்தியும்

பாறும் மயிரை நீவியும் பூச்சூடியும் அவர்களை அலங்கரித்துத் தோழியரோடு ஆடவிடுவர். இவ்வாறு விடப்பட்டவர்கள் புன்னை நிழலிலிருந்து விளையாடுவர்; நண்டின் புற்றைக் கிண்டுவர் ; ஞாழல் மரத்தின் உயர்ந்த கொம்பிலும் தாழையிலும் கட்டிய ஊசலில் ஆடுவர் ; திரை கடலிலும் ஆடுவர் ; கானற் சோலைகளில் உலாவுவர் ; கழிகளிலுள்ள பூக்களைப் பறிப்பர் ; கடற்கரையில் சிற்றில் அமைத்து விளையாடுவர் ; உப்புக் குவியலில் ஏறிக் கடலிலுள்ள திமில்களை எண்ணுவர்.

மீனை உலர்த்துமிடத்திருந்து அவற்றைக் கவர வரும் புட்களை ஒப்புவர் ; மீனையும் உப்பையும் சேரிதோறும் கொடு சென்று விற்பதும் உண்டு. “நெல்லும் உப்பும் நேரேயூரீர் கொள்வீரோ” என்று இவர்கள் கூறும் கூற்றைக் கேட்டு விட்டு நாய்கள் குரைத்து வெருட்ட வெருளுவர்.

## வேறு சில பழக்கவழக்கங்கள்

இளமகளிர் உப்புக் குவியலில் ஏறிக் கடலிலுள்ள திமில்களை எண்ணல், வருணனை நோக்கிச் சூளுரைத்தல், வலைப்பயம் பாராட்டி அயிரை மீனை யாவருக்கும் வழங்கல், இரந்தோர்க்குக் கலம் நிறைய ஈதல், உப்பிற்கும் மகளிர் நாய் குரைக்க வெருளுதல், சோற்றுடன் மீன் கருவாட்டையும் அயிலைப் புளிக் கிறியையும் சேர்த்து உண்ணல், நெல்லரிவோர் பறை கொட்டல், பரதவர் சூழ்கொண்டு சென்று மீன் பிடித்தல், பரதவர் தங்களுடைய மக்களை இராக்காலங்களில் கூட்டிச் சென்று மீன் பிடிக்கப் பழக்குதல், பரத்தியர் வருணனை வணங்குதல் போன்ற வேறு சில பழக்கவழக்கங்களும் இங்கே இடம்பெறுகின்றன.

முல்லை நிலத்து மக்களாகிய ஆயர், காட்டிடத்தே மந்தைகள் பரந்து சென்று மேய, மரநிழலிற்றங்கியிருந்து குழல்களில் இனிய பாக்களை இசைத்து ஊதுவர். அவர்களின் குழல்கள் மூங்கில், கொன்றைப் பழம் முதலியவற்றலானவை. இவர்களில் ஒரு பிரிவினர் புல்லினமாகிய குறும்பாடுகளை வளர்த்துத் திரிபவர். இவர்களே குறும்பர்களென்று அழைக்கப்பட்டனர். இவர்கள் ஆடுகளையும் மாடுகளையும் அழைக்க வாயை மடித்துச் சீழ்க்கை அடிப்பர். அவர்களுடைய புன்குரம்பைகளின் கால்களில் ஆடுகள் தின்பதற்குத் தழைகள் கட்டப்பட்டிருக்கும்.

தயிர் புள்ளியாகத் தெறிந்த வாயையுடைய மோர்ப் பானையைப், பூவாற்செய்த சும்மாட்டின்மீது தலையிலே வைத்துக் குறிஞ்சி நிலத்தே போய்க் காலையிலே மோரை விற்கும், தாளுருவி அசையும் காதும் பணைத்த தோளும் ஆற்றின் கருமணல் போன்ற

கூந்தலும் நல்ல மாமை நிறமுடைய ஆய்மகள், பறவைகள் துயிலெழுகின்ற வைகறையில் எழுவள். எழுந்து முடைக்காளானது வெள்ளிய முகைகளை ஒத்த குவிந்த முகிழ்களையுடைய இனிய தயிரைப் புலியினது முழக்கத்தையுடைய மத்தை ஆரவாரிக்கும்படி கடைந்து, வெண்ணெ யெடுத்து, பின் மோருக்கு விலையாகக் கிடைத்த நெல்லினைக் கொண்டு சமைத்த உணவாற் சுற்றத்தாரை ஊட்டுவிப்பாள். இவள் நெய்யை விற்ற விலைக்கு, பாலெருமையையும், கரிய எருமை நாகினையும் வாங்குவாள்.

இடையர் செருப்பை விடாமற் கிடக்கும் காய்த்த காலினையுடையர். பசுக்களுக்கு வருத்தம் செய்யும் தடியூன்றிய கையினர். ஊறிகளைச் சுமந்து செல்லுவதால் தழும்பு மிகுந்த மயிர் செறிந்த தோளினையுடையர். காட்டு மரங்களின் உயர்ந்த கிளைகளிலுள்ளவும் கொடியிலுள்ளவுமாகிய பல பூக்கள் கலந்து நெருங்கத் தொகுத்த மாலையினை அணிந்தோர். இவர் பாற்சோறுண்பர். இவர்கள் பசுத்திரளோடு காட்டிற்றங்கி, தீக்கடை கோலால் நெருப்பூண்டாக்கி, தீக்கொள்ளியாற் றுளையீட்ட குழலிடத்தில் பாலை, குறிஞ்சி முதலிய பண்களைப் பாடுவர். இவர்கள் குரம்பைகள் மாரிக்காலத்து மேகத்தை ஒப்ப வரகு வைக்கோலால் வேயப்பட்டுள்ளன.

கோவலர் செங்காலறுகு மேயும் வலிய நடையுடைய பசுக்களை முல்லை நிலத்தே பரப்பி, தாம் குறிய மலைச்சாரல்களில் பூத்த நறிய பூவைச் சூடுவர். பசுக்களை மேய்க்கும் கோவலர்

> குழையமன் முகண்டை வாலிய மலர
> வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்
> பெரிய சூடிய கவர்கோற் கோவலர்
> எல்லுப்பெய லுழந்த பல்லான் நிரையோடு
> நீர்திகழ் கண்ணிய ரூர்வயிற்

பெயர் தருகின்றனர்.

திண்காலுறியில் பாலையைச் சுமந்து கொண்டு போகின்றவன், தண்டூன்றி நடக்கின்றனன், தினைக் கள்ளுண்டு இழுத்துக் கட்டிய வில்லராய் இவர்கள் வேட்டமும் போவதுண்டு. குழல்வாய் வைத்து ஊதுவர் கோவலர். விரியும் களம்பழமும், பருப்புறு விளை தயிரும், வரகுச் சோறும், சேதாவின் வெண்ணையும், பாலடிசிலும், அரிசியோடு ஈயல் பெய்தட்ட புளிச்சோறும் இவர்கள் உண்ணும் உணவுப் பொருள்களில் சில. பாலுடையடிசிலும் பயிலுவர். சுவைத்த கதிரையுடைய தினையும் சோளமும், எள்ளும், கொள்ளும், அவரையும், துவரையும், பயிறும், உழுந்தும், பிறவும் இந் நிலமக்கள் பயிர் செய்யும் கூலங்களாம்.

## சமூக மேம்பாட்டுப் பழக்க வழக்கங்கள்

அடிப்படைத் தேவைகளின் தன்னிறைவை எட்டிய ஒரு சமூகம், தம் சமூகத்தின் வளர்ச்சியை, மேம்பாட்டை அடிப்படையாகக் கொண்டு, அதற்கான பொருளாதாரம் உட்பட பலவழிகளிலும் தங்களை நிலைப்படுத்திக்கொள்ள முனைதல் இயல்பு. சமூக மேம்பாட்டுத் திட்டங்கள், தொழில்கள், பல்துறை அறிவு, தொழில்நுட்பங்கள் ஆகியவற்றைப் பொறுத்து அமைகின்றன. பழந்தமிழர்களின் தொழில்களாக, வேளாண்மை, நெசவு, கட்டடத்தொழில், வணிகம், மீன்பிடித்தல், உப்பெடுத்தல், வளையல் அறுத்தெடுத்தல், மண்பாண்டத் தொழில், தச்சுவேலை, வேட்டை யாடுதல், உலோகத்தொழில், கைவினைப்பொருள்கள் தயாரிப்பு, கால்நடை வளர்ப்பு, தோல்பொருள் தயாரித்தல், முத்தெடுத்தல் போன்றவை இனங்காணப்படுகின்றன. இத்தொழில்களை, அடிப்படைத் தேவைகளைச் சார்ந்த தொழில்கள், பொருளாதாரத்தைச் சார்ந்த தொழில்கள் என இருவகைகளாகப் பிரிக்கலாம். வேளாண்மை, நெசவு மற்றும் கட்டடத் தொழிலும் இவற்றைச் சார்ந்தவையும் அடிப்படைத்தேவைகளைச் சார்ந்தவையாகவும், அவையல்லாத வணிகம், கால்நடை வளர்ப்பு, உலோகத்தொழில் கைவினைப் பொருள்கள் உற்பத்தி, இயற்கை வருவாயாகிய மலை மற்றும் கடல்படுபொருள்கள் போன்றவை பொருளாதாரத்தைச் சார்ந்தவையாகவும் இங்குக் கொள்ளப்படுகின்றன.

### வணிகம்

பொருளாதாரம் சார்ந்த தொழில்களில் முதன்மை நிலையினைப் பெறுவது வணிகத்தொழிலாகும். ஒரு நாட்டின் வணிகத்தொழில் மேம்பாட்டின் அடிப்படையிலேயே அந்நாட்டின் பொருளாதார வளம் கணக்கிடப்படுகிறது. பழந்தமிழர் வணிகத்தை, உள்நாட்டு வணிகம் மற்றும் வெளிநாட்டு வணிகம் என இருவகையாகக் காணலாம். உள்நாட்டு வணிகம் பெரும்பாலும் நிலம் சார்ந்த பொருள்களையும், தொழில்களையும் அடிப்படையாகக் கொண்டும், வெளிநாட்டு வணிகம் இயற்கைப்பொருள்கள் மற்றும் கைவினைப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டும் நடைபெற்றன. கடல்வழிப் போக்குவரத்து வெளிநாட்டு வணிகத்திற்கு ஏற்றதாக அமைந்திருந்தது. இருவகை வணிகங்களும் பண்டமாற்று முறையிலேயே நடைபெற்று வந்தன.

பழந்தமிழர் பண்டமாற்று முறையிலும், கடல்வழி வணிகத்திலும் சிறப்புற்று விளங்கியதற்கு ஒரு சான்றாக,

மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும் மையகரைகலக் குறுந்து
கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணி யாற்கரை சேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கீயும்'[25]

என்ற பாடல் வரிகள் அமைகின்றன. இதில், மீனும் நெல் மாற்றாகப் பெறப்பட்டதும், ஏற்றுமதிக்காய் மிளகு மூட்டைகள் கரையோரம் அடுக்கி வைக்கப்பட்டிருந்ததும், இறக்குமதிப் பொருள்களாகிய பொற்பரிசங்கள் கலங்களில் இருந்து தோணிகளில் கரை சேர்க்கப்பட்டதும், மலையில் விளைந்த பொருள்களும், கடலில் விளைந்த பொருள்களும் நிறைந்திருந்தமையும் காட்சியாக்கப பட்டுள்ளது. இப்பாடல் பண்டைத்தமிழர் வணிகச் சிறப்பைக் காட்டும் மிகச்சிறந்த சான்றாக அமைகிறது.

இவையல்லாமல், வெளிநாட்டிலிருந்து பொருள்களை ஏற்றி வந்த கலன் கரையொதுங்க, அதிலிருந்த பொருள்களை மீனவர்களும், உப்பு விளைவிப்போரும் எடுத்துச் செல்வதால், பொருள்கள் வழியெங்கும் சிதறிக் கிடந்த காட்சியையும்[26], யவனநாட்டில் இருந்து மது இறக்குமதி செய்யப்பட்ட செய்தியையும்[27] புறநானூறு எடுத்துக்காட்டுகிறது.

## கால்நடை வளர்ப்பு

பண்டைத்தமிழர் கால்நடைகளின் பயனை நன்கு உணர்ந்திருந்தனர். சமுதாய வளமையைத் தீர்மானிக்கும் காரணிகளில் ஒன்றாகக் கால்நடைகளின் எண்ணிக்கை இருந்து வந்துள்ளது. கால்நடை வளர்ப்பு ஆண்களிடம் ஒப்படைக்கப்பட்டு இருந்தாலும், பால்கரத்தல் முதல், பால்படுபொருள்களைப் பண்டமாற்றுதல் வரை பிற செயல்பாடுகள் பெண்களிடம் இருந்ததாகத் தெரிகிறது. கால்நடைகளை மூலதனமாகக் கொண்டு குடும்பத்தையும், சமூகத்தையும் மேம்படுத்தியுள்ளனர். கால்நடை பெருகவேண்டும் என்பதை,

'புலரி விடியல் பகடுபல வாழ்த்தி'[28]

என்று புறநானூற்றுப் பாடல் வாழ்த்துகிறது.

## உலோகத் தொழில்

பழந்தமிழர் இரும்பின் பயனை நன்கு அறிந்திருந்தனர். இரும்பை உருக்கப் படைக்கலன்களும், வேளாண்கருவிகளும் பிறவும் செய்யும் திறன் பெற்றிருந்தனர். எடுத்துக்காட்டாக, யானை மூச்சுவிட்டது போல் கை கோப்புப் பொருந்திய உலையின் வாயினை,

> **'பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பின்**
> **நோவுற ழிரும்புறங் காவல் கண்ணி'** [29]

என்று குறிப்பிடுகிறது புறநானூறு. மேலும்,

> **'கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய**
> **இரும்பு ணீரினு மீட்டற் கரிதென'** [30]

என்பதிலும்,

> **'இரும்புபயன் படுக்குங் கருங்கைக் கொல்லன்**
> **விசைத்தெறி கூடமொடு பொருஉம்**
> **உலைகல் லன்ன வல்லா ளன்னே'** [31]

என்பதிலும், உலோகத்தொழில் நுட்பத்தில் பழந்தமிழர் தேர்ச்சிப் பெற்றுள்ளமை தெளிவாகிறது. இதன் வழி, எ.்.குத் தாதினைக் கண்டறியவும், அதனைப் பிரித்தறியவும், அதிலிருந்து உலோகப் பொருள்களை வடித்தெடுக்கவும் ஆற்றலையும், தொழில்நுட்பத்தினையும், பழந்தமிழர் கைவரப்பெற்றிருந்தனர் என்பது உய்த்துணரப்படுகிறது.

## கைவினைப்பொருள்கள் உற்பத்தி

பழந்தமிழரின் ஏற்றுமதிப் பொருள்களில் கைவினைப் பொருள்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. பொன்னாலும், மணியாலும், முத்தாலும், பவளத்தாலும் செய்யப்பெற்ற மாலைகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இவ்வகைப் பொருள்கள் கிடைத்த இடங்களையும், அவற்றை ஒன்றுசேர்த்து மாலையாக்கிய செய்தியையும்,

> **'பொன்னுந் துகிரு முத்து மன்னிய**
> **மாமலை பயந்த காமரு மணியும்**
> **இடைபடச்சேய வாயினும் தொடைபுணர்ந்து**
> **அருவிலை நன்கல மமைக்குங் காலை'** [32]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன.

## நாழிகைக் கன்னல்

பொழுதளந்து அறியுநர், அரசனை வணங்கி வாழ்த்திக் கிடாத்திலேயுள்ள நீரைக் கொண்டு, கணக்கிட்டுக் காலம் அறிவிப்பர்

என்பதை முல்லைப்பாட்டு காட்டும்.[33] நோக்கிப் பொழுதறிவிப்பதைக் குறுந்தொகையும் கூறும்.[34] பெருமழை பெய்தலால் மேகம் மறைத்தலின், கதிரவனைக் கொண்டு காலமறியாத நிலையில், நாழிகைக் கன்னலைக் கொண்டு பொழுதறிவிக்கும் கணக்கரையே மக்கள் நம்பியிருந்தனர்.

> குறுநீர் கன்னல் எண்ணுநர் அல்லது
> கதிர்மருங்கு அறியாது அஞ்சுவரப் பாஅய்த்
> தனிமயங்கின்று[35]

## அவையத்தார்

அவையத்தார் ஓலையின் தலையில் அரக்கின் இளஞ்சினையை இட்ட குறிப்பு, இப்பொழுது ஆவணங்களில் முத்திரை இடுதலை நினைப்பிக்கும்,[36] அவையத்தார் நடத்தும் குடவோலை முறைத்தேர்தலை,[37] அகநானூறு 77 ஆம் பாடல் குறிப்பால் உணர்த்தும். கயிற்றால் பிணிக்கப்பட்ட குடத்திலிருந்து ஓலையை எடுக்கும்முன் குடத்தின் மேலிட்ட இலச்சினையை ஆய்ந்து நீக்கிப்பின் ஆவணமக்கள் குடத்திலிருந்து ஓலையை எடுப்பர் என்பதே அப்பாடல் காட்டும் குறிப்பாகும், அறங்கூறும் அவையத்தார் குறைகேட்டு, சீர்தூக்கி ஒரு பாற் கோடாது, நடுநிலை நின்று தீர்ப்பு வழங்குவர். அவையத்தார்க்கு உரிய இயல்புகளை மதுரைக் காஞ்சி விரித்துரைக்கும்.

> அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
> செற்றமும் உவகையும் செய்யாது காத்து
> நெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்
> சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்[38]

இதனால் அவையத்தின் வழக்கம் உணரப்பெறும்.

## அந்தணர்

அந்தணர், 'அறம்புரி அந்தணர்' என்றும் 'அறுதொழில் அந்தணர்' என்றும் 'அந்தி அந்தணர்' என்றும் குறிக்கப்பெறுவர், ஓதல், ஓதுவித்தல் வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறும் அவர்தம் தொழில்கள்.

> ஓதல், வேட்டல், அவைபிறர்ச் செய்தல்
> ஈதல், ஏற்றலென்று ஆறுபிரிந்து ஒழுகும்
> அறம்புரி அந்தணர்.[39]

ஆறு தொழில்களுள் வேள்வி செய்தலையே அந்தணரின் முதன்மைத் தொழிலாக நூல்கள் குறிக்கும். அன்னம், தாமரை

மலரைத் தன் பெடையோடு வலம் வருவதற்கு, அந்தணன் அஞ்சியஞ்சி கடவுளை வலம் வருதல் உவமையாக்கப்படுகிறது.[40]

## இறைவழிபாடும் சடங்குகளும்

உலகம் தோன்றிய நாள்முதல் மக்களிடையே சமயம் என்ற ஒன்று நிலவி வருகின்றது. சமயத்தையும் மக்களையும் தனித்தனியே பிரித்தற்கியலாது. வாழ்க்கையையும் நடத்தையையும் சமுதாயத்தையும் நல்வழியில் நடத்த வல்லவை சமயங்களே. எல்லாச் சமயங்களும் மனித சக்திக்கு மேம்பட்ட சக்தி ஒன்று இருப்பதை உணர்த்தி, அச்சக்தியைப் பல்வேறு முறைகளால் தொழுது வணங்கியும், போற்றியும் வருகின்றன.

## பக்தி

அனைத்துச் சமயங்களுக்கும் அடிப்படை பக்தி உணர்வே ஆகும். நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளைப் பற்றிய உணர்வு கைகூடி, அப்பரத்தொடு இரண்டறக் கலக்கின்ற ஆர்த்தி பெருகி, அப்பெருக்கத்திலேயே ஆழங்காற்பட்டு இடையறாத காதலால் கசிந்து கண்ணீர் மல்கிக் கிடக்கும் நிலையினைப் பக்தி எனக்கூறலாம். பக்தியினால் நாம் அடையக்கூடியவை எவையெவை என்பதைப் பாரதியார்,

> "பக்தியினாலே - இந்தப்
> பாரில் எய்திடும் மேன்மைகள் கேளடீ"[41]

என்று தொடங்கி, சித்தந் தெளிந்து, செம்மை பிறக்கும்; சஞ்சலம் நீங்கி, உறுதி விளங்கிடும்; சோர்வுகள் போகும்; மிடிப்பாம்பு கடித்த விடம் அகலும்; செல்வங்கள் வந்து, மகிழ்ச்சி விளையும்; கல்வி வளரும்; அல்லல் ஒழியும்; சோம்பல் அழியும்; கூம்புதல் இன்றி நல்ல கோபுரம்போல நிமிர்ந்த நிலைபெறும் என்று பக்தியினால் ஏற்படும் பலன்களைக் கூறுகின்றார். மேலும்,

> "பக்தியுடன் போற்றி நின்றால் பயம்
> அனைத்தும் தீரும்"[42]

என்று உலகில் உயிர்களுக்கும் ஏற்படக்கூடிய எல்லாப் பயங்களும் (நோய், துன்பம், மரணம், வறுமை) போன்றன நீங்கும் என்கிறார்.

## இயற்கை வழிபாடு

குகைகளிலும், மரப் பொந்துகளிலும் வாழ்ந்துவந்த கற்கால மனிதர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வினை

மேற்கொண்டிருந்தனர். இயற்கையின் ஆற்றலைக் கண்டு வியந்தனர், பயந்தனர். எனவே, இயற்கையை இறைவனாகக் கருதி வணங்க முயன்றனர். தன் ஆற்றலுக்கும் மீறிய இயற்கைப் பொருள்களின் மீது அன்பும் பயமும் கொண்டனர். இவ்வச்சமும் அன்பும் அவ்வியற்கைப் பொருள்களுக்கு முன்னர் அவர்களை அடிமைப் படுத்தியது. இவர்கள் ஆறு, முகில், மழை, பரிதி, நிலவு போன்ற இயற்கைப் பொருள்களுக்கு இறைத்தன்மை கொடுத்து அவற்றை ஆன்மாவின் பொருளாகக் கருதினர். இக்கொள்கையே இயற்கை வழிபாட்டுக் கொள்கை ஆகும்.

உருவ வழிபாட்டிற்கு ஆதாரமே இவ்வியற்கை வழிபாடு ஆகும் என்று மறைமலையடிகள் கூறுகின்றார். இயற்கை வழிபாடு நாளடைவில் குறையலாயிற்று என்பதை, "நாளேற நாளேறப் பகலவனிலும் இறைவனை வைத்து வணங்கும் வணக்கத்தை மெல்ல மெல்லக் கைநெகிழ விட்டனர். கதிரவனையும், நிலவையும் இறையாக வணங்கியவர்கள், இவையிரண்டும் அண்மையில் இன்றிச் சேய்மையில் உள்ளமையாலும், அவற்றினைத் தம்மால் நெருங்க முடியாமையாலும் கைவிட்டனர்" என்று இயற்கை வழிபாடு இருந்தமையையும், நீங்கியமையையும் பற்றி மறைமலையடிகள் கூறுகிறார்.

## நிலவு வழிபாடு

ரிக்வேத காலத்தில் நிலவினை வழிபடும் வழக்கம் இருந்தது. கால மாற்றத்தினால், மக்கள் மனம்மாற வழிபாட்டில் மாற்றம் ஏற்பட்டது. எனினும் நிலவு வழிபாடு நம் நாட்டில் இருந்தமையைக் காணலாம். திருப்பாற் கடலைக் கடையும்போது அமிழ்தத்துடன் தோன்றியது சந்திரன் என்பர் (நிலவிற்கு வழங்கும் பெயர்களில் சில திங்கள், மதி, இந்து, வெண்ணிலவு, சந்திரன் என்பன). இச்சந்திரனுக்கு நட்சத்திரங்கள் இருபத்தேழும் மனைவியர்கள் ஆவர். ஒவ்வொருநாள் ஒவ்வொருவருடனும் கடைசி மூன்று நாட்கள் உரோகிணி நட்சத்திரனுடன் மூடி இருப்பதாக வழங்கப்படுகிறது. தக்கன் யாகத்தில் தண்டனை பெற்று, இந்நிலவு பதினைந்து நாட்கள் தேய்ந்தும், பதினைந்து நாட்கள் வளர்ந்தும் (அமாவாசை, பௌர்ணமி) வருவதாக இயம்பப்படுகிறது. திருமணமாகாத பெண்கள் பிறைச் சந்திரனைத் தொழும் வழக்கம் இருந்ததை அகநானூறு, "ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்"[43] என்னும் வரியால் அறியலாம். இதனையே, "தொழுது காண் பிறை"[44] என்று குறுந்தொகை கூறுகின்றது. பிறையை மணமாகாத மகளிரும், சான்றோரும், அமரரும் தொழுதல் உண்டு என்று உரை கூறப்பட்டுள்ளது. இக்கருத்தினையே,

"முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
ஏமுற விளங்கிய சுடர்"[45]

என்று நற்றிணை நவில்கின்றது. புறநானூற்றில் விறலி முழுமதியை வணங்கியமையை,

"செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்ச நின்ற உலவுமதி கண்டு
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதன்ம" [46]

என்ற வரிகளால் காணலாம். திங்கள் உரோகிணியுடன் கூடிய நன்னாளில் திருமணம் செய்தனர் என்பதை,

"அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
சகட மண்டிய துகள்தீர் கூட்டம்" [47]

என்று அகநானூறு கூறுகின்றது. அறச்செயல்களைச் செய்வதற்குரிய நாள் பௌர்ணமிநாள் சிறந்தது என்பதை, "அறுமீன் கெழீஇய அறம்செய் திங்கள்"[48] என்று கூறப்படுகின்றது.

சிலப்பதிகாரத்தில் "மங்கல வாழ்த்துப் பாடலில் இளங்கோவடிகள் ஞாயிறு, திங்கள், மழை, புகார்நகரம் என்ற இயற்கைப் பொருட்களை வாழ்த்துகின்றார் (திங்களைப் போற்றுதும்). கண்ணகியின் திருமணம், "வானூர் மதியஞ் சகடணைய" நன்னாளில் நடைபெற்றதை அறியலாம். "கனாத்திறம் உரைத்த காதை" யில் சந்திரனுக்குத் தனி கோயில் இருந்ததை, "நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கு"[49] என்ற வரியில் காணலாம்.

இக்காதையில் கண்ணகி தான்கண்ட தீக்கனாவினைத் தன்தோழி தேவந்தியிடம் கூறுகிறாள். அதற்குத் தேவந்தி, முற்பிறப்பில் ஒரு நோன்பு பிழைத்தாய், எனவே, சோமகுண்டம், சூரிய குண்டம் இவற்றில் மூழ்கி வரலாம் என அழைக்கின்றான். "சோம குண்டம்" என்பது சந்திரனுக்குரியது. அதில் மூழ்கினால் இவ்வுலகின்பம் எய்துவர் என்பர். அதனால் திங்களுக்கு என்று ஒரு நீர்நிலையை அமைந்துள்ளதைச் சிலம்பு சுட்டுகிறது. காப்பியங்களில், காப்பிய இலக்கணம் கூறும்போது, "இருசுடர்த் தோற்றமும்" என்பதால் நிலவினைப் பற்றிய குறிப்பு இடம்பெறல் வேண்டும் என்று கூறப்படுகிறது. குற்றாலக் குறவஞ்சியில் வசந்தவல்லி, தலைவனைப் பிரிந்து வருந்தும்போது வெண்ணிலவைக் கண்டு, "தண்ணமுதுடன் பிறந்தாய் வெண்ணிலாவே" என்றும், "பெண்ணுடன் கண்டு காயலாமோ வெண்ணிலாவே" என்றும் பாடுகின்றாள். இதில் சந்திரன் திருப்பாற்கடலைக் கடையும்போது அமுதத்துடன் திருமகளுடன்

(பெண்ணுடன் - திருமகளுடன்) தோன்றியவன் என்ற குறிப்பும் தலைவன் பிரிவால் நிலவும் சுடும் என்ற குறிப்பும் (குளிர்ச்சியும் வெம்மையாய் இருக்கும்) காட்டப்படுகின்றது.

பாரதியார் தம்முடைய கவிதையில் "பக்திப்பாடல்" என்னும் பகுதியில் "வெண்ணிலாவே" என்னும் தலைப்பில் கவிதை அமைத்துள்ளார். அமிழ்தத்தைப் போன்று மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியது வெண்ணிலா என்பதை, "அமிழ்தை நிகர்த்திடுங் கள்ளொன்று வெண்ணிலா"[50] என்கிறார்.

"மாதர் முகத்திற்கு மதியினை உவமைக் கூறாத புலவர்களே இல்லை எனலாம். இதனையே, பாரதியார், "மாதர் முகத்தை நினக்கிணை கூறுவர்" என்று கூறிவிட்டு. இளமையும் யாக்கையும் நிலை இல்லாதது என்பதை, "அ∴து, வயதிற் கவலையின் நோவிற்கெடுவது" என்கிறார். சிவபெருமானின் சிரத்தில் இளம்பிறை இருப்பதை, "பின்னிய மேகம் சடைமிசைக் கங்கையும், வெண்ணிலவும்" என்ற வரியால் கூறுகின்றார். நல்லோர், தீயோர் என்ற பாகுபாடு இன்றி வெண்ணிலவு தன் ஒளியை அனைவருக்கும் வழங்குவதை.

**"தீது புரிந்திட வந்திடும் தீயவர்க்கும்**
**வெண்ணிலாவே நலஞ்**
**செய்தொளி நல்குவர் மேலவ ராமன்றோ?**
**வெண்ணிலாவே"**[51]

என்ற வரிகளால் நமக்கும் அறிவுரை கூறுகின்றார்.

## சங்க காலத்தில் வெறியாடும் வழக்கம்

சங்க நூல்களில் வெறியாட்டு என்பது அகப்பொருள் பற்றிய நூல்களில் இடம்பெற்றுள்ளது. இதற்கு அகராதியில் "உன்மத்தம் சன்னதம்" என்ற பொருள் அமைந்துள்ளது. சங்க காலத்தில் வெறியாட்டுக்குமுன் "கட்டு, கழங்கு, கன்னம்" இவற்றால் ஆய்ந்து உறுதி செய்த பிறகே, வெறியாட்டு நிகழும் எனலாம்.

## வெறியாடும் இடம்

தலைவனுடைய கடற்றுரையைச் சிறப்பிக்கும் பொருட்டு வெறியார் ஆடுகளத்தை உவமையோடு குறிப்பிடப்பட்டுள்ளது. ஞாழலும், புன்னையுமாகிய நறுமணமிக்க மலர்கள் நீர்ப்பரப்பில் பரந்து கிடைப்பது வெறியாடுமிடத்தைப் போன்று தோன்றுகிறது. இதனை,

"நறுவீ ஞாழலோடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் தோன்றும் துறைவன்[52]

என்ற வரிகள் நீர்ப்பரப்பினை மலரால் மறைக்கப்பட்டு ஆடுவதற்குரிய இடம்போன்று தோன்றுகின்ற உவமையை அம்மூவனார் அழகாக எடுத்துக்காட்டியுள்ளார்.

தலைவியின் மெலிவிற்கும் காரணம் என்னவென்று அறியாத இவ்வூர் மயங்கி, கடப்பமரத்திற்கு மாலை சூட்டி வெறியாட்டுவர். இதனை,

ஆரலை மாலை சூட்டி
ஏழற் றன்று அழுங்கல் ஊரே [53]

என்னும் வரிகள்மூலம் தலைவிற்குத் தழையுடைய நல்கிய தலைவனால் ஏற்பட்டது. இம்மெலிவு தெய்வத்தால் வந்தன்று என்று குறிப்பால் உணர்த்தப்பட்டது.

## அகவன் மகள்

அகவன் மகள் என்பது "அழைக்கும் மகள், கட்டுவிச்சி" என்று அழைக்கப்படுகிறாள். குறிச்சொல்வழித் தெய்வங்களையும், குறி சொல்லப்படுவோர் குலத்தோரையும் அழைத்துப்பாடுவதால் "அகவன் மகள்" எனப் பெயர் வந்தது.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் பிரிந்த தலைவன் பின்னர் கூடாமையால், ஆற்றாமை மிக்கு மெலிந்த தலைவியைக் கண்டு இந்நோய்க்குக் காரணம் அறிவாள். கட்டு விச்சியால் குறிகேட்கத் தலைப்பட்ட செவிலிக்குத் தோழி இந்நோய் தெய்வத்தால் வந்ததன்று தலைவனால் வந்தது என்று குறிப்பால் அறத்தோடு நிற்கின்றாள். இதனை ஔவையார்,

"அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக் கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே [54]

என்ற வரிகளின் மூலம் தலைவியின் நோய்க்குரிய காரணத்தைக் குறிப்பாக உணர்த்துகிறார். கட்டு விச்சி தெய்வத்தின் மலையைப் பாடினாள். அம்மலையே தலைவன் மலையும் ஆதலால் தலைவி மகிழ்ச்சி கொள்கிறாள். அதனைக் கண்ட தோழி மீண்டும் அம்மலையையே பாடுக என்றாள். இதனைப் பாடும்போது செவிலி இந்நோய், தலைவிக்குத் தெய்வத்தால் வந்ததன்று, ஒரு தலைவனால் வந்தது என அறிவதற்குக் காரணமாக அமைந்தது எனலாம்.

வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர் [55]

என்ற வரியின் மூலம் அகவன் மகளிர் வெள்ளிய முனையினை உடைய சிறிய கோலைக் கொண்டு குறி சொல்வார்கள் என்று அறிய முடிகிறது.

தலைவியின் வேறுபாடு கண்டு நாற்றத்தையும் செவிலித் தாயும் கட்டுவிச்சியிடம் வினவுகின்றார். அதற்குக் கட்டுவிச்சி, தலைவியின் வேறுபாட்டிற்க்குக் காரணம் பிறிதொரு தெய்வம் என்று கூறிக்கேட்ட தோழி செவிலிக்குத் தலைவியின் நிலையினை எடுத்துரைக்கிறாள். இதனை,

... நாடன்
தகாஅன் போலத் தான்தீது மொழியினும் [56]

என்ற வரிகளின் மூலம் தலைவிக்கு விரைவில் அத்தலைவனுக்கு இவளை மணஞ்செய்து கொடுத்தலே இவள் நோய்க்கு மருந்து அதை விடுத்து கட்டுக்காண்டல் வெறியாடல் முதலியன மருந்தாகா.

## ஆடுமகள்

ஆடுமகள் என்பவள் தெய்வம் ஏறி வெறியாடுபவள். கணிக்காரிகை" என்றும் "சாலினி" என்றும் "தேவராட்டி" என்றும் கூறப்பெறுவாள்.

புதியதாக விளைந்த கதிரினைத் தெய்வத்திற்கு அவிக்காட்ட அதனை அறியாமல் தின்ற மயில் அரங்கின்கண் கூத்தாடுகின்ற விறலி வெறியுள்றோள் அவிநயம் காட்டும் வனப்பினை ஒத்து துன்பம் உற்று நடுங்குதலைச் செய்யும் இதனை,

கடியுண் கடவுட்கு இட்ட செழுங்குரல்
அறியாது உண்ட மஞ்ஞை ஆடுமகள்
வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும் [57]

என்ற வரிகளின் மூலம் நக்கீரர், ஆடுமகள் வெறியாடுகின்ற நிலையினை அறியலாம்.

## வெறியாளர்

காவல் மிகுதியினால் தலைவியின் வேறுபாடு கண்டு செவிலி வெறியாடும் மகளை அழைக்கின்றாள். வெறியாடும் மகள் இந்நோய் முருகனால் வந்தது என்று கூறவும், அக்கூற்றிலே பொருந்தாதவளாய் தோழியிடம் வினவுகின்றாள். தோழி அறத்தொடு நிற்கின்றாள் இதனை பேரிதாத்தனார்.

**வேறுயான் கூறவும் அமையாள்...** [58]

என்ற வரிகள் மூலம் வெறியாடுபவனின் நிலையினை அறியலாம்.

## வேலன்

வெறியாட்டாளன் என்று அழைக்கப்படுவன் இவன் முருகக் கடவுளுக்குரிய வேலை ஏந்தி நிற்றலின் வேலன் என்று பெயர் பெற்றான் "படிமத்தான்" எனவும் அழைக்கப்பெற்றான்.

வேலனால் ஒப்பனை செய்யப்பட்டு வெறியாடுதற்குரிய இடங்கள் தோறும் சிவந்த நெல்லினது வெள்ளிய பொரியைத் சிதறினாற் போன்று தோன்றும். இதனை,

**வேலன் புனைந்த வெறியியர் களந்தோறும்**
**சேந்நெல் வான்பொரி சிதறியன்ன** [59]

என்ற வரிகளின் மூலம் வேலன் வெறியாட்டுகின்ற இடத்தைப் பற்றி அறியலாம். இதில் பூத்தாழ் வெண்மணல் என்பதில், பூ என்பது வெண்பொறிக்கும், வெண்மணல் என்பது வெறியாடும் களத்திற்கும் உவமைகள்.

தலைவி உற்ற நோய்க்கு மருந்தாவது வெறியாட்டுதலே என்று கருதிய வேலன் நோயின் காரணத்தையும் அது தீரும் மருந்தையும் அறியாதவன் என்பதை எம் அன்னை உணர்ந்து கொள்ளும் பொருட்டு இரவு நேரத்தில் தலைவன் வராது இருக்க வேண்டும் என்பதனை,

**வெளிஎன உணர்ந்த வேலன் நோய்மருந்து**
**அறியான் ஆகுதல் அன்னை காணிய** [60]

என்ற வரிகளின் மூலம், இன்றைய இரவில் அன்னை வெறியாட்டு எடுப்பாள். நம்பால் தலைவன் வந்தால் நம் வேறுபாடு சிறிது அகலும் நாளை நம் வேறுபாடு அகன்றத்தைக் கண்டு தாய் வெறியாட்டே என் நோய்க்கு மருந்தென உணர்ந்து பாராட்டுவாள். தலைவன் வரவில்லை என்றால், இன்னும் வேறுபாடு மிக்கு தோன்றும் இதனால் வேலன் இந்நோய்க்கு மருந்தறியான் என்பதை அறிந்து கொள்வாள் என்பதனை அறியலாம்.

இதனால் களவொழுக்கத்தானே தன் வேறுபாடு நீங்காமையும் தாய் முதலியோர் வெறியாட்டு எடுக்கின்றதனையும் தலைவி தலைவனுக்குக் குறிப்பாக உணர்த்துகின்றாள்.

தலைவியின் தோள் காமநோயின் மிகுதியாக நெகிழ்ந்தமையைக் கண்டு தாய் இம்மெலிவிற்குக் காரணம் என்ன?

என்று வேலனை வினவ, வேலன் இது தெய்வத்தான் வந்தது என்று கூறினான். உண்மையென்று நினைத்து வெறியாடக் கருதுகின்ற தன்மையினையும் தலைவனுக்கு உணர்த்துகின்றாள், இதனை,

> **மென்றோள் நெகிழ்ந்த செல்லல் வேலன்**
> **வென்றி நெடுவேள் என்னும்...**[61]

என்பதன் மூலம் அறியலாம்.

முருகனை வழிபாட்டு அறிவு வாய்த்தலை உடைய வேலனே உன்னை ஒன்று கேட்பதால் நீ சினத்தலை கைவிட வேண்டும். பலவாக வேறுபட்ட நிறத்தையுடைய சில சோற்றையுடைய பலியோட இளைய ஆட்டினைக் கொன்று அதன் குருதி தோய்ந்த மண்ணை இத்தலைவியினுடைய நறிய நுதலில் தடவி தெய்வத்தை வணங்கி பலியாகக் கொடுப்பாயின், தலைவியை வருத்துகின்ற நோய் தலைவனைக் கொண்டு வந்து சேர்க்குமோ என்று வினவுகின்றாள் செவிலி. இதனை,

> முருகயர்ந்து வந்த முதுவாய்வேல
> சினவல் ஓம்புவதி வினவுவது உடையேன்
> பல்வேறு உருவிற் சில்லவிழ் மடையொடு
> சிறுமறி கொன்று இவள்நறுநுதல் நீவி
> வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய
> விண்டோய் மாமலைச் சிலம்பன்
> ஒண்டார் அகலமும் உண்ணுமோ பலியே [62]

என்ற வரிகள் மூலம், தலைவி நோய்க்குக் காரணம் தலைவனே தெய்வம் அன்று என்பதைச் செவிலிக்குக் குறிப்பால் உணர்த்தப்பட்டது.

வெறியாடுங்கால் மறிக்குருதி தோய்ந்த மண்ணை நோயுற்ற மகளிரின் நுதலில் நீவுதல் வழக்கமாக இருக்கிறது என்பதை அறியலாம்.

குறுந்தொகையில் வெறியாட்டு நிகழ்வுகள் இடம்பெறுகின்றன. இன்றும் கோயிலில் திருவிழாக் காலங்களில் வேப்பிலையைக் கையில் வைத்துக் கொண்டு தெய்வமறி ஆடுகின்ற ஆண்களும், பெண்களும் குறி சொல்கின்ற வழக்கம் இருந்து வருவதைக் காணலாம்.

## பெண்களின் வழக்கங்கள்

பண்டைய சில பழக்க வழக்கங்கள் இன்றும் காணப் பெறுகின்றன. மாந்தரஞ்சேரலின் மறத்தினைச் சிறப்பிக்குங்கால், குறுங்கோழியூர்கிழார்,

வயவுறு மகளிர் வேட்டுநின் நாட்டு அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே [63]

எனப்பாடுதலின், கருவுற்ற மகளிர் மண்உண்ணும் வழக்கம், முன்னரும் இருந்தமை புலனாகிறது. மணமாகாத மகளிர் பிறைதொழும் இயல்பினை அகநானூறு [64]சுட்டும்.

வீடு கட்ட மனை வகுக்குங்கால், நன்னாள் பார்த்துக் கட்டக் கலைஞர் கயிறிட்டு அளந்து, தெய்வந்தொழுவர். [65]

பிச்சி மலர்வதால் அந்திவேளை அறிந்து, அரிவையர் விளக்கேற்றி நெல்லும் மலரும் தூவித் தொழுது மாலைப்போதைக் கொண்டாடுவர். [66]

மார்கழி நோன்பு முடித்துத் தைத் திங்கள் தலை நாளில் நீராடிப் புதுவது சமைத்து, உண்ணும் நோன்பினரை நற்றிணை 'தையூண் இருக்கையர்'[67]எனப்போற்றும். இதனால் மார்கழி நோன்பின் வழக்கினை அறியலாம்.

நற்றிணை பிச்சைசூழ் பெருங்களிறு போல[68] எனக் கூறுவது இக்காலத்தே பாகன் கோயில் யானையால் காசு பெறும் வழக்கத்தை நினைப்பூட்டுகிறது.

## சிலம்புகழி நோன்பு

இளம்பருவந் தொடங்கித் திருமணம்வரை பெண்கள் தம் அடிகளில் சிலம்பணிவது சங்க கால வழக்கம். இரவுக்குறியில் தலைவனைக் கூடச் சென்ற போதும், தலைவனோடு உடன் போய் காலத்தும் தலைவி, சிலம்பு அணிந்திருந்தாள் என்பதனை அகம்,[69] குறுந்தொகை,[70] முறையே காட்டும். குமரித் தன்மை கடந்து மணந்தாள் என்பதைக் காட்டச் 'சிலம்புகழி நோன்பு' நிகழ்த்தினர். சிலம்பைக் காலினின்றும் நீக்கும் இச்சடங்கினைத் திருமண விழா போன்று கொண்டாடுவது சங்க காலச் சமுதாய மரபாகும். உடன்போக்குச் சென்ற தலைவிக்குத் தலைவன் ஊரிலேயே சிலம்புகழி நோன்பு நடந்தபின், திருமணம் நடைபெறும். தன் மகளுக்குத் தலைவன் ஊரில் சிலம்புகழி நோன்பு நடந்தபின், திருமணம் நடைபெறும். நோன்பு நடத்தமையின் நற்றாய் மனம் நொந்து பேசுவதையும், சினந்து பேசுவதையும் அகநானூறு,[71] நற்றிணை[72] காட்டும், சிலம்புகழி நோன்பு தலைவன் ஊரில் நடந்தாலும் திருமண விழாவாவது தன் வீட்டில் நிகழ்த்துக எனத் தன்வேட்கையைத் தாய் புலப்படுத்துகிறாள்.

நும்மைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணம் கழிக [73]

## திருமணப் பழக்கவழக்கம்

திருமணம் பேச முதியோர் செல்லுதல் பண்டைய வழக்கம், நன்னிமித்தம் பார்த்து, திங்களுடன் உரோகிணி சேர்ந்த நன்னாளில், விடியற்காலையில், மனையை அணி செய்து, விளக்கேற்றி, மாலைகளைத் தொங்கவிட்டு, மணமுழவும், முரசும், சங்கும் ஒலிக்கத் தலைவிக்கு மண நீராட்டினர். வாகை இலையோடு அறுகம்புல்லின் கிழங்கு முளையைச் சேர்த்துக் கட்டிய நூலைச் சூட்டினர். உச்சந்தலையில் குடமும் கையகத்தே மண்கலமும் உடைய முதிய மங்கல மகளிர் மணத்தை நிகழ்த்தினர். மக்கட்பேறு வாய்ந்த மகளிர் நால்வர் கூடிக் கற்பு வழாமல் நல்ல அறம் பல செய்க; கொழுநனைப் பேணி ஒழுகுக; தக்க வாழ்க்கைத் துணையாகுக என மணப்பெண்ணை வாழ்த்தினர். கூந்தல்மேல் பெருமக்கள் சொரிந்த மலரும் நெல்லும் திகழ்ந்தன.

தமிழர்களின் திருமணம் எப்படி நிகழ்த்தப்பட்டது என்பதை விளக்க வேண்டியுள்ளது. சங்கத் தொகை நூல்களுள் ஒன்றாகும் 'அகநானூறு' என்னும் பனுவலில், இடம்பெற்ற 86 ஆம் பாட்டில் திருமணம் நிகழ்ந்த முறை விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அது மருதத்திணை சார்ந்தது. தலைவியின் ஊடலைத் தணித்து அவளது உள்ளத்தில் ஆர்வம் பூத்திடச் செய்ய விழைந்த தலைவன், அவளது அருமையைத் தான்போற்றி எண்ணுவதை, பண்டு நிகழ்ந்த அவர்தம் வதுவை நாளில், அவளது உள்ளத்தில் உள்ளதை மறையாது உரை என அவன் கேட்டபோது, அவள் உவகையுடன் நாணமிக முகங்கவிழ்ந்து குனிந்த நிலையை நினைவூட்டுகிறாள். நல்லாவூர் கிழார் என்னும் புலவர் இயற்றிய பொருள் பொதிந்த பாடல் இது

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் கறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலை
கோள்ால் நீங்கிய கொடுவெண் டிங்கள்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த நிதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினில் வழாஅ நற்பல உதவிப்

பெற்றோாற் பெட்கும் பிணையைமட யாகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் கம்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூடிய உடன்புணர் கங்குல்.."[74]

இந்த அடிகளில் அந்த நாட்களில் அவர்களின் திருமணம் நிகழ்ந்த முறை கூறப்பட்டுள்ளது.

அகநானூற்றில் வரும் பிறிதொரு பாட்டு இது. 'மணிமிடை பவளம்' என்னும் பகுதியில் இடம்பெற்ற மருதத்திணைப் பாடல். இதனைப் பாடியவர் விற்றூாற்று மூதெயினனார். தலைவி ஊடல்கொண்ட நிலையில் தலைவன் அவளது ஊடலை நீக்கிட முயன்று பேசிய பேச்சும் பயனற்ற நிலையில், திருமண நாள் இரவு அவளை அவன் ஆர்வத்துடன் அணுகியபோது, அன்புப் பெருக்கில் அவன் நாணித் தலை கவிழ்ந்து நின்றதை அவன் தன்நெஞ்சிற்கே புலந்து கூறியதாக அமைந்தது இது. தலைவியின் மென்மையும் மேன்மையும் உணர்ந்தவனே அவள் என்பதைத் தலைவிக்குத் தெரிவிக்கும் கருத்தினனாய்த் தன்நெஞ்சிற்குக் கூறினான். அவளது இனிய பண்பு மாறிவிட்டதே என்னும் துன்பத்தில், தலைவியின் ஊடல் எப்படியும் மாறித்தான் ஆக வேண்டும் என்பதால், தலைவன் முயற்சி முறிந்து விட்டதாகப் பொருளாகாது. மேலும் தொடரலாம். அதுவும் பெறத்தக்க இன்பச் சவையை மிகுவிப்பதன்றோ? அந்தப் பாடலின் முதற் பகுதியில் அமைந்த வரிகள் இவை.

"மைப்பறப் பழுக்கின் நெய்க்களி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப் பணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
சகட மண்டிய நுகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணி
படுமண முழவொடு பருஉப் பணைஇமிழ
வதுவை அமண்ணிய மகளிர் விருப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற
மண்ணும்மணி யன்ன மாயிதழ் பாலைத்

தண்ணறு முகையொடு வெண்ணூல் சூட்டிக்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பின் யொவியர்ப் பாற்றித்
தமர்நமக் கீத்த தலைநா ளிரவில்" [75]

குறையன்றிச் சமைக்கப்பட்ட இனிய நெய்யுடைய வெண்சோற்றினை, யாவருக்கு வழங்குவது என்னும் வரையறை இல்லாமலே எல்லோர்க்கும் வழங்குவதுடன், பெரியோர் கருத்தை மேற்கொண்டு, புள்ளின் நிமித்தம் கண்டு அதுவும் இனியதாக, அழகிய வானகத்தின் இட முழுவதும் ஒளிர்ந்து விளங்கும் திங்கள், உரோகினி விண்மீனுடன் இணைந்து நிற்கும் குற்றம் நீங்கிய நாளில், திருமணவீட்டினை அழகு செய்து. அந்த வீட்டில் வணங்கும் தெய்வத்திற்கு வழிபாடு செய்து ஒலிக்கும் மண முழவுடன், பெரிய முரசு முழங்கவும் மணமகளுக்குத் திருமணத்திற்குரிய மங்கல முழக்கினைச் செய்த மகளிர் அவள்மீது அன்பு மேலோங்கிடப் பூப்போன்ற தம் கண்களால் இமையாது நோக்கியவராய் நின்று, பின்னர் நீங்கவும், மணமகளின் சுற்றத்தார், ஆர்வமுடன் கூடி மெல்லிய மலரையுடைய வாகையின் பல்லிய முதுகுடைய இலையை, வளர்ந்த கன்றால் மெல்லப்பட்ட தாழ்நிலத்திலே வளர்ந்த அருகம் புல்லினது, இடி ஒலியுடன் கூடிய மேகத்தின் முதல்மழையில் முளைத்த கழுவிய நீலமணி போன்ற இதழ்களையுடைய கிழங்கிடம் வளரும் நல்ல அரும்புகளுடன் தொடுத்த வெண்மையான காப்பு நூலை அணிவித்து, தூய திருமணப் புடவையால் அழகுறச் செய்த நிலையில், மழை பெய்தது போன்ற சலசலத்தலையுடைய புதுமணல் பரப்பிய பந்தலில், அணிகலன்களைப் பூண்ட அழகுச் சிறப்புடன் மணமகள் விளங்குவதால், அவளிடம் தோன்றிய வியர்வையையும் விசிறியால் மாற்றிய சுற்றத்தார் அவளைத் தனக்குத் துணைவியாக வழங்கிய அந்தத் திருமண நாளின் இரவிலே" - என்பது கருத்து அதன் தொடர்ச்சி அவளை அணுகி இருந்தபோது அவளது பிறைநுதல் புழுக்குற்றதைக் கண்ணுற்று காற்றுப்படுதற்கு அவ்வாடையைத் திறவென்று கூறிப் புடவையை நீக்குதலின் அவள் எப்படிப்பட்ட நாணுற்றாள் என்பதை விளக்குவதாகும்.

இந்தப் பாடலிலும் முன்னைய பாட்டினைப் போன்று, பண்டைத் தமிழர் திருமணம் ஓரிரு சடங்குகளுடன், தமது சுற்றமாகிய மங்கல மகளிரைக்கொண்டே நடைபெற்று வந்ததை உணரலாம். தமிழர்கட்கே உரியதாகப் பலகாலமாக வளர்ந்த நம்பிக்கைகள் சிலவற்றையும் இப்பாடல் குறிப்பிடுகின்றது. இப்பண்டைத் தமிழ்த்

திருமணச் சடங்கு முறையில் ஆரியக் கலப்பு எதுவும் அறவே இல்லை. தீ ஓம்பல் இல்லை. (வேள்வித்) தீ வலம் வருதல் இல்லை. தட்சிணை வாங்கப் புரோகிதர் இல்லை என்பது உணரப்படும் என்று தமிழர் வரலாறு வரைந்த பேராசிரியர் பி.டி. சீனிவாச அய்யங்கார் கூறியுள்ளார்.

எனவே, தமிழர்களிடம் சங்க காலத்திலும், அதற்குப் பின்னரும், பல நூற்றாண்டுகள் வரையிலுங்கூட, ஆரியப் புரோகித வைதிகமுறைத் திருமணச் சடங்கு இடம்பெறவில்லை என்பது தெளிவாகும்.

## தமிழர் திருமண முறைகள்

சங்கப் பாடல்களைப் படிக்கும்போது தமிழர்களுக்கு எனத் தனி திருமணமுறை ஒன்றிருந்ததை அறிய முடிகிறது. நம்மில் பலர் திருமணத்தைக் கல்யாணம் என்றே சொல்கிறோம். கல்யாணம் என்ற சொல் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்படவில்லை. அச்சொல் நாலடியாரிலும், ஆசாரக் கோவையிலும் காணப்படுகிறது. உதாரணத்திற்கு,

> பல்லா ரறியப் பறையறைந்து நாள்கேட்டுக்
> கல்யாணம் செய்து கடிப்புமிக்க – மெல்லியற்
> காதன் மனையாளும் இல்லாளா என்ஒருவன்
> ஏதின் மனையாளை நோக்கு. [76]

என்ற பாட்டின்மூலம் அறிய முடிகிறது.

## குறுந்தொகையில் திருமணம்

பலர் முன்னிலையில் மணம் நடந்தேறுவதால் சமூகமே மணமக்களுக்குப்பல நிலைகளிலும் காவலாக விளங்கும். அதோடு கட்டுப்பாட்டோடு கூடிய நிலையினை வலியுறுத்தும். இதனை மெய்யாக்கும் வகையில் குறுந்தொகைப் பாடல் ஒன்று உள்ளது.

தலைவி தன்தோழியிடம் தன்னைப் புணர்ந்த தலைவன் மணம் புரிவதாகச் சூளுரைத்ததையும், காலந்தாழ்த்துவதையும்,

> "யாரும் இல்லை தானே கள்வன்
> தானே அதுபொய்ப்பின் யான்எவன் செய்கோ
> தினைத்தாள் அன்ன சிறுகங்கால்
> ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
> குருகும் உண்டு தாம்மணந்த ஞான்றே" [77]

என்ற குறுந்தொகைப் பாடலின்வழி அறியலாம்.

தலைவியிடம் உன்னையே கரணமணம் புரிவேன் எனத் தலைவன், களவுமணம் புரிந்தபோது சூளுரைத்தான். அதற்குச் சாட்சியாக குருகு என்னும் பறவையும், மரங்களும் நீர் நிலைகளும் மட்டுமே சாட்சி. மணம் புரிவதாகக் கூறிய காலக்கெடு முடிவடைந்து விட்டது. தனது வாக்கைப் பொய்யாக்கி விடுவனோ என்பதால் புலம்புகிறாள். இதுபோன்ற அச்ச உணர்வுகளே மணம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்திருக்கலாம்.

## காதல் மணம்

வெவ்வேறு இனங்களைச் சேர்ந்தே இருவர் காதல் வயப்பட்டு செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் நிறம் மாறியதைப்போல இருவரும் உள்ளம் கலந்தனர் என்பதை,

> "யாயும் ஞாயும் யாரா கியரோ
> எந்தையும் நுந்தையு மெம் முறைக் கேளிர்
> யானும் நீயு மெவ்வழி யறிதும்
> செம்புல பெயனீர் போல
> அன்புடை நெஞ்சந்தாங் கலந்தனவே[78]

எனவரும் குறுந்தொகைப் பாடலால் விளக்கப்படுகிறது.

அன்பு மிக உடையவர்கள் உள்ளம் ஒன்றி இன்பம் பெற்ற பண்பை உணர்த்துகின்றது. மேகமாக இருந்தபோது மழைநீரானது நிலத்திற்கு எட்டா வானத்தில் நீந்தியது. நிலம் மழையிடம் செல்லவுமில்லை. வாவென்று அழைக்கவுமில்லை. அதுபோலத் தலைவி தலைவனைத் தேடிச்செல்லவில்லை. தலைவன் மழைநீரைப்போன்று இறங்கி தலைவியைத் தேடிவருவதால் நிலத்தைப்போன்று அவளும் அவனை ஏற்றாள். நிலமும் நீரும் ஒன்றாகியது. நீரின் நிறம் நிலத்திற்கேற்ப மாறியது. பிரிக்க இயலாத நிலை ஏற்பட்டது. அதுபோல அன்பால் இரு உள்ளங்களும் இணைவதே களவு மணத்தின் உயர்ந்த பண்பாகும். இங்குக் காதல் உணர்வு மரபாகவோ உறவாகவோ இல்லாது அமைவது சிறப்புக்குரியது.

## ஐங்குறுநூற்றில் களவு மணம்

களவுமணம் புரிந்திடத் தலைவி தாய் வீட்டுக்கு வருவதை தூதுவன் மூலம் அறிந்த செவிலித்தாய் நற்றாயிடம்,

> "மள்ள ரன்ன மரவந் தழீஇ
> மகளி ரன்ன வாடுகொடி நுடங்கு
> மரும்புதங் கொண்டே பெரும்பத வேனிற்
> காதல் புணர்ந்தன ளாகி யாய்கழல்

வெஞ்சின விறல்வேற் கானலியோ
டின்புறுபுகு தருமென வந்தன்று தூதே"[79]

எனக் கூறினாள்.

அன்னையே நம் பெண்ணை, எல்லாக்கேளிரும் வந்து மணப் பந்தலில் நின்று மணச்சடங்கை செய்ய, தலைமகன் ஊரில் மணவின்பத்தை அடைந்து, நட்பைப்பொருந்திய தலைவன் பின்னால் இன்று இம் மனையிடத்து இப்போது வருவர் எனச் சில்ர் தூதுவர் வந்து கூறினர் எனத் தம்மகளின் களவு வழிக் காதல் மணத்தை எடுத்துக் கூறினாள்.

## கலித்தொகையில் களவு மணம்

இவ்வுலகில் நிலையான புகழைத் தருவது காதலித்தவனை மணமுடிப்பதாகும். இதனைக் கலித்தொகையில் தலைவியின் கூற்றாக அமையும்.

"தோழி நந்நகர்
அருங்கடி நிவாமை கூறின் நன்றுஎன
நின்னொடு சூழ்வல் தோழி! நயம்புரிந்
தின்னாது செய்தா ளிவளென
மன்னா உலகத்த மன்னவது புரைமே[80]

எனும் பாடல் விளக்குகிறது.

தலைவி தலைவனிடம் காதல்கொண்டு களவில் ஒழுகி வந்தாள். இதனையறியாத நிலையில் பெற்றோர் ஊரறிய நன்மணம். செய்ய முற்பட்டனர். இதனால் கலங்கிய தலைவி தன்தோழியிடம், "நம் நகரில் பலரும் அறிய நடைபெறும் திருமணம், பிறனுடன் ஏற்படாதவாறு நான் விரும்பியவருடன் நடைபெற நீ நம் அன்னையை அணுகிக் கூறல் வேண்டும். காதலித்தவரை மணப்பதே உலகில் நிலைத்தப் பெரும்புகழைத் தரும் என்கிறாள்.

இது அக்கால மகளிரின் கற்பு நெறியினையும் களவு மணத்தில் உறுதியினையும் வெளிப்படுத்துகிறது.

## பழந்தமிழரின் பலியிடும் வழக்கம்

"நாட்டுப்புறவியல் என்பது மக்களது நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். நாட்டுப்புற நம்பிக்கை நாட்டுப்புறவியலின் அடிப்படைப் பொதுக்கூறு எனப்படும்". நாட்டுப்புற மக்களின் இயற்கையோடியைந்த பழக்கவழக்கங்கள் அவர்தம் வாழ்விற்குச் செழுமை ஊட்டுவதாய் மரபு ரீதியாகப் பின்பற்றப்படுவதாய்த் தோற்றம் பெறுகின்றன. நம்பிக்கைகள்,

சடங்குகள், பழக்கவழக்கங்கள் ஆகியனவற்றில் சில, குறிப்பிட்ட விழா நாட்களிலும், நிகழ்வுகளிலும் பயன்படுத்தப் பெற்றாலும் சில வகையான கூறுகள் தினசரி வாழ்வோடு ஒட்டியதாய் அமைகின்றன. இன்னும் சில கூறுகள் இரு நிலைகளிலும் அமைகின்றன. மனிதன் தோன்றிய காலத்திலிருந்தே பழக்கவழக்கங்கள் உருவாகத் தொடங்கிவிட்டன என்று சில ஆய்வுகள் தெரிவிக்கின்றன. இவற்றைப் பண்டைகால இலக்கியங்கள்வழி உறுதிப்படுத்த இயலும். அந்த வகையில் "பலியிடுதல்" என்னும் நாட்டுப்புறச் சடங்கு பண்டைய இலக்கியமான "குறுந்தொகை" யில் இடம்பெறுகிறது.

## பலியிடுதல் சடங்கு

"ஆடு, பன்றி, மாடு, கோழி ஆகியன இன்று பலியிடப்படு கின்றன. மனிதனது பாவங்களை விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் மாற்றலாம் என்ற நம்பிக்கையில் இவை பலிபொருட்களாக ஆக்கப்பட்டுள்ளன. இம்முறையை மாற்றியமைக்கும் முறை அல்லது பலியாடு முறை என்று அழைக்கலாம்.

தன் வேண்டுதலின்படி தான் நினைத்தது கிடைக்கப் பெற்றால் அதற்குமாறாக ஏதேனும் பொருள்களைக் கொடுத்து மன நிறைவடைவது "பலி" செய்தல் ஆகும். இவற்றில் உயிர்ப்பலி கொடுப்பதும் உண்டு, உயிர்ப்பலி கொடுப்பதே சிறப்பாகவும் கருதப்பெறும்.

## காக்கைக்குச் சோறு பலியிடல்

காக்கைக்குச் சோறிடல் என்பது நாட்டுப்புற மக்களின் வழக்கமாக உள்ளது. காலை உணவுமைத்த பின்னர் யாரும் உண்ணும் முன்பாகப் பச்சிலையில் சிறிதளவு உணவிட்டுத் தெய்வத்தை வழிபட்டு வீட்டுக் கூரைமேல் வைத்துவிடுவர். காக்கை தன்இனத்தோடு கரைந்து உண்ணும். தன்மரபில் இருந்த முன்னோர்கள் காக்கை வடிவில் வந்து உணவெடுத்து உண்பர் என்பது இதன் நம்பிக்கையாக உள்ளது. இதன் வழியாகத் தம் முன்னோர்களுக்கு உணவு படைத்த பின்பே வீட்டில் இருப்பவர் உண்கின்றனர் என்று கருதப்படுகிறது. காக்கைக்குச் சோறு படைக்கும் இப்பழக்கம் சங்க காலத்தில் "பலியிடல்" என்றே வழங்கப்பட்டிருக்கின்றது. தெய்வத்திற்குப் பலிகொடுத்தல் என்ற முறையில் காக்கைக்குச் சோறு படைத்தலும் "பலியிடல்" என்ற முறையிலேயே அமைந்திருக்கின்றன. இதனை,

**"திண்தேர் நள்ளி கானத்து அண்டர்**
**பல்ஆ பயந்த நெய்யின், தொண்டி,**

முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு
எழுகலத்து எந்தினும் சிறிது – என் தோழி
பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"[81]

என்ற குறுந்தொகைப் பாடல் வழி அறியலாம். அதாவது காக்கை கரைதலைக் கொண்டு தலைவன் வருவதற்குரிய நிமித்தமாகக் கருதிய தலைவி, தெய்வத்தை வழிபட்டு இடும் பலி உணவாகக் காக்கைக்குச் சிறப்புச் செய்ய நினைத்தாள். தலைவனைப் பிரிந்து வருந்திய தனக்கு ஆறுதலாகக் குரல் தந்தமையாலும், அதன் படியே தலைவன் வந்து சேர்ந்ததாலும் தலைவி மகிழ்ந்தாள். காக்கை செய்த உதவியை நோக்கும்போது, தான் வழங்கும் உணவு மிகச் சிறியதே எனவும் கருதினாள். இதன்வழிச் சங்ககாலம் முதற்கொண்டே காக்கைக்குச் சோறு பலியிடல் என்னும் நாட்டுப்புறச்சடங்கு இருந்தை அறியமுடிகிறது.

## விளைநெல் பலியிடல்

நாட்டுப்புறத்தில் காணலாகும் சடங்குகளில் வேளாண் சடங்குகள் என்பதும் அடங்கும். வேளாண் முறைகளில் நாற்றுவிடுதல் முதற்கொண்டு அனைத்தும் தெய்வத்தை வழிபட்ட பின்னரே தொடங்குவர். நோயின்றிப் பயிர் விளைதல் வேண்டுதலின் நோக்கமாகும். அதன்படி, விளைந்த பொருட்களை அறுவடை செய்யும்போது தான் ஏற்றுக் கொண்ட தெய்வத்தின் அருளாலே பயிர் நல்லமுறையில் விளைந்தது எனக் கருதி அதற்குத் அத்தெய்வத்திற்கு நேர்த்திக் கடன் செய்வர். அறுவடை செய்யும் போது தான் ஏற்றுக் கொண்ட தெய்வத்தின் அருளாலே பயிர் நல்லமுறையில் விளைந்தது எனக் கருதி அதற்கு அத்தெய்வத்திற்கு நேர்த்திக் கடன் செய்வர். அறுவடை செய்யும் நாளில் விவசாயி குடும்பத்துடன் வயலுக்குச் செல்வார். வயல் வெளியிலேயே கற்சிலை இருக்கும் அல்லது தற்காலிகமாக வைப்பர். சிலர் ஊர்க் கோயிலுக்கே சென்று சடங்கு செய்வதும் உண்டு. சிறிதளவு நெற்பயிர் அறுத்து, உதிர்த்து வள்ளத்தில் நிறைப்பர். அதனைத் தெய்வத்தின் முன் படைத்து வழிபடுவர். இவ்வழிபாட்டில் விளைந்த நெல் வீணாகாமல் வீடுசேர வேண்டும் என்பது முதன்மையாக இருக்கும். தெய்வத்திற்கு நெல் பலியிடும் இச்சடங்கின் பழமையை,

"புனவன் துடவைப்பொன்போல் சிறுதினைக்
கடிஉண் கடவுட்க இட்ட செழுங்குரல்
அறியாது உண்ட மஞ்ஞை, ஆடுமகள்
வெறிஉறு வனப்பின் வெய்துற்று, நடுங்கும்

சூர்மலை நாடன் கேண்மை
நீர்மலை கண்ணொடு நினைப்பு ஆகின்றே”[82]

என்ற பாடல்வழி அறியலாம். அதாவது, தெய்வத்திற்குப் படைக்கப்பட்ட குறவன்தோட்டத்தில் விளைந்த தினைக் கதிரைத் தான் உண்ணுதல் கூடாது என்ற அறிவின்றி, அதன் செழுமைகண்டு மயில் உண்டுவிட்டது. அக்கதிரை உண்ட மயில் வெறியாடுகின்றவனைப் போல் உள்ளம் வெந்து உடல் நடுங்கும் எனப் பொருள்படும்படியாகப் பாடல் அமைந்துள்ளார் புலவர். இதன் மூலமாக அறுவடைக் கதிரைத் தெய்வத்திற்குப் பலியிடும் பழக்கம் இருந்ததை அறிய முடிகிறது.

“கதிர் பலியிடுதல்” என்ற இச்சடங்கு தினைக்கதிர் பலியிடுதல் என்ற பாருளில் குறிஞ்சித் திணைப் பாடல்களால் மட்டுமே காணப்படுகிறது. அதுபோன்று மருதத் திணைப் பாடல்களில் நெற்கதிர் பலியிடல் என்ற குறிப்பு இந்நூலில் அமையப்பெறவில்லை. ஆதலால், பலியிடுதல் சடங்கு முதன்முதலில் குறிஞ்சி நிலத்தில் தோன்றிப் படிநிலை வளர்ச்சியாக மருதநிலம் முதலானவற்றில் பரவியிருக்கலாம் என்று கருதமுடிகிறது.

## உயிர்ப் பலியிடுதல்

“உயிர்ப் பலியிடுதல்” என்பது நாட்டுப்புற மக்கள் தாங்கள் வளர்த்த ஆடு, மாடு, சேவல், பன்றி, எருமை போன்ற விலங்குகளின் உயிரைத் தெய்வத்திற்குப்ப லியாகக் கொடுத்தல் ஆகும். இதில்ஆண் இனமே பெரும்பாலும் பலி கொடுக்கப்படுகிறது. கோயில் திருவிழாக்களின்போது வேண்டுதல் இன்றியும் விருந்திற்காகப் பலிகொடுப்பதுண்டு. கோரிக்கை வைத்து அது நிறைவேறிய பின்னர் உயிர்ப் பலி கொடுத்துத் தன் கடனை நிவர்த்தி செய்வர். இச் சடங்குமுறை சங்ககால மக்களின் வாழ்க்கை முறையில் இடம் பெற்றிருந்ததை,

“முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேலஸ
சினவல் ஓம்புமதி; வினவுவது உடையேன்;
பல்வேறு உருவின் சில்அவிழ் மடையொடு,
சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி ஆயின், அணங்கிய
விண்தோய் மாமலைச் சிலம்பின்
ஒண்தோர் அகலமும் உண்ணுமோ பலியே?”[83]

என்ற பாடல் வழி அறியலாம். இப்பாடல் வெறியாடலின்போது தோழி அறத்தோடு நிற்றல் என்னும் துறையைச் சேர்ந்தது.

பலவேறுபட்ட பொருட்களுடன் தினை அரிசிச் சோற்றுப் பலியையும் சேர்த்து, சிறிய ஆட்டுக்குட்டியைக் கொன்று அதன் குருதியை நெற்றியில் தடவி வழிபட்டுக்கொடுத்தாகும். இங்கு ஆட்டுக் குட்டியுடன் இடும் அரிசிச்சோற்றுப் பலி என்பது இன்றைய நாட்டுப்புற வழக்காற்றி செய்யப்படும் துணைச் சடங்கு உயிர்ப்பலியை நிறைவேற்றுவதற்காக பொங்கல் வைத்துத் தெய்வத்திற்கு அரிசிச் சோற்றுப் படையலிட்டுப் பூசை செய்த பின்னர் உயிர்ப்பலி கொடுக்கப்படுகிறது. இதன்மூலம் சங்ககால மக்களின் உயிர்ப்பலிச் சடங்கினை உணர முடிகிறது.

## சடங்குகள்

தலைவரைப் பிரிந்த மகளிர் அவர் விரைவில் வரும்பொருட்டுத் துர்க்கையை வணங்குவர். தலைவியை அழைத்துக்கொண்டு உடன்போக்குச் செல்லும் தலைவன் கையில் வில்லும் காலில் கழலும் அணிந்திருப்பான். மணம்புரியாத மகளிர் சிலம்பு அணிந்திருப்பர். மணம்புரிந்தும் மகளிர் சிலம்புகழி நோன்பு சடங்கினை மேற்கொள்வர்.

**“வில்லோன் காலன கழலே, தொடியோன்**
**மெல்லடி மேலயும் சிலம்பே, நல்லோர்**
**யார்க்கொல்? அளியர் தாமே** [84]

என்ற பாடலடிகளால் இதனை அறியலாம்

## முதுமக்கள் தாழி

இறந்தவர்களைத் தாழியில் இட்டுப்புதைத்தல் வழக்கம். கிள்ளிவளவன் மறைந்த பின் ஐயூர் முடவனார் குயவனை நோக்கி, அம்மன்னனுக்கு இப்பெருநிலத்தை உருளியாகவும், பெருமலையை மண்ணாகவும் கொண்டு, ஒரு பெரும் தாழி செய்ய உன்னால் முடியுமா என வினவுதலாலும். [85]

**மன்னர் மறைத்த தாழி**
**வன்னி மன்றத்து விளங்கிய காடே.** [86]

என்று புலவர் கூறுதலானும் இறந்தவர்களைத் தாழியில் இட்டுப் புதைக்கும் வழக்கம் அறியப்படும்.

## வடக்கிருத்தல்

வடக்கிருந்து உயிர்துறத்தலும் அங்ஙனம் உயிர்துறந்தோர்க்கு நடுகல் நட்டு வழிபாடு செய்தலும் பண்டை வழக்கம். கோப்பெருஞ் சோழன் பல்புகழும், கொடையும், செங்கோண்மையும், அன்பும், மறமும் உடைய தக்கோன், உலகம் துயருழக்க, அவன் வடக்கிருந்து நடுகல்லாயினன்.[87] இச்செய்தி போரில் மாய்ந்த மறவர்க்கேயன்றிச் சிறப்புடை மன்னர்க்கும் நடுகல் நட்டும் பரவியதைப் புலப்படுத்தும்.

## நடுகல் வணக்கம்

பண்டைத் தமிழ் மக்களிடம் வேரூன்றியிருந்த வழிபாடுகளில் மிகவும் குறிப்பிடத்தக்கது இறந்தார்க்கு நடப்பட்ட கற்களை வணங்கும் நெறியாகும். போரில் இறந்து பட்ட வீரர்களின் நினைவினைப் போற்றும் வண்ணம் அவர்களின் பெயரையும், பெற்ற வெற்றியையும் அவர்களின் பெருமைகளையும் பொறித்துக் கல்நட்டு வணங்கும் மரபு தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்துள்ளது.

> காட்சி கால்கோள் நீர்ப்படைநடுகல்
> சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்த வென்று
> இரு மூன்று வகையில் கல்லொடு புணர [88]

காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை வாழ்த்து என்று ஆறு நிலைகளை அவர் குறித்துள்ளமை காணமுடிகிறது. இதனையொட்டி சிலப்பதிகார ஆசிரியர் தனது வஞ்சிக் காண்டத்தை உருவாக்கியுள்ளார் என்கிறார்.[89] இதன் மூலம் இறந்தார்க்குக் கல் நட்டு வழிபடும் முறை கி.பி. 11ஆம் நூற்றாண்டு வரை இருந்துள்ளது என அறிஞர்கள் கண்டுள்ளனர்.

சங்க செய்யுட்களில் காணப்படும் நடுகல் பற்றிய குறிப்புக்களில் பல வெட்சித் திணையின் தொடர்புடையனவாகவே இருந்துள்ளது. ஆநிரை மீட்டு அம்முயற்சியில் உயிர் துறந்த வீரர்களே பாராட்டப் பட்டுள்ளனர். ஆக்கல் நாட்டின் பொருளாதாரத்தில் பெற்றிருந்த சிறப்பிடத்தையே இது குறித்தது எனலாம். நாட்டின் பொருளா தாரத்திற்குப் பகைவரால் ஏற்பட்ட தீங்கிலிருந்து காப்பாற்றுதற்கு உயிர்விட்ட வீரர்களைப் போற்றியது வியப்புக்குரியது அன்று நடுகற்கள் பற்றி.

> ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
> ஓங்குநிலை வேங்கை ஒள்ளிணர் நறுவீப்
> போந்தையந் தோட்டில் புனைந்தனர் தொடுத்துப்
> பல்லான் கோவலர் படலை சூட்டக்
> கல்லா யினையே கடுமான் தோன்றல் [90]

ஓங்கி வளர்ந்த வேங்கையின் மலர்களை வெள்ளிய பனந்தோட்டோடு விரவித் தொடுத்து மாலையாகச் சூட்டிக் கோவலர் ஒரு வீரனுக்குகல் நட்டதை இப்பாடல் மூலம் அறிய முடிகிறது. இக்கற்களில் வீரனுடைய பெயரும் பீடும் எழுதப்பட்டன. அணிமயிற் பீலியும் மலர் மாலைகளும் சூட்டப்பட்டதை,

> நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
> பெயரும் பீடும் எழுதி அதர் தொறும்
> பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்[91]

விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல் [92]

பாலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல் வகுத்துத் தொடுத்த செம்பூங் கண்ணியொடு
அணிமயிற் பீலிசூட்டிப் பெயர் பொறித்து
இனிநட்டனரே கல்லும் [93]

இப்பாடல்கள்மூலம் அறிய முடிகிறது. நடுகற்கள் அமைந்த இடத்தைச் சுற்றி வேலைநட்டுக் கேடயங்களையும் நிறுத்தி வைத்தனர் என்பதனை,

கிடுகு நிரைத்து எ.்.கூன்றி
நடுகல்லின் அரண் போல [94]

என்ற குறிப்பாலும்,

பீலி சூட்டிய பிறங்குநீஜலு நடுகலு
வேலூன்று புலுஜகு வேறுமுஜனு குடுக்கும் [95]

ஏனுறு புகுதீயுர்லும் ஆறுீயுலூர்மு. இக்குறுகுளுக்கு வேஞ்ஜகு முலுஜரு முட்டுமுனுறுீசு சேமுஜமுயுர்னு குருநுஜது முலுஜருயும் சூட்டினர் என்பதை,

ஏறுடை இனநிரை பெயர, பெயராது
செறிகரை வெள்வேல் மழவர்த் தாங்கிய
தறுகணாளர் நல்இசை நிறுமார் [96]

என்ற பாடல் கூறுகிறது. இத்தகைய கற்கள் வரிசை வரிசையாகவும் மிகப் பலவாகவும் சில இடங்களில் காணப்பட்டன எனும் போது,

வில்லீண்டு அருஞ்சமம் ததைய நூறி
நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்
நிரைநிலை நடுகல் [97]

மறவர்களின் மாண்பு புலனாகிறது. மேலும் வீரர்கள் மதிக்கப்பட்டதை நடுகற்களின்மேல் துணியினால் பந்தலிடும் வழக்கம்மூலம் அறிய முடிகிறது, அவ்வழக்கத்தை,

உயரிசை வெறுப்பத் தோன்றிய பெயரே
மடஞ்சால் அணிமயர் சூட்டி
படஞ்செய் பந்தர்க் கல்விசை யதுவே [98]

எனப் புறநானூறு கூறுகிறது.

போரில் உயிர்துறந்த வீரர்க்கு நடுகல் நாட்டி, அதில் அவர்தம் பீடும் சிறப்பும் பொறித்து, மலர் சூட்டிக் கள்ளும் கறியும் படைத்து முற்காலத்தே வழிப்பட்டனர்.

நடுகற் பீலி சூட்டி, நாரரி
சிறுகலத்து வகுப்பவும் கொள்வன் கொல்லோ,[99]

நடுகல் துணியாலோ, பசிப்ப தழைகளாலோ, செய்யப்பட்ட பந்தர்க்கீழ் அமைக்கப்பட்டது, செம்பூங்கண்ணியும், படலைமாலையும் சூட்டி அதனைத்தொழுது வழிப்பட்டனர்.[100]

## குறிப்புகள்

1. புறம்., 192;1
2. மேலது., 33-3
3. வே.தி. செல்வம்., தமிழக வரலாறும் பண்பாடும்
4. புறம்., 257-13
5. மேலது., 215-1-4
6. மேலது.,
7. மேலது., 326-1-6
8. மேலது.,293, 3-6
9. மேலது., .339: 1-6
10. புறம்., 28
11. குறுந்., 309
12. புறம்., 35:20-30
13. மேலது., 42:13-15
14. மேலது., 18
15. பெ.மாதையன், 2004:70:71
16. புறம்., 17,18
17. பெ.மாதையன், 2004:21
18. புறம்., 11:5-7
19. மேலது., 13:10-14
20. குறள்., 20
21. மணிமேகலை, 11,95-96
22. புறம்., 18:18-23
23. மேலது., 13:10-14
24. மேலது., 392-9,10
25. மேலது., 343;1-8
26. மேலது., 30;11-5
27. மேலது., 56;18
28. மேலது., 385;2
29. மேலது., 345;8-9

30. மேலது., 21;7-8
31. மேலது., 170; 15-17
32. மேலது., 218;1-4
33. முல்லைப்பாட்டு. 55, 56
34. குறுந்., 261:6:7
35. அகம், 43:6-8
36. கலித்தொகை 94:41-43
37. அகநானூறு 77
38. மதுரைக்காஞ்சி, 489-492
39. பதிற்றுப்பத்து 24:6-8
40. கலித்தொகை, 69:5-7)
41. பாரதியார் பாடல்கள்
42. மேலது.,
43. அகம்., 239
44. குறுந்தொகை, 178
45. நற்றிணை, 173
46. புறம், 60
47. அகம்
48. நற்றிணை, 202
49. சிலம்பு.,
50. பாரதியார் பாடல்கள், தெய்வீகப் பாடல்,
51. மேலது.,
52. குறுந்., 318: 2-3
53. மேலது., 214: 6-7
54. மேலது., 23. 1-3
55. மேலது., 298: 6
56. மேலது., 26 : 3-4
57. மேலது., 105: 2-4
58. மேலது., 366: 3
59. மேலது., 53: 3-4
60. மேலது., 360: 1-21
61. குறுந்.111: 1-2
62. குறுந். 362: 1-7
63. புறம் 20:13-15
64. அகம், 239
65. நெடுநல்வாடை 75,78

66. நெடுநல்வாடை, 39-44
67. நற்றிணை 22
68. நற்றிணை 300
69. அகம்., 86
70. குறுந்.
71. அகம் 136
72. நற்றிணை
73. மேலது
74. அகம்., 86
75. அகம்.
76. கலி., குறிஞ்சி. பா.18 வரி 16 – 20
77. ஆசாரக்கோவை
78. குறுந்.,
79. ஐங்குறுநூறு
80. கலித்தொகை
81 காக்கைப்பாடினியார் நச்செள்ளையார், 210
82. நக்கீரர், 105
83. வேம்பாற்றூர்க் கண்ணன் கூத்தன், 362
84. குறுந்., 87
85. புறம், 228
86. பதிற்றுப்பத்து 44:22,23
87. புறம் 221
88. தொல். புறத் -60
89. அ. தெட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும்,ப.187
90. புறம். 265 : 1-5
91. அகம் 67
92. ஐங். 352
93. புறம். 267
94. பட். 78 - 79
95. அகம். 131
96. மேலது. 269
97. மேலது. 387
98. புறம். 260
99. மேலது., 232
100. மேலது., 306

# 4. நிமித்தங்கள் பார்க்கும் பழக்கவழக்கங்கள்

இலக்கியம் மக்களுடைய வாழ்க்கையினை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் என்பது இலக்கிய ஆய்வாளரின் எண்ணமாகும். வாழ்க்கையில் மனிதர் கண்ட ஆழ்ந்த அனுபவத்தையும் பேருண்மைகளையும் வெளியிடுவதும் இலக்கியமே. ஒவ்வொரு சந்தர்ப்பமும் சூழலும் முன்னர் வாழ்ந்த மனிதர்களை எவ்வாறு தாக்கின என்பதையும், அத்தாக்குதல்களின்போது அவர்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதையும் அறிவிக்கும் அனுபவ அறிவுக் கருவூலங்களாக இலக்கியங்கள் இலங்கின. வாழ்ந்து காட்டும் வாழ்க்கையைச் சொற்களாற் கூறுவதே இலக்கியமாகும்.[1]

மக்களுடைய அன்றாட வாழ்வின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளுமே காலப்போக்கில் நாகரிகப் பண்பாட்டுச் செயல் முறைகளாக மாறிவிடுகின்றன. அவற்றுள் சில நாட்டுக்குநாடு வேறுபட்டும், சில ஒன்றுபட்டும் விளங்குவன. முன்னோர் போற்றியன இன்று மாறுபடலாம், உயர்ந்த பண்பாட்டுக்குரியனவாய் இருப்பனவே எஞ்ஞான்றும் காலவெள்ளத்தைக் கடந்து நிற்கும் கலங்கரை விளக்கங்களாகத் திகழ்வன.

நம் பழந்தமிழ் இலக்கியங்களும் பண்டைய மக்களுடைய வாழ்வின் பல்வேறு கூறுகளையும், பழக்க வழக்கங்களையும் படம் பிடித்துக் காட்டும் பான்மையனவாய் விளங்குகின்றன. பழந்தமிழரது நம்பிக்கைகள் மிகப் பரந்து பட்டவை. அவற்றுள் ஒன்று 'சகுனம்' அல்லது 'நிமித்தம்' பார்த்தல். இன்றைய உலகம் தேவையற்ற கருத்துகளையும் பழக்கவழக்கங்களையும் விட்டொழித்து முன்னேறும் விரைவுலகம், திங்களையும் செங்கதிரையும் இன்ன பிற கோள்களையும் ஆயும் அறிவியல் உலகம். ஆயினும், அன்று போல் இன்றும் இந்நிமித்தம் பார்க்கும் வழக்கம் பலரிடையே இருப்பதைக் காணலாம். நாளும் கோளும் பார்த்தும், நல்லன அல்லன பார்த்தும் செயலாற்றுவது அன்றிருந்தது போலவே இன்றும் உண்டு. உலகில் எங்கும் என்றும் உண்டு.[2]

## மனித இயற்கையும் நிமித்தமும்

நிமித்தங்களை அறிவியல் நோக்கில் ஆராய்ந்து அவை அனைத்தும் உண்மை என நிறுவுதல் இயலாது. அவையெல்லாம் மூட நம்பிக்கைகள் என்று கருதினாலும், அவற்றுள் சில உலகியலை விட்டு முற்றும் விலகியதாகக் கொள்ளவும் இடமில்லை. வாழ்க்கைப் போராட்டத்தில் மக்கள் தங்களுடைய ஆற்றல்களை அதிகரித்துக் கொள்ள இவற்றை உருவாக்கினர் என்பர். பல பண்பாட்டு நிலைகளிலுள்ள மக்கள் குறிப்பிட்ட சில நம்பிக்கைகளை உடையவர்களாயிருப்பதும் இங்கு எண்ணுதற்குரிய ஒன்றாகும்.[3]

நிமித்தங்கள் அனைத்தும் அச்சத்தின் காரணமாகவே தோன்றியிருக்கலாம் என்று நாம் கருதவும் கூடும். ஒரு செயலினை ஆற்றும் முன்னர் ஒருவன் ஏதேனும் ஒரு பறவையினை இயல்பாகப் பார்க்க நேரிடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்பணியினை நிகழ்த்துங்கால் அவனுக்குப் பல்வேறு துன்பங்களும் இடையூறுகளும் ஏற்படுகின்றன. தான் தொடங்கிய அப்பணியில் அவன் தோல்வி யுறுகிறான். தோல்வியுற்ற அவன், தான் பார்த்த பறவைக்கும் தன் செயலுக்கும் தொடர்பு இருப்பதாகக் கருதுகிறான். பன்முறை இதுபோன்ற நிகழ்ச்சிகள் அவனுக்கு ஏற்பட்டிருத்தல கூடும். எனவே பறவையினைப் பார்ப்பதும், இவைபோன்ற பிற குறிகளும் அவனுக்குத் தீ நிமித்தங்களாகத் தோன்றுகின்றன. இவ்வாறே சில நன்னிமித்தங்களும் அவன் வாழ்க்கையில் தோன்றியிருத்தல் கூடும். நாளடைவிலே இவற்றில் அவனுக்கு நம்பிக்கையும் பிறக்கிறது.

இன்றும் இது போன்ற நம்பிக்கைகள் நம்மிடையே இருந்து வருவதைக் காண்கிறோம். எண்ணெய்க் குடம், விறகுக் கட்டை, வாள், அரிவாள் முதலான கொலைக் கருவிகள் எதிர்ப்படலும், கைம்பெண் எதிர்ப்படலும், தீ நிமித்தங்களாக எண்ணப்படுகின்றன. 'மிருச்சகடிகம்' என்னும் வடமொழி நாடகத்தில் புத்த துறவியார் எதிர்ப்படுதலைத் தீ நிமித்தமாகக் குறிப்பிடுவதும் இங்கு எண்ணுதற்குரியதாம்.[4] தீ நிமித்தங்களைக் கண்டஞ்சுவோர் நன்னிமித்தம் நிகழ வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். எதிர் பார்த்தது நிகழாதபோது தாமாகவே நிமித்தங்களைச் செயற்கையாக உண்டாக்குகின்றனர். இவ்வழக்கம் இன்னும் நாஞ்சில் நாட்டில் நடைமுறையிலிருப்பதைக் காணலாம். ஒருவர் ஊர்ப்பயணம் புறப்படும் போது அவர் தம் வீட்டாரையே தண்ணீர்க் குடத்தோடு, அல்லது குழந்தையோடு நன்னிமித்தங்களாக எதிரே வரச் செய்வாராம்.[5] இதனை அச்சத்தினால் வளர்ந்த காப்பு உணர்வு என்றே கூறலாம்.

## நிமித்தம் - சொல்லும் பொருளும்

நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி என்பர். அரசரின் உறுதிச் சுற்றத்தார் ஐவருள், வருவது கூறவல்ல குறி சொல்பவரை 'நிமித்திகர்' என்று கூறுவதும் ஈண்டு எண்ணுதற்குரியது. நிகழ்ச்சிக்கு ஏதுவாகிய காரணத்தை 'நிமித்த காரணம்' என்று குறிப்பர். தொல்காப்பியத்தில் புறத்திணையியலில், 'நாளாலும் பறவைகளாலும் தோன்றும் காரணங்களை,

நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும் [6]

என்று 'நிமித்தம்' என்றே கூறக் காணலாம்.

'தலைவியும் தலைவனும் உடன்போகிய காலத்து அம் மகளை நினைத்துப் பயந்த நற்றாய் தன்னையும் தலைவனையும் தன் மகளையும் குறித்துக் காலம் மூன்றுடன் நிலைபெற்றுவரும் நல்வினை தீவினைக்குரிய காரியங்களைத் தன் நெஞ்சிற்கு விளக்கி வருந்திக் கூறுவதாகத்' தொல்காப்பியர் அகத்திணை இயலில் பின்வரும் நூற்பாவினைக் கூறுவர்.

தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சஞ் சார்தலென்று
அன்ன பிறவு மவற்றொடு தொகைஇ [7]

இதற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர்,

"அச்சஞ் சார்தலென்று கூறப்பட்டவற்றையும் அவை போல்வன பிறவற்றையும் பல்லி முதலிய சொல், நற்சொல், தெய்வங் கட்டினும் கழங்கினும் இட்டு உரைக்கும் அத்தெய்வப் பகுதி என்றவற்றோடு வருந்திக் கூறினும்" என்று உரை எழுதுவர். இவற்றால் தொல்காப்பியர் காலத்து இருந்த நிமித்தக் குறிகளை அறிய முடிகிறது.

பறவைகளை அடிப்படையாகக் கொண்டு பார்க்கப்படும் நிமித்தம் புள் நிமித்தம் என்றாயிற்று.[8] 'புள் ஓர்த்தல் என்பதற்கு மலைபடு கடாத்தில் நச்சினார்க்கினியர் நிமித்தம் பார்த்தல்' என்றே உரை எழுதுவர்.[9] இதுவே நாளடைவில் 'சகுனம் பார்த்தல்' என்றாகியிருக்கலாம். சகுனம் என்பதற்குப் பறவை என்றும் பொருள் உண்டு.[10] பறவைகள் வலமிடமாதல் முதலிய நன்மை தீமைக் குறிகளே 'சகுனம் பார்த்தல்' என்றாகியிருக்கக் கூடும். 'புறப் பொருள்

வெண்பாமாலை' 'சொகினம்' என்று கூறுவதும் ... உளங்கொளத்தக்கதாம்.

ஆடமைத் தோனி விரிச்சியும் சொகினமும்
வேறுபட வஞ்சி விதுப்புற் றன்று[11]

என்பது அப்பாடல். இதற்கு உரையியற்றிய சாமுண்டி தேவநாயகரும், 'நற்சொல்லும் நிமித்தமும்' என்றே பொருள் கூறுவர்.

ஆனால், இன்று சகுனம் பார்த்தல் என்பது பொதுவாக எல்லா வகையான நிமித்தங்களையும் தன்னுள் அடங்கியதாகக் கருதப்படுகிறது.

## நிமித்தமும் அதன் வகைகளும்

இந்நிமித்தத்தைப் பல்வேறு வகையாகப் பாகுபடுத்திப் பார்ப்போமானால் பல அரிய செய்திகளை அறிதல் கூடும். பொதுவாக நற்செயலையும், நற்பயனையும் காட்டும் குறியினை 'நன்னிமித்தம்' எனவும், தீச்செயலையும் தீமையையும் காட்டும் குறியினைத் 'தீ நிமித்தம்' எனவும் வழங்குவர். இந்நிமித்தங்கள் பல்வேறு பொருள்கள் பற்றியும் செயல்கள் பற்றியும் எழுந்தன. மரம், பறவை, விலங்குகளையும் மாந்தரையும் அடியொற்றி இவை எழுந்தன. மாந்தர் கண்ட கனவுகளும் நிமித்தங்களாய் அமைந்தன.

### மரம்

மரத்தை அடிப்படையாகக்கொண்டு எழுந்த நம்பிக்கைகளைப் பழந்தமிழர் மட்டும் கொண்டிருக்கவில்லை. பிற நாட்டாரும் இத்தகைய நம்பிக்கைகளில் நாட்டஞ் செலுத்தியிருந்தனர். மேலை மிசௌரி பள்ளத்தாக்கில் வாழ்ந்த சிவப்பிந்தியர்களும், மேற்கு ஆப்பிரிக்காவில் வாழ்ந்த மக்களும் இத்தகு நம்பிக்கையினைக் கொண்டிருந்தனர்.[12] நம் பழந்தமிழர் கொண்டிருந்த இந்நம்பிக்கையினைத் தொல்காப்பியத்திலும் பதிற்றுப்பத்திலும் இனிது காணலாம்.

### உன்ன நிலை

உன்னம் என்பது ஒருவகை மரம். இம்மரம் தளிர்த்துத் தழைத்திருப்பின், அரசனுக்கு நன்மையாம், கரித்து காட்டின் தீமையாம். படையெடுத்துச் செல்லும் வேந்தனும் படை மறவர்களும் இந்நிமித்தம் பார்த்துப் புறப்படுவர். தொல்காப்பியர் புறத்திணையியலில்,

உடல் வேந்தடுக்கிய உன்னநிலை[13]

என்று கூறுவர்.

உன்னநிலை என்னும் துறை, "வேந்தன் கருத்தானன்றி அவன் மறவன் வேந்தற்கு நீ வென்றி கொடுத்தால் யான் நினக்கு இன்னது செய்வலெனப் பரவுதலும், எம்வேந்தற்கு ஆக்கம் உள்தெனின் அக்கோடு பொறுத்தருள்க வென்வும் பகை வேந்தற்கு ஆக்கம் உளதெனின் அக்கோடு படுவதாக வெனவும் நிமித்தம் கோடல்" என இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையும் படித்தின்புறற்குரியது. [14]

சேரமன்னன் நார்முடிச் சேரலை வெற்றிகொள்ள விரும்பிய பகைவர்கள் உன்ன மரத்தினை நிமித்தம் வேண்டினராம். விரிந்து தழைக்க வேண்டிய உன்னம் கரிந்து உதிர்ந்து காட்டி அவர்கள் பெறும் தோல்வியினை முன்னரே காட்டியதாம். [15]

**பொன்னி னன்ன பூவிற் சிறியிலை**
**புன்கா லுன்னத்துப் பகைவன்**

என்று செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பொய்யா நாவிற் கபிலர் 'உன்னத்துப் பகைவன்' என்றே பாராட்டுகின்றார். ஈண்டுப் பேராசிரியர் கோ. சுப்பிரமணிய பிள்ளை, 'உன்னத்துப் பகைவன்', என்பதற்குத் தரும் இருபொருள்களும் எண்ணுதற்குரியனவாம்.[16] உன்ன மரமன்றி ஏனைய பெருமரங்களும் இந்நிமித்தத்தைக் காட்டுவன எனப் புறநானூறும் பகர்கிறது. [17]

புறப்பொருள் வெண்பாமாலையில்,

**துன்னருஞ் சிறப்பிற் றொடுகழன் மன்னனை**
**உன்னஞ் சேர்த்தி யுறுபுகழ் மலிந் தன்று**[18]

என்று உன்னமரத்தின் வாயிலாக நிமித்தம் கூறி மன்னன் பெற்ற புகழினைப் பாராட்டுவர்.'மாற்றாரும் மறவரும், கட்டிய இவ்வீரக் கழலானிடத்தே மாறுபாடு கெட்டனர். உன்ன மரமே, நீயுந் தழைப்பாயாக' என்று புகழ்ந்ததை,

**துன்னருந் தானைத் தொடுகழலான் றுப்பெதிர்ந்து**
**முன்னர் வணங்கார் முரண்முருங்க – மன்னரும்**
**ஈடெலாந் தாங்கி யிகலவிந்தார் நீயுமுன்**
**கோடெலா முன்னங் குழை.** [19]

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடலால் நன்கறியலாம்.

மரம் தழைத்தும் உதிர்ந்தும் காட்டும் நன்னிமித்தத் தீ நிமித்தக் குறிகள் உலகெங்கும் பண்டைய மக்களிடமும் பரவி

யிருந்தன. உரோம் நாட்டில் புனிதமரம் ஒன்று உதிர்ந்து வீழ்கின்ற காட்சியினைக் கண்டதும் அச்சத்தில் கூக்குரலிடுவராம். அண்மையில் இருப்பவர்கள் அக்காட்சியினைக் கண்டதும் அது நெருப்பு ஏற்படும் தீ நிமித்தம் எனக்கருதி நீர்வாளிகளோடு குழுமிப் பாதுகாப்பராம்.[20] எனவே இந் நம்பிக்கையும் அதன்வழி எழுந்த அச்சமும் எல்லா நாட்டிலும் பரவியிருந்தது எனலாம்.

## பறவை

பறவைகள் ஒலிப்பதையும் பறப்பதையும் கொண்டும் நிமித்தங்கள் எழுந்துள்ளன. ஒரு நாட்டில் 'புதுப்புள்வரினும் பழம்புள் போகினும் தீயநிமித்தம்' என்று புறநானூறு கூறும்.[21] ஆனிரையிருக்கும் காட்டில் காரியென்னும் பறவை கத்தினாலும் அது தீய நிமித்தமாகக் கருதப்பட்டது. காரியென்னும் பறவை உட்புகுந்ததால் தீமை வருமென்று ஆநிரையிலிருந்த நிமித்தகன் கூறினான் என்று சீவக சிந்தாமணி கூறுவதும் இங்குக் கருதத் தக்கதாகும்.[22] இக் காலத்தும் ஒருவர் வெளியிற் புறப்படும்போது விலங்கு பறவைகளில் இவை இவை எதிரில் வந்தால் இன்ன இன்ன நிமித்தம் என்று கருதுவதையும் காணலாம்.

## புள் ஓர்த்துக் கழிதல்

போர்களமாயினும், காதற்களமாயினும் நிமித்தம் பார்த்துப் புறப்பட்டது போலவே பொருளும் பரிசிலும் பெற விழைந்த புலவரும் கூத்தரும் நிமித்தம் பார்த்தே புறப்பட்டனர். பரிசில் பெற்ற நன்னனிடம், வழியிற் கண்ட கூத்தரை ஆற்றுப்படுத்த விரும்புகின்றான் ஒரு கூத்தன். அவர்கள் செல்ல வேண்டிய வழியினை கூறி வருங்கால், 'இராக்காலத்து, பகற்பொழுதில் நடந்து வந்த வருத்தம் போக்கும்படி புல்வேய் குரம்பையிடத்துத் தங்குவீர். சின்னாள் தங்கிய பின்னர், இராக்காலம் நீங்குதலையுடைய விடியற்காலத்து நிமித்தம் பார்த்துப் போவீர்' என்கின்றான். இதனை,

> புலரி விடியல் புள் ஓர்த்துக் கழிமின்[23]

என்னும் மலைபடுகடாம் தொடரால் நன்கு அறியலாம்.

> நல்ல சகுன மென்ன வெதிர் கண்டு
> வந்தாய் நம்பி நீ

என்று பிற்காலத்தே எழுந்த பிரபுலிங்கலீலை கூறுவதுபோலக் கூத்தனும் பரிசில் பெறச் செல்லும் மற்றொருவனைக் கண்டபோது மகிழ்ந்து, 'என்னைப் பார்த்தலினாலே நீவிர் புறப்படுகின்றபொழுது

நுமக்குவரும் ஆக்கத்தை எதிர்கொண்டு நின்று நன் முகூர்த்தத்தோடு நன்னிமித்தத்தையும் உடையவராக இருந்தீர்', எனப் பாராட்டு கின்றான்.[24]

இங்ஙனம் புலவன் மற்றொரு புலவனை ஆற்றுப்படுத்தும் பொழுது, 'நன்னிமித்தம் பார்த்துப் போவாயாக!' என்று கூறுவதிலிருந்து அக்காலத்திய நிலையும் நன்கு புலனாகிறது.

## புள்ளும் பொழுதும் பழித்தல்

கழைதின் யானையார் என்னும் சங்கப் புலவர் வரையாது சுரக்கும் கொல்லிமலைத் தலைவனாகிய வல்லில் ஓரியைப் பாராட்டிப் பாடிய புறநானூற்றுப் பாடலில், இரவலர் புரவலரிடம் புள்ளும் பொழுதும் பார்த்துப் புறப்பட்ட செய்தியினைக் கூறுவர்.

இரவலர் பரிசில் பெறாதபோது தாம் நாடி வந்தவரைப் பழித்துப் பேசார். தாம்புறப்பட்ட நேரத்தையும் புள் நிமித்தத்தையுமே பழிப்பர். 'எனக்கு இல்லையெனினும் உன்னைப் புலவேன். வானம்போல வரையாது சுரக்கும் வள்ளியோய் நீ வாழி' என்று புறநானூற்றுப் புலவர் வாழ்த்துகின்ற காலத்திலும் நன்னிமித்தமும் தீ நிமித்தமுமே வெற்றிக்கும் தோல்விக்கும் காரணம் எனக்கருதும் உள்ள நிலையையும் உணரமுடிகிறது.

> **புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை**
> **உள்ளிச் சென்றோர்ப் பழியலர்[25]**

என்னும் பகுதி இதனை நன்கு தெளிவுறுத்தும்.

## விரிச்சிக் கேட்டல்

செருக்களம் சென்று வந்த செம்மல் மார்பிலே புண்பட்டு மயங்கிக் கிடக்கின்றான். பெருவீரம் தந்த வெற்றிப் பரிசிலான விழுப்புண்களால் அவனுடைய இறப்பு இன்றோ நாளையோ என வருந்தும் மகளிரின் துன்பநிலை, அந்நிலையிலும் அருள் நிறைந்த அவ்வறவோனைப் பார்க்கப் பாணனும், விறலியும் துடி கொட்டுவோனும் அவனகத்தின் புறத்தே காத்துக் கொண்டுள்ளனர். இந்நிலையில் தலைவி தீ நிமித்தங்களைக் கண்டு புலம்புகின்றாள்.

> **என்னை மார்பிற் புண்ணும் வெய்ய**
> **நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும்**
> **நெடுநகர் வரைப்பின் விளக்கும் நில்லா**
> **துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்**
> **அஞ்சுவரு குரலால் குரலும் தூற்றும்**

நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்
செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
என்ஆ குவிர்கொள் அளியிர் நுமக்கும்
இவண் உறை வாழ்க்கையோ அரிதே ......[26]

இப்பாடலில் தலைவி, நண்பகற்போதில் முரலாத தும்பிகள் அப்பொழுது ஒலித்தலையும், இல்லிலே ஏற்றி வைத்த விளக்கு நில்லாது அணைவதையும், உறங்காது பன்னாட்கள் அவனருகே இருந்த அவள் கண்கள் மூடுவதையும் அச்சத்தைத் தரும் கூகை கூவுவதையும் தீ நிமித்தங்களாகக் கருதிப் புலம்புகிறாள். நெல்லும் நீரும் எறிந்து விரிச்சி கேட்டு இவன் பிழைப்பான் என்று கூறிய செம்முது பெண்டிரின் சொல்லும், இந்நிமித்தங்களால் குறைபாடடைவதை அவள் வருந்திக் கூறுகிறாள். இறக்குந் தறுவாயில் துன்புறுவோர் பிழைக்கும்பொருட்டு நெல்லும் நீரும் எறிந்து முதுபெண்டிர் விரிச்சி கேட்கும் நிமித்தமும் வழக்கமும் அந்நாளில் இருந்தது என்பதும் இதனால் புலனாகுகிறது?

## கட்சியுள் காரி கலுழும்

பண்டைக்காலத்திய போர் முறைகளைக் கூறும், புறப்பொருள் வெண்பாமாலையிலும் இத்தகைய விரிச்சி கூறப்படுகிறது. பகைவர் நாட்டின்மீது போர் தொடுக்க விரும்பிய நெடிபடுகானத்து நீள்வேல் மறவர்கள் வெட்சிமாலையைச் சூடினர். உடனே பகைவர் நாட்டினது அழிவிற்கு அறிகுறியாகத் தீ நிமித்தமாகக் காரியென்னும் புள் ஒலியெழுப்பிய தாம். இதனை,

நெடிபடு கானத்து நீள்வேன் மறவர்
அடிபடுத் தாரதர் செல்வான் - துடிபடுத்த
வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
கட்சியுட் காரி கலுழும்

என்னும் பாடலால் நன்கறியலாம். மேலும்,

பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு
நண்பகலுங் கூகை நகும்[27]

என்றும் குறிப்பதனால் இயல்பாக இரவிலே கூவுகின்ற கோட்டான் நாட்டின் அழிவு கருதி, தீ நிமித்தமாகப் பகலிலே கூவுவதையும் இது உணர்த்தும்.

## ஓந்தியும் நன்னிமித்தமும்

ஓந்தி நன்னிமித்தத்திற்குரியது என்பதைக் குறுந்தொகைப் பாடலொன்று கூறும். பொருள்வயிற் பிரிவினால் தலைவனைப் பிரிந்த தலைவி தன் காதலன் பாலைநிலத்துச் சென்ற காட்சியினைக் கூறும்போது, 'தலைவன் கருக்கரிவாளைப் போன்ற முதுகையுடைய முதிய ஆண் ஓந்தியானது வழிச்செல்லும் மனிதர்கள் நிமித்தமாகக் கொள்ளும்படி தங்குகின்ற பாலை நிலத்திற் சென்றனர்' என்பதனால் ஓந்தி நன்னிமித்தம் காட்டுவது என்பது போதரும். [28]

**நாவிசிச் சிலியோந்தி தான்**
**வலமாயின் வழிப்பயண மாகை நன்றாம்** [29]

என்னும் பிற்காலத்திய அறப்பளீசுர சதகப் பாடலும் இதனை நன்கு வலியுறுத்தும்

## காக்கையும் நன்னிமித்தமும்

காக்கை கரைந்தால் விருந்து வரும் என்று எண்ணுகின்ற வழக்கம் தொன்று தொட்டு இருந்து வருகிறது. குறுந்தொகையில் காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடிய பாட்டு இதனை அறிவிக்கும்.

**விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே**[30]

என்பது அப்பாடல் தொடராகும். ஐங்குறுநூற்றிலும் காக்கை கரைவதை நன்னிமித்தமாகக் கொண்டமை காணப்படுகிறது. [31]

இத்தகைய நம்பிக்கையினை பறவைகள் பறப்பதையும் ஒலிப்பதையும் நிமித்தங்களாகக் - கருதியமையைப் பழந்தமிழரைப் போலப் பண்டைய கிரேக்கர்களும் உரோமனியர்களும் கொண்டிருந்தனர்.[32] பறவைகள் குறித்துப் பழந்தமிழர் கொண்டிருந்த நம்பிக்கையினை மார்க்கோ போலோவும் தம் பயணக் குறிப்பில் சுட்டியிருப்பதை இங்குக் கருதுதல் தகும்.[33]

## விலங்குகள்

விலங்குகளில் சில வழிமறித்து ஓடுமாயின் அவை தீ நிமித்தம் காட்டும் குறிகள் என நம்பினர். இன்றும் கூட கழுதை கத்துவது நல்ல நிமித்தாகவும், நாய் அழுகுரலெழுப்புவது தீ நிமித்தமாகவும், கருதப்படுகிறது. மான் வலமிருந்து இடமாகச் செல்லுதலும், இடமிருந்து வலமாகச் செல்லுதலும் முறையே நன்னிமித்த தீ நிமித்தக் குறிகளாகக் கருதப்பட்டன.[34] பூனை தன் முகத்தையோ காதினையோ கழுவிக் கொள்ளுதலை மழை வரும்

நிமித்தக் குறியாகப் பழங்காலத்திய மக்களும் நம்பினர்.[35] பழந்தமிழ் இலக்கியங்களில் நிமித்தம் கூறும் வகையில் பல்லியைப் பற்றியே மிகுதியாகக் காணப்படுகிறது. பல்லி ஒலிக்கும் இடத்தையும், அதன் ஒலியையும் கொண்டு நன்மை தீமைகளைக் கருதுவர்.

## பல்லியும் பலனும்

வினைமுற்றி மீண்ட தலைமகன் பேரார்வத்தோடு தலைவியிடம் செல்லுகின்றான். அப்போது தேர்ப்பாகனிடம் பின்வருமாறு உரையாடு கின்றான்: 'என் அன்பு வருகையினை எதிர்நோக்கி என் இல்லத் தலைவி இல்லத்தின்கண் நிமித்தம் கேட்டற்குரிய இடத்திலே நிற்கின்றாள். நினைந்து நினைந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து நன்னிமித்தத்தைக் குறிக்கும் பக்கத்திலே பல்லி சொல்லுந்தோறும் நின்று மகிழ்கின்றாள்.'

... பல் மாண்
ஓங்கிய நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோள்[36]

என்று அகநானூறு இதனை அழகுறக் கூறும்.

## பல்லியும் பன்றியும்

மாந்தர் நிமித்தம் பார்த்துச் செயலாற்றியதைப் போன்றே விலங்கினமும் நிமித்தம் பார்த்துச் செயலாற்றியதைக் கூறும் செய்தியும் சங்க இலக்கியத்தில் உண்டு.

முதிய மேட்டுக் கொல்லையில் தழைத்து விளங்கியது சிவந்த திணைப் பயிர். அப்பயிர்களின் கதிர்களைத் தின்ன விழைந்த பன்றி, பல்லி சொல்லும் நன்னிமித்தம் பார்த்துப் புறப்பட்டதாம்.

முதைச் சுவல் கலித்த மூரிச் செந்தினை
ஓங்கு வணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லி பாடோர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி[37]

என்னும் அகநானூற்றுப் பாடல் இதனை அழகுற உணர்த்தும். பொறி வைக்கும் வழிகளை உணர்ந்த பன்றிக் கூட்டம் அவ்வழிகளில் பயந்து பயந்து பார்த்துச் செல்வது இயற்கையாகும். இதனைப் பல்லியின் குரல் கேட்டுக் காட்டுப் பன்றி விளைபுனத்தில் நுழைவதாகக் கற்பனையாகக் கூறினர்.[38]

இதேபோன்று நற்றிணை (98) பாடலிலும் காட்டுப்பன்றி பல்லி சகுனம் பார்த்துப் பொறியில் மாட்டாது தப்பித்துக் கொண்டதாகக் கூறுவதும் கருதத்தக்கது. இவை கவிஞருடைய உயர்ந்த கற்பனையாயினும் அக்காலத்திய இயல்பினை அறிந்து கொள்ள ஏதுவாகிறது.

## பல்லியின் பெருமை

தலைவன் பிரிந்து சென்ற காட்டின் இயல்பைக் கூறவந்த தலைவி ஒருத்தி, 'செல்லுகின்ற வழிப்போக்கர்க்குமேல் வந்துறும் நிகழ்ச்சிகளை அறிவிக்கின்ற சிறிய செம்மையுடைய நாவினையும், மணியோசையைக் கேட்டாற் போன்ற தெளிந்த குரலையும், சோதிடம் கூறுகின்ற வாயினையுமுடைய பல்லிகளையுடைய காடு' என்கிறாள். இதனை அகநானூறு,

> **கள்ளி முள்ளழரப் பொருந்திச் செல்லுநர்க்கு**
> **உறுவது கூறுஞ் சிறுசெந் நாவின்**
> **மணியோர்த் தன்ன தெண்குரற்**
> **கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே**[39]

என்று கூறும். பல்லி நன்மையாயினும் தீமையாயினும் நடுநின்று கூறுதலின் 'செந்நா' என்று கூறினாள் போலும்.

## பல்லியும் பற்றுக்கோடும

ஆறுதல் கூறும் அன்பு மொழிகளே துன்பத்தில் வருந்துவோர்க்கு அருமையான அரவணைப்பாகும். அவையே அவர் தம் உயிரின் பற்றுக்கோடாகவும் அமையும். நோயுற்றுத் துடிக்கும் நோயாளர்க்கு மருந்தினும் மாமருந்தாய் அமைவன மருத்துவரும் மற்றையோரும் கூறும் உள்ளன்பு மொழிகளே ஆறுதலுரைகளே. அவையே அவர்களுக்கு உயிர்ப்பும் உணர்வும் தருவன. தலைவனைப் பிரிந்த தலைவிக்கோ வினைதீர்க்கும் மாமருந்தாய் அமைந்தது பல்லியின் நிமித்தமே.

ஒவ்வொரு நாளும் சுவரிலே வட்டங்கீறிப் பார்த்துப் பார்த்து எழுது சுவர் நனையுமளவுக்குக் கண்ணீர் விட்டு அழுதனள் தலைவி. அவ்வன்புடைத் தலைவியின் நலத்தை நினைந்து இரங்கித் தன் நெஞ்சிற்குச் சொல்லுகிறான் தலைவன்:

> **செய்குறி ஆழி வைகறோ றெண்ணி**
> **எழுதுசுவர் நனைந்த அழுதுவார் மழைக்கண்**
> **விலங்கிவீழ் அரிப்பனி பொலங்குழைத் தெறிப்பத்**

திருந்திழை முன்கை அணலசைத் தூன்றி
இருந்தனை மீது பொருந்துழிக் கிடக்கை
வருந்து தோட்பூசல் களையு மருந்தென
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுந் தொழுதுறைவி[40]

'பிரிவாற்றாது, வருந்துகின்ற தோளினது மெலிவைத் தீர்க்கும் மருந்து இது என்று நினைத்து, பல்லியின் சொல்லை நன்னிமித்தமாகக் கொண்டு, அது சொல்லுந்தொறும் தன்னைக் கை கூப்பித் தொழுது, அந்நிமித்தம் பற்றுக் கோடாக உயிர் வாழ்கிறாள் தலைவி' என்பது தலைவன் கூற்று. 'புள்ளுத் தொழுதுறைவி' என்னுந் தொடரால் அவளுடைய துன்பநிலையும் அவள் அந்நிமித்தத்தைப் பற்றுக் கோடாகக் கொண்ட உண்மை நிலையும் நன்கு விளங்கும்.

## பல்லியும் பாங்கொத்திசைத்தல்

தலைவன் தான் கடந்து செல்லவிருக்கும் காட்டின் இயல்பை முன்னரே கூறியிருந்தான். இல்லார்க்கு அருள் புரியப்பேனாரை அழித்துப் பொருள் தேடி. அப்பொருளால் புணர்ச்சி பெறுவேன் எனக் கூறிச் சென்றான் தலைவன். அவன் வாராததை எண்ணி மயங்கிய தலைவி அவன் அன்பு மொழிகளை நினைவில் கொண்டாள். "பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறும், அன்பு கொண்ட மடப்பிடியின் வருத்தத்தை மென் சிறகால் ஆற்றும் புறவும், இன்னிழல் இன்மையால் வருந்தும் மடப்பிணைக்குத் தன்னிழலைத் தந்தளிக்கும் கலைமானும் வாழ்கின்ற காட்டினைக் கடந்த நிலையிலுமா தலைவனுக்கு என் நினைவு வரவில்லை? அருளுணர்வினையும் அன்புணர்வினையும் காட்டும் அக்காட்சிகள் என்னை அவர்க்கு நினைவுறுத்துமே! என் அழகு நலம் கெடுமுன் அவர் வருதல் உறுதி! இதோ, பல்லியும் பாங்கொத்திசைத்தது! என் மையுண்கண்ணும் இடந்துடித்தது" என நிமித்தம் அறிந்து மகிழ்ந்தாளாம்.

இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லம் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணும் ஆடுமா லிடனே[41]

என்னும் கலித்தொகைப் பாடற் பகுதி காதல் நெஞ்சத்தின் கனிவையும் நன்னிமித்தமறிந்து மகிழும் நற்செய்தியையும் கூறும்.

பல்லி பாங்கொத்திசைக்கும் நிமித்தத்தை இன்னும் சில பாடல்களிலும் நாம் காணலாம்.[42]

## இமிலேறும் ஆட்டுமறிகளும்

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தினுள் இளங்கோ அடிகள், ஆய்ச்சியர் குரவையில் ஆனேற்றின் கண்களில் நீர் உருகுதலையும், ஆட்டுமறிகள் துள்ளி விளையாடாமையையும் தீ நிமித்தமாகக் கூறுவர். தாழியின் கண் வைத்த பால் உறையாமையையும், உறிக்கண் வைத்த வெண்ணெய் உருகாமையையும், பசுக்களின் கழுத்து மணிகள் அற்று நிலத்தில் வீழ்வதையும் குறிப்பிட்டு, இக்குறிகளால் வருவதோர் துன்பம் உண்டு என்பர். இதனை,

குடப்பால் உறையா குவியிமில் ஏற்றின்
மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு
உறிநறு வெண்ணெய் உருகா உருகும்
மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு
நான்முலை யாயம் நடுங்குபு நின்றிங்கு
மான்மணி விழும் வருவதொன் றுண்டு[43]

என்னும் பாடற் பகுதி நன்கு தெளிவுறுத்தும்.

## மாந்தர்

பறவைகள் விலங்குகள் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு நன்னிமித்தங்களும், தீ நிமித்தங்களும் தோன்றியன போலவே மாந்தரை அடியொற்றியும் நிமித்தங்கள் எழுந்தன. திருமணமான சுமங்கலியோ அல்லது கன்னிப் பெண்ணோ நீர்க்குடத்தை ஏந்திவருவது நல்லநிமித்தமாகக் கருதப்பட்டது.[44] ஆனால், சங்க இலக்கியங்களில் மாந்தர் எதிர்ப்படலை, அவர்தம் வரவையும் செலவையும் வைத்து நிமித்தம் காணும் மரபு காணப்படவில்லை. மாந்தர் பேசும் இயற்கையான பேச்சினையே நன்னிமித்தமாகக் கொண்டனர். இதனை 'நற்சொல் விரிச்சி' என்பர்.

## விரிச்சி

விரிச்சி என்பது நற்சொற் கேட்டலாம். அதாவது ஒன்று நன்றாமோ தீ தாமோ என்று அறிய விரும்புவார் ஊர்ப் புறத்தே சென்று, நெல்லும் மலரும் தூவித் தெய்வம் பரவி, அயலிலே உண்டாகும் ஏதிலார் சொல்லை ஓர்ந்து நிற்பர். அங்ஙனம் நின்ற காலை அயலில் எழும் சொல் தம் கருத்திற்கு இயைபுடையதாய வழி நன்றாம் என்றும் முரணியவழி தீதாம் என்றும் கொள்வர். இதனை,

அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை இனவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொகுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமா னோக்கி யாய்மகள்
நடுங்குசுவ லசைத்த கையன் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தா
இன்னே வருகுவர் தாயர் என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம் அதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள்[45]

எனவரும் முல்லைப்பாட்டுப் பகுதியில் இனிதுணரலாம்.

போர்புரிய விரும்பிய அரசர்கள் முதலில் பகைவரின் ஆநிரைகளைக் கைக் கொள்ளுவது வழக்கம். அப்போது வெற்றி கிடைக்குமா என்பதனை அவனுடைய படைவீரர்கள் அருகிலுள்ள பாக்கத்தில், மக்கள் பேசிக் கொண்டிருக்கும்போது, அவர்களறியாமல் சொற்கேட்கும் அளவில் நின்று, அவர்கள் கூறும் சொற்களை நிமித்தமாகக் கொள்ளுவர். இதனைத் தொல்காப்பியம் 'பாக்கத்து விரிச்சி'[46] என்றும் கூறும். புறப்பொருள் வெண்பா மாலையும்,

வேண்டிய பொருளின் விளைவு நன்கறிதற்கு
ஈண்டிருள் மாலைச் சொல் லோர்த்து[47]

என்று கூறுவதும் ஈண்டுக் கருதுதற்குரியதாம். 'விரும்பிய பொருளின் ஆக்கத்து அழகுணர்தற்குச் செறியும் இருண்ட மாலையிடத்து நற்சொற்கேட்டல்' என்பர் இதன் உரைகாரர்.

## குடக்கள் நீ கொண்டுவா

கணையஞ் சூழ்ந்த சிற்றூர். அங்கு மாலைக் காலத்தே முற்றத்திலே தினவெடுத்த தோளுடன் மறவர் கூட்டம் போருக்காகக் கூடியுள்ளனர். அதுபோழ்து வெளியே 'குடக்கள் நீ கொண்டுவா' என்னும் குரல் கேட்டது. அக்குரலே இவர்கட்கு நன்னிமித்தமாய் அமைந்ததாம். இவர்கட்கு வெற்றி உறுதி என்று பாடுகின்றார் புலவர்.

எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றி
குழுவினங் கைகூப்பி நிற்பத் - தொழுவிற்

குடக்கணீ கொண்டுவா வென்றான் குனிவிற்
தடக்கையாய் வென்றி தரும்

என்பது அப்பாடல், ‘குடக்கள் நீ கொண்டுவா’ என்னும் குரலோசையே இவர்களுக்கு வெற்றியோசையாயிற்று, வெற்றியைத் தரும் நிமித்தக் குறியாயிற்று.

இத்தகைய நம்பிக்கையினைப் பிறநாட்டாரும் கொண்டிருந்தனர். கிரேஸஸ் பாத்தியன்களுடன் போரிடப் புறப்படும்பொழுது துறைமுகத்தில் அத்திப் பழம் விற்பவன் கூறிய சொல் தீ நிமித்தமாகப்பட்டதைச் சான்றாகக் கூறலாம். [48]

## புள்ளும் விரிச்சியும்

இணைபிரியாது வாழ்ந்த இல்லறத் தலைமகனும் தலைவியும் பிரிய நேரிடுகிறது. தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துகிறாள், வாடுகிறாள், சுணங்கு பூத்த அணங்காகிறாள். எனவே, ‘வெற்றி பொருந்திய கொற்றவைக்குப் பலிக்கடனும் பூணோம், கைந்நூலும் கட்டோம்’ என்று வருந்திக் கூறுகிறாள்.

புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்
உள்ளது முள்ளா மன்றே தோழி[49]

என்று கூறுவதினின்று தலைவனைப் பிரிந்துறையும் மகளிர் காப்பு நூல் கையிற் கட்டி, நோன்பு பூண்டு புள்ளும் விரிச்சியும் கேட்பர் என்பது புலனாகும். தலைவியின் காதல் மாண்பும், அன்புடை நெஞ்சமும் இதனால் இனிதே புலனாகின்றன. புறத்திணையில் மட்டுமே யன்றி அகத்திணையிலும் இக்குறி கேட்கும் வழக்கம் இருந்ததும் நன்கு தெளிவாகும். இங்ஙனம் விரிச்சி கேட்டு நின்றதை நற்றிணையிலும், புறநானூற்றிலும் மேலும் காணலாம்.[50]

## பெண்ணியல் கூறும் நன்னிமித்தம்

மாந்தரின் உடலில் ஏற்படும் குறிகள் கண்டும் பழந்தமிழர் நிமித்தங்களைக் கருதினர். தலைவன் தலைவியினைப் பிரிந்தான், காலமும் நீண்டது. அவன் குறித்த பருவ வரவின் கண்ணும் வராமையினை எண்ணி, அவன் அன்புருவை நினைந்து வருந்துகின்றாள் தலைவி. அவள் மேனியியல்பை அறிந்த தோழி அவளை ஆற்றுவிக்கின்றாள். “வேந்துவிடு தொழிலின்கண் சென்ற தலைவன் வெற்றியுடன் முடித்து விரைந்து வருவதை நின் பெண்ணியல்பால் கண்டனன், கவலற்க’ என நிமித்தக் குறிகள் கூறி ஆற்றுவிக்கின்றாள். பெண்ணியல், கண்ணினாடல், தோள் இடம் துடித்தல், நுதலொளி சிறத்தல்

முதலிய பெண்பாற்கு உரிய குறிகள். 'பல்லாற்றாவன' என்பதற்குத் தலைமகனோடு உடன் சென்று மிண்டோர் கூறுவனவும் நன்னி நிமித்தமும் பிறவும் என்பர். 'காதற் கொழுநற்குளவாகும் நன்மை தீமைகள் மகளிர் மேனிக்கண் தோன்றும் சில குறிகளால் உணரப்படும் என்பது பற்றி, பெண்ணியல் காமர் சுடர் நுதல் விளங்கும் என்றாள்'[51] என்பர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள். இதனை,

> வேந்துவிடு விழுத்தொழி லெய்தி யேந்துகோட்
> டண்ணல் யானை யரசுவிடுத் தினியே
> எண்ணிய நாளகம் வருதல் பெண்ணியல்
> காமரு சுடர்நுதல் விளங்கும்
> தேமொழி யரிவை தெளிந்திசின் யானே[52]

என்னும் ஐங்குநுறூற்றுப் பாடல் அழகுற விளக்கும்.

## வளை செறிதல்

ஐங்குறுநூற்றில் தலைவன் வரைவு வேண்டிவிடத் தமர் மறத்துழி அதுகேட்டு ஆற்றாளாகிய தலைமகளுக்குத் தோழி தான் கண்ட நற்குறிகளைக் கூறி, தலைவன் விரைவில் வந்து உன்னை வரைவான், கவலற்க என ஆற்றுவிக்கின்றாள். அப்பொழுது அவள்,

> நுண்ணேர் புருவத்த கண்ணும் ஆடும்
> மயிர்வார் முன்கை வளையுஞ் செறூஉம்
> களிறுகோட் பிழைத்த கதஞ்சிறந் தெழுபுலி
> எழுதெரு மழையிற் குழுமும்
> பெருங்கன் னாடன் வருங்கொ லன்னாய்[53]

என்று கூறும் அழகிய செஞ்சொற் கவியில் நுண்ணேர் புருவத்த கண் துடித்தலையும், மயிர் ஒழுகிய முன்கையில் அணிந்த வளைகள் நெகிழாது செறிதலையும் நன்னிமித்தங்களாகக் கூறுகின்றாள். பெரும்பாலும் அகத்துறையில் உளவலியுடன், ஆற்றாது புலம்பும் தலைமகளுக்கு நன்னிமித்தக் குறிகளைக் கூறி, அவளை ஆற்றுவிப்பது தோழியின் அறிவாற்றலுக்குச் சான்றாகத் திகழ்வதோடு உளவியலறிவும், உலகியலறிவும் வாய்க்கப் பெற்றவளாகக் காட்டுகிறது. இங்ஙனம், வளை செறிதல் நன்னிமித்தம் என்பதைக் குறுந்தொகை கூறுவதும் கருதுதற்குரியது.

> சுரிவளை பொலிந்த தோளும் செற்றும்
> வருவர்கொல் வாழி தோழி[54]

என்பது அப்பாடற் பகுதியாகும். பெண்டிர்க்கு இடக்கண், இடது தோள் துடித்தல் நன்மையின் நிமித்தம் என்பதைக் கலித்தொகையும் கூறும்.[55] கண்ணகி கருங்கண்ணும் மாதவி செங்கண்ணும் இடமும் வலமும் துடித்த செய்தியினை இந்திரவிழவூரெடுத்த காதை இனிது கூறும். கண்ணகிக்குக் கோவலனின் கூட்ட முண்மையின் இடமும், மாதவிக்குப் பிரிவுண்மையின் வலமும் துடித்தன என்பர். [56] ஆயர் ஊதுகின்ற குழலோசை அன்புடைய கேள்வனை நமக்குத் தருகின்ற நன்னிமித்த ஓசை கூறுவதாகக் கலித்தொகை கூறும். [57]

## கனவு

பழந்தமிழர், கனவால் எதிர் காலத்தே நன்மையும் தீமையும் விளையும் என்று கருதினர். இத்தகைய கனவின் பயனை அறிவிக்கும் கனா நூல் ஒன்றும் அக்காலத்தே இருந்தாகச் சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லாருரையால் அறியலாம்.[58] கண்ணகி தான் கண்ட கனவைத் தேவந்தியிடம் உரைத்த பகுதியே கனாத்திறம் உரைத்த காதை. அடைக்கலக் காதையில் கோவலன் மாடலனிடமும், வழக்குரைகாதையில் பாண்டியன் மனைவி தன் தோழியிடமும் தான் கண்ட தீக்கனவைக் கூறினர்.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைப் புகழ்ந்து பாடும் கோவூர்கிழார், வளவனுடைய பகைவர்கள் துக்கனவைக் கண்டு அவனால் தமக்கு வரும் தீமை நோக்கிக் கலங்கியிருந்த செய்தியைப் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் கூறுவர்.[59]

இங்ஙனம், கனவுகள் எதிர்கால நிகழ்ச்சிகளைக் குறிக்கும் இயல்புடையன என்று பண்டுதொட்டே மக்கள் கருதினர். பண்டைய ரோமானிய நாட்டிலே ஜுலியஸ் சீசர் கொல்லப்படுவதற்கு முன்னே அவனுடைய மனைவி கல்பூர்னியா (Calpurnia) தீக்கனவுகள் கண்டு தன் கணவனை வெளிச்செல்லாது தடுத்ததாகக் கூறுவர். பிற்காலத்தும் அமெரிக்க நாட்டுக் குடியரசுத் தலைவர் ஆபிரகாம் லிங்கன் (Abraham Lincon) தமக்குக் கொலையால் சாவு நேரும் என்று முன்னமேயே கனவு மூலமாக அறிந்து தம் நாட்குறிப்புப் புத்தகத்தில் குறித்து வைத்திருந்தாராம். [60]

## விளக்கும் வெற்றியும்

இவைபோன்ற நிமித்தக் குறிகளேயன்றி கொழுந்து விட்டெரியும் 'ஒளிச் சுடரும்' நன்னிமித்தத்தைக் காட்டும் குறி எனப் புறப்பொருள் வெண்பாமாலை புகழ்கிறது.

சுழல்காற்று சூறாவளியாக வீசத் தானைப் படையினருக்கு நன்னிமித்தம் தோன்றுகிறதாம். பெருங்காற்று வீசிய போதும் வலமாகச் சுழன்றெழுந்து சோதி உயர்ந்து எரிகிறது. எனவே, விளக்கின் மிகுந்த ஒளி வேந்தற்கு வெல்நெறியைக் காட்டுகின்றதாம்.

அளப்பருங் கடற்றனையான்
விளக்குநிலை விரித்து ரைத்தன்று[61]

என்னும் கொளுவிற்கு ஏற்ப,

வளிதுரந்த கண்ணும் வலந்திரியாய் பொங்கி
ஒளிசிறந் தோங்கி வரலால் - அளிசிறந்து
நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு

என்னும் பாடலைச் சான்று காட்டுவர் புறப்பொருள் வெண்பா மாலையார்.

## ஊழ்மீது நம்பிக்கை

சங்ககால மக்கள் ஊழ்மீது நம்பிக்கை உடையவராக விளங்கினர். இதனை ஐங்குறுநூறு பாடல் கொண்டு அறியலாம்.

தலைமகள் உடன் போகிய வழி அவள் இளமை நினைந்து இரங்கித் தாய் இது ஊழ் காரணமாக நடந்தேறியது என்கிறாள்.

பல்ஊழ் நினைப்பினும் நல்லென்றுஊழ
மீளிமுன்பின் காளை காப்ப,
முடியகம் புகாக் கூந்தலள்
கடுவனும் அறியாக் காடிறந்தோளே[62]

"பலமுறை ஆராய்ந்தாலும் இந்த உடன் போக்கு நல்ல முறையே ஆகும் என எண்ணி, மீளி போன்ற வலையையுடைய காளையைப் போன்றவன் காவல் செய்ய, முடித்தற்குரிய நீளம் இல்லாத கூந்தலையுடையவளான என் மகள் குரங்குகளாலும் புகுந்தறியப்படாத காட்டைக் கடந்து போயினள். அவள் அறிவு இருந்தவாறு என்னே!" எனத் தாய் உரைத்தாள்.

பல்லூழ் என்பது பல முறை எனவும் நல் என்ற ஊழ் என்றது நல்லன என்ற ஊழையுடையனவான செய்கைகள் எனவும் பொருள்படும்.

**ஊழின்மீது நம்பிக்கை**

**அன்னை வாழி வேண்டன்னை – புன்னை**
**பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை**
**என்னை என்றும் யாமே இவ்வூர்**
**பிறிதொன்றாகக் கூறும்**
**ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே[63]**

அயலார் தலைமகளை மணந்து கொள்ள முயன்றனர். அப்போது தோழி செவிலித் தாய்க்கு 'அறத்தொடு நின்றாள்' இதில் ஊழ்ந்து மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை புலப்படுகிறது.

தோழி, "தாயே, இதை விரும்பிக் கேள். புன்னையின் பொன் நிறம் உடைய மலர்கள் எங்கும் பரந்து உதிர்ந்து கிடக்கும் துறையை உடையவன் தலைவன். அத்தகையவனை யாம் என்னை என்று சொன்னோமாக, இவ்வூரில் உள்ளவர் வேறொன்றாகக் கூறுவர். ஆதலால், ஊழ் அவ்வண்ணமும் ஆக்குமோ" என்று செவிலிக்குச் சொன்னாள்.

புன்னையின் மலர் பொன்னிறம் உடையது. ஆதலால் 'புன்னை பொன்நிறம் விரியும்' என்றார். பால் என்பது ஊழைக் குறிக்கும்.

யாமே துறைவனை என்னை என்றும் இதனால் தலைவன் மணந்து கொள்வதற்குரிய பிறப்பு குடிமை முதலியவை முறையாகக் கூறப்படும் ஒப்புமையுடையவன் என உணர்த்தியவாறு. ஆகவே, இஃது அறத்தொடு நிற்றல். இப்படித் தலைவனை அவன் வரவு குறித்துச் சொன்னோம். அதனை ஊரவர் அயலார் வரைவு என்று கூறுகின்றனர். முன்பு தலைவனுடன் கூட்டிய ஊழ் மீண்டு அவனொடு கூட்டும். இதினின்று தவறாது என்று எண்ணிக் கூறினாள்.

கூட்டுவித்த ஊழ் மீண்டும் கூட்டாது விடாது என்பர். கூடடுவித்தபடியே கூட்டாமல் ஊரவர் சொன்னபடி கூட்டின் வரும் துன்பத்துக்கு அஞ்சினான். அஞ்சி 'வாழிய பாலே' என்றாள். புன்னை பொன்னிறம் விரியும் என்றது தலைவனின் செல்வமிகுதி.

**நோன்பு இருத்தல்**

சங்ககால மக்கள் தவத்திலும் நோன்பிலும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

**அம்ம வாழி தோழி பாணன்**
**சூழ்கழி மருங்கின் நாள்இரை கொளீஇச்**

சினைக்கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
அருந்தவம் முயறல் ஆற்றா தேமே. [64]

தலைவி, “தோழியே, இதனைக் கேள். “சுற்றியுள்ள கழியில் வாழும் சினையுடன் கூடிய கயல் மீன்களைப் பாணன் தூண்டிற் கயிற்றால் இரைகொள்ளுமாறு செய்து பிடிக்கும் துறைவனின் நட்பைப் பிரியாது பெறுவதற்குரிய அரிய தவத்தைச் செய்திலேமாகலின் பிரிவுத் துன்பத்தைத் தாங்கி இங்கு உயிர் வாழ்வோம் ஆனோம்” என்று சொன்னாள்.

முள்மா முள்ளையுடைய விலங்கு அதாவது பன்றி. முளவு மா எனவும் வழங்கப்படும். வல்சி உணவு. எயினர் - வேடர். இளமா எயிற்றிக்கு இளமையும் அழகுமுடைய வேடர் மகளுக்கு அதாவது தலைவிக்கு.

சொல்லினென் இரக்குவென் - கூறி இரப்பேன். சொல்லினென் சொல்லி முற்றெச்சம் விரையாதீமே விரைய வேண்டா அவசரப்பட வேண்டா. வெள்வேல் விடலை வெண்மையான வேலையுடைய தலைவ. எயிற்றி விடலை பாலைநில மக்களின் பெயர்கள்.

விரையாதீமே விரையாதே விரைந்து செய்வதற்கு உரியது என்ற பொருள்பட நின்றது. நின்நிலை உடன் போக்கை விரும்பும் நின் உள்ள நிலைமை. இரத்தல் சம்மதித்தல்

ஏற்கனவே வெளிப்படை, குறிப்பு இருவகையாலும் வரைவு கடாய வழியும் ஏற்கனவே விரும்பி ஒழுகிய தலைவன் இப்போது உடன் போக்கை விரும்பி நிற்கின்றான் என்பதை உணர்த்த தோழி அதைத் தலைவிக்கு உரைத்து வருவதாகச் சொல்லிச் செல்கின்றாள். ஆதலால் “இளமா எயிற்றிக்கு நின்னிலை அறியச் சொல்லினென் இரக்குமளவை விரையாதிரு” என்று சொன்னாள்.

இரக்கும் அளவு : உடன் போக்கில் வழியில் ஏற்படும் துன்பம், உடன் போனபோது உண்டாகும் அலர், முதலியவை கூறி உடம்படுத்த வேண்டும். ஆதலால் அவள் ‘இரக்கும் அளவு’ என்றாள். நான் இரந்து தலைவியின் இசைவைப் பெற்று வரும் வரை, என்பது பொருள்.

தோழியிடம் தோன்ற வேண்டிய உடன் போக்கைத் தலைமகன் தானே நயந்து முற்படக் கூறுதலின் தோழி முன்னிலைக் கிளவியால் போக்கு உடன்படுதல் கூறலாயிற்று.

## தவமும் நோன்பும்

சங்ககால மக்கள் தவம் செய்வதிலும் நோன்பு இருப்பதிலும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

கணமா தொலைச்சித் தன்ஐயர் தந்த
நிணஊன் வல்சிப் படுபுள் ஒப்பும்
நலமாண் எயிற்றி போலப் பலமிகு
நன்னலம் நயவர வுடையை
என்நோற் றனையோ? மாவின் தளிரே[65]

தலைவன், "மாவின் தளிரே! கூட்டமான விலங்குகளைத் தொலைத்துத் தன் தமையன்மார்கொண்டு வந்த நிணமான் தசையுணவைக் கவர வருகின்ற பறவைகளை ஒட்டும் பெண்மை நலம் உடைய எயிற்றியைப்போல், பலவாய் மிக்க நலம் யாவரும் விரும்பும்படி பெற்றுள்ளாய்!

## நல்ல நிமித்தம் காணுதல்

தலைவன் மணம் பேசி சான்றோரை அனுப்பத் தலைவியின் சுற்றத்தார் மறுத்தனர். அதைக் கேட்டு, 'இஃது எப்படி முடியுமோ?' என்று வருந்திய தலைவிக்குத் தோழி தனக்கு நற்கறி செய்யக் கண்டு, 'விரைவில் வந்து மணந்து கொள்வான்' எனக் கூறுகிறாள்.

நுண்ணேர் புருவத்த கண்ணும் ஆடும்
மயிர்வார் முன்கை வளையும் செறூஉம்
களிறுகோள் பிழைத்த கதழ்சிறந் தெழுபுலி
எழுதரு மழையின் குழுமும்
பெருங்கல் நாடன் வருங்கொல் அன்னாய்.[66]

இப்பாடலின்படி தோழி தனது புருவத்தை உடைய இடக்கண் துடிக்கும். இடக்கண் துடித்தல் பெண்டிர்க்கு நன்னிமித்தம் மயிர் ஒழுக்கையுடைய முன்கை. நெகிழ்வு நீங்கிப் பொருந்தும்.

களிறு கொள்வதில் பிழைபட்ட புலி சினம் மிக்கு முழங்கும். மலை நாடன் எனக் கூறியதால், தம் சுற்றத்தார் மணந்து கொள்வதை மறுத்தமை அறிந்து கண் கலுழ்ந்து மேனி மெலிந்து ஆற்றாத தலைவிக்கு உள்ளுறையால் தலைவனின் ஆண்மைச் சிறப்பைச் சொல்லி ஆற்றுவிக்கலானாள். அவள் இடக்கண் துடித்தது கை வளை செறிந்தது என்பன நன்னிமித்தங்கள், எனவே இவற்றைப் புலப்படுத்தித் தலைவன் மணந்து கொள்வான் என்று தெளிவித்தாள். இது அக்காலத்தில் நிமித்தம் பார்க்கும் வழக்கத்தை எடுத்து இயம்புகிறது.

# குறிப்புகள்

1. அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, பக். 13.
2. Encyclopaedia of Religion and Ethics, Vol. IV. P. 775. Ed. By James Hastings, 1954.
3. நா.வானமாமலை, கலைகளின் தோற்றம் (கட்டுரை), ஆராய்ச்சி, மலர் 3, இதழ் 2, பக். 279.
4. பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், மண்ணியல் சிறுதேர் (மிருச்சகடிகம்) ப. 270, அன்னை நிலையம், 1969.
5. ப.அ.தாயம்மாள், சங்க இலக்கியத்தில் மூடநம்பிக்கை, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற இரண்டாவது கருத்தரங்குக் கட்டுரை, திருச்சி, சூன், 1970.
6. தொல். புறத். 30
7. தொல். அகத். 39
8. (சீவக. 216)
9. மலைபடுகடாம் 448, நச்சர். உரை.
10. புள்ளுப் போக்கில் சகுனம் பிணிமுகம் ஒள்ளிய பறவைக் கெல்லாம் பொதுப்பெயர் பதங்கமும் விகங்கமும் ஆகும் (சேந்தன் திவா. பக். 98)
11. புறம். வே. மா. 264
12. Subramania Pillai, G., Tree Worship and Ophiolatory, P. 78, Annamalai University, 1948.
13. தொல். புறத். 63
14. புன் காலுன்னஞ்சாய ............ பதிற்று. 40
15. பதிற்றுப்பத்து, 61
16. G.Subramania Pillai, Tree worship and ophiolatory. P. 80.
17. புறம் 41.
18. புறப். பொ. வெ. மா. 243
19. மேலது.
20. G.Subramania Pillai, Tree worship and Ophiolatory P. 81.
21. புறம், 130.

22. சீவக சிந்தாமணி, 420, 1849.

23. மலைபடு. 448

24. மேலது. 66.

25. புறம். 204

26. மேலது. 280

27. புறப். பொ. வெ. மா. 39

28. குறுந். 140

29. அறப்பளீசுர சதகம்

30. குறுந். 20

31. ஐங். 391.

32. S. Thaninayagam, Nature in Ancient Tamil Poetry P. 88, Tamil Literature Society, Tuticorin, 1953.

33. K.A.N.Sastri, Foreign Notices, P. 170.

34. R.E. Enthoven, The Folk-Lore of Bombay P.251. Oxford University Press, 1924.

35. Chambers Encyclopaedia, Vol. XIII, P. 295. George Newnes Ltd, London, 1950.

36. அகம். 9

37. மேலது 88

38. சாமி, பி.எல்., சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம். பக். 149. சைவ. சி. நூ. ப. கழகம், சென்னை, 1970.

39. அகம். 151

40. மேலது 351

41. கலித். 11

42. நற்றிணை, 246, அகநானூறு, 19, 381.

43. ஆய்ச்சியர் குரவை, உரைப்பாட்டு மடை

44. R.E.Enthoven, The Folk-Lore of Bombay, P. 215.

45. முல்லை பாட்டு, 7-18

46. தொல் பொருள். 58
47. புறப். பொ. வெ. மா. வெட்சி. 5
48. A Dictionary of Classical Antiquities, P. 433. Oskar Slyffert, George Allen and Unwin Ltd. London, 1957.
49. குறுந். 218
50. நற்றிணை, 40, புறம். 280.
51. ஐங். 466 விளக்கவுரை. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை உரை
52. ஐங். 466
53. மேலது. 218
54. குறுந். 260
55. கலித்தொகை, 101.
56. சிலம்பு. இந்திர. 235-239.
57. கலித்தொகை 101.
58. சிலம்பு. 15:95-106.
59. புறம். 41.
60. கலைக்களஞ்சியம், தொகுதி மூன்று, பக். 403.
61. பு. பொ. வெ. மா. 200
62. ஐங்., பா.374
63. மேலது, பா.110
64. மேலது, பா.111
65. மேலது, பா.365
66. மேலது, பா.218

# துணைநூற்பட்டியல்


சாமிநாதையர், உ.வே., சிலப்பதிகாரமும் மூலமும், அரும்பத உரையும், அடியார்க்கு நல்லார் உரையும், 1944.

சுப்பிரமணியன், ச.வே., சிலப்பதிகாரம் உரை, இரண்டாம் பதிப்பு, கங்கை புத்தக நிலையம், சென்னை, 2001.

…………, தொல்காப்பியம் தெளிவுரை, ஐந்தாம் பதிப்பு, மணிவாசகர் பதிப்பகம்,சென்னை, 2003.

…………, திருக்குறள் நயவுரை, (சுவடிபாட வேறுபாடுகளுடன்)

மெய்யப்பன் தமிழ் ஆய்வகம், சிதம்பரம், 2001.

இராமநாதன், ந., கவிஞரும் காதலும், முத்தமிழ் நூலகம், சென்னை, 1960.

இராமலிங்க சுவாமிகள்., திருஅருட்பா, இராமலிங்கர்பணி மன்றம், சென்னை.

இளங்கோ, சு., பாரதிதாசன் படைப்புக் கலை, அகரம், சிவகங்கை, 1984.

இறையனார், அகப்பொருள் உரை,கோவிந்தராஜ முதலியார், சென்னை, 1939.

கல்யாணசுந்தரம், திரு.வி., பெண்ணின் பெருமை,மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.

குமாரசாமி, பேரா சி.என். பெண்ணிய நோக்கில் பாரதி, தமிழ் புத்தகாலயம், மாசிலாமணி தெரு, தி.நகர், சென்னை 17.

சாமி நாதய்யர், உ.வே.(ப.ஆ), குறுந்தொகைமூலமும் உரையும், 1962.

…………, புறநானூறு - மூலமும் பழைய உரையும், 1971.

…………, ஐங்குறுநூறு, மூன்றாம் பதிப்பு, சென்னை, 1944.

சுயம்பு, பேரா.பெ., தமிழ் இலக்கிய வரலாறு, பாரதி பதிப்பகம், 113 ராஜிவ் நகர், திசையன்விளை, 2006.

சுப்பு ரெட்டியார், பேரா டாக்டர் ந.,அறிவியல் நோக்கில் **இலக்கியம்**, சமயம், தத்துவம், பழனியப்பா பிரதர்ஸ், 14. பீட்டர்ஸ் சாலை, சென்னை.

செல்லம் வே.தி., **தமிழக வரலாறும் பண்பாடும்**,மணிவாசகர் பதிப்பகம், பாரிமுனை, சென்னை, 2002.

செல்வநாயகம், வி., **தமிழ் இலக்கிய வரலாறு**, மூன்றாம் பதிப்பு, இலங்கை அச்சகம், யாழ்ப்பாணம், 1960.

ஜெகநாதன், இரா., **குறுந்தொகை ஆய்வுக் கோவை(3) தொகுதிகள்**, சங்க இலக்கிய ஆய்வு மையம்,மதுரை – 8, 2006.

சேதுபிள்ளை, ரா.பி. டாக்டர்., **தென்மொழிகளில் பழமொழிகள்**, சாம்ராஜ் பிரசுரம், சென்னை, 1963.

சோமசுந்தரனார், பொ.வே.(உ.ஆ), **அகநானூறு**, மறுபதிப்பு, கழகவெளியீடு, சென்னை, 1965.

........ , **கலித்தொகை**, கழகவெளியீடு, சென்னை, 1967.

........, **குறுந்தொகை**, மறுபதிப்பு, கழகவெளியீடு, சென்னை, 1978.

.............., **நற்றிணை**, மறுபதிப்பு, கழகவெளியீடு, சென்னை, 1976.

............, **பத்துப்பாட்டு**, மறுபதிப்பு, கழகவெளியீடு, சென்னை, 1976

............, **பரிபாடல்**, மறுபதிப்பு, கழகவெளியீடு, சென்னை, 1976

............, **மதுரைக்காஞ்சி**, கழகவெளியீடு, திருநெல்வேலி, 1965.

............, **ஐங்குநுறூறு**, மறுபதிப்பு, சென்னை, 1966.

சோமலெ, **தமிழ்நாட்டு மக்களின் மரபும், பண்பாடும்**, நேஷனல் புக் டிரஸ்ட், நியூடில்லி, 1975.

ஞானப்பிரகாசம், வி.மி., **தமிழ்ப் பண்பாடு பறவைகள்**, இன்னாசி, சூ., தமிழ் பண்பாட்டு மன்றம், சென்னை – 1991.

தமிழண்ணல்,அறவாணன்,க.ப,**முப்பத்தோராம் கருத்தரங்க ஆய்வுக் கோவை,**

சிலம்பு செல்வராசு,நா.,மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

தட்சிணாமூர்த்தி, அ., **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**, வெற்றி செல்வி வெளியீட்டகம், பூக்காரஅம்பலக்கார3-ம் தெரு, தஞ்சாவூர், 1973.

திரு.வி.க.,**முருகன் அல்லது அழகு**,பாரி நிலையம், சென்னை.

துரைசாமிப் பிள்ளை,ஔவை,சு, **பதிற்றுப்பத்து**,மறுபதிப்பு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968.

............, **புறநானூறு**,சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1970.

துறைவன், **வாழ்வியல் சிந்தனைகள்**, வானதி பதிப்பகம், சென்னை, 1986.

நாகராசன் முனைவர். வி (உ.ஆ), **குறுந்தொகை மூலமும் உரையும்**, நியூ செஞ்சூரி புக் ப்வுஸ் (பி) லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98, 2004.

நாராயண சாமி அய்யர், **நற்றிணை**, பின்னத்தூார், அ., நான்காம் பதிப்பு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1967.

பாரதியார், **பாரதியார் கவிதைகள்**, பூம்புகார் பிரசுரம், சென்னை, 1976.

............, **பாரதியார் கட்டுரைகள்**, பூம்புகார் பிரசுரம், சென்னை, 1988.

............, **பாரதியார் கதைகள்**, பூம்புகார் பிரசுரம், சென்னை, 1989.

பாரதிதாசன், **பாரதிதாசன் கவிதைகள்**,மணிவாசகர்பதிப்பகம், சென்னை.

பால சுப்பிரமணியன் டாக்டர் மு.பி.,இலக்கிய **நெஞ்சம்**,மாருதி பிரஸ்,173 – பீட்டர்ஸ் ரோடு, சென்னை – 14, 1989.

பிச்சமுத்து, ந., பாஞ்சாலி சபதம் ஒரு சமூக வரலாற்றுப்பார்வை, சக்தி வெளியீடு, சென்னை, 1994.

பிள்ளை, கே.கே.,தமிழக வரலாறும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை, 1975.

பெர்ட்ரண்ட் ரசல்., திருமண முறைகள்,1965.

மணி, பெ.சு.,சங்க கால ஔவையாரும் பெண்பாற் புலவர்களும்,பூங்கொடி பதிப்பகம், மயிலாப்பூர், சென்னை.

மாணிக்கம், முதறிஞர், வ.சுப., தமிழ்க்காதல், பாரிநிலையம், சென்னை, 1980.

மறைமலையடிகள்., தமிழர் மதம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி.

மணிவாசகர், திருவாசகம், தருமபுர ஆதீன வெளியீடு.

மணிவேல், மு., தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், அன்னை பதிப்பகம், மதுரை.

மீனாட்சி சுந்தரனார், தெ.பொ.,தமிழும் பிற பண்பாடும், நியூ செஞ்சுரி புக் அவுஸ், சென்னை, 1981.

முத்து கண்ணப்பன், தி., சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், சென்னை, 1978.

முத்துச்சண்முகம்., தமிழ் இலக்கியக் கோட்பாடுகள், நாரணம்மாள் பதிப்பகம், மதுரை, 1984.

ராஜம் கிருஷ்ணன்., காலந்தோறும் பெண், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி, 1994.

............, பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி, பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1983.

............, இந்திய சமுதாய வரலாற்றில் பெண்மை, 1995.

ராதா கிருஶ்ணன், ஐ.பி.எஸ்.தி, எங்கெங்கும் காணினும் சக்தியடா, கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தியாகராய நகர், சென்னை – 17, 2002

வரதராசனார்,மு., குறுந்தொகை விருந்து, பாரிநிலையம், 59-பிராட்வே, சென்னை – 1, 1956.

..........., குறுந்தொகைச் செல்வம், ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம், 7/40, கிழக்குச் செட்டி தெரு, சென்னை – 600 016.

விமலானந்தம்,மது.ச., தமிழ் இலக்கிய வரலாறு, அபிராமி பதிப்பகம், இராய புரம், சென்னை, 2002.

வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு, பாரி புத்தகப் பண்ணை,திருவல்லிக்கேணி,சென்னை, 1971.

வித்துவான் கோ. வில்வபதி, சங்க காலத் தமிழ் மக்கள் பண்பாடு, எம். எஸ். வேங்கடாச்சாரியார் வேங்கடராமா அண்டு கம்பெனி, சென்னை, 1956.

வேங்கடசாமி மயிலை சீனி., பழந்தமிழர் கடல் வாணிகம்,கழக வெளியீடு,

வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், மறுபதிப்பு, பாரிநிலையம், சென்னை, 1978.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை – 600 113

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–1) | 135.00 |
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி–2) | 140.00 |
| திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும் | 135.00 |
| பாணர் இனவரைவியல் | 110.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | 70.00 |
| உதயணகுமாரகாவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள் | 50.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–1) | 175.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி–2) | 200.00 |
| விடுதலைச் சிந்தனையாளர் வ.உ.சிதம்பரனார் தமிழியல் பண்புகள் | 80.00 |
| சுவடிப்பதிப்பு முன்னோடிகள் | 60.00 |
| திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும் | 75.00 |
| பெரியாரிய நோக்கில் மு.வ. | 55.00 |
| திணை வரலாறு | 70.00 |
| நரம்புக் கருவிகள் | 70.00 |
| மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் பன்முக ஆளுமை | 50.00 |
| சிந்தனைச்சிற்பி ம.சிங்காரவேலரும் தந்தைபெரியாரும் | 105.00 |
| பெ.நா.அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள்–தொகுதி–3 | 235.00 |
| கவிஞர் புதுவைச் சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள் | 120.00 |
| சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் ஓர் ஒப்பாய்வு | 105.00 |
| சேக்கிழாரும் இசைத்தமிழும் | 50.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| உலகச் செம்மொழிகள் | 90.00 |
| தலித் அறம் | 45.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர்ஆன் தமிழ் வாசிப்பும் | 45.00 |
| ஆய்வியல் சிந்தனை | 45,00 |
| சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல் | 80.00 |
| பெயரியல் | 55.00 |
| மதங்களும் மனிதநேயமும் | 90.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும் | 85.00 |
| சிலப்பதிகார இலக்கியக் கூட்டமைப்பு | 160.00 |
| பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதார சிந்தனைகள் | 65.00 |
| தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |

---

**753 பழந் தமிழரின் பழக்க வழக்கங்கள் 55.00**